Coronation Series No. I.

# THE PLEASURES OF CORONATION.

# முடிசூட்டு இன்பங்கள்.

இது

தன்னாடுநேசியால்

பெண்பிள்ளைகளும் வாசிக்கத்தக்க
எளிய நடையில் எழுதப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

[விலை அணா 12. போஸ்டேஜ் அணா 1½.]

October 1902.

# DEDICATED

TO THE

RYOT

OF

INDIA,

THE

SUBJECT OF THE BENIGN BRITISH RULE

BUT

POVERTY-STRICKEN

AND

NEGLECTED,

*in the hope that he may forget his misery for a time ever so short by a perusal of this little book, viz.,*

## THE PLEASURES

OF

## CORONATION

*of His Majesty King Edward VII of Great Britain and Ireland.*

# PREFACE.

The Land of the Tamil and the Telugu is unfortunate in not having a King of their own *nationality* as their Head Spiritual and Temporal, unlike their sister countries, Malayalam and Canarese. Nevertheless, we, the Tamil, in common with others, have a King at present in whom we have a Head ready to help the poor and the afflicted; and who, though an alien, has been ruling over us in the most liberal manner *possible*. Of such a King, the Solemn Ceremony of Coronation took place in the biggest City of London on the 9th August 1902. A. D.

Tamil Literature contains no work relating to the Coronation of any of our Kings of any time, either modern or ancient. Now that the Coronation of our most merciful and most liberal-minded Lord, King Edward VII (Edward I of the Tamil) of the English is over and more or less full information is available to the author about it, he has attempted a brief sketch of it in the following pages; so that, it may be read with interest by his countrymen in the country-side and

the Tamil and Zenana ladies who may not have had an opportunity to know what the Coronation of an English King is.

Both as a piece of *novelty* and of *religious reverence* among the Tamil, the Coronation of our King Edward VII is very interesting not only in the aggregate as the most auspicious event both to the King and to his subjects, but also in each and every one of its particulars viz., place, church, subject, object, robes, crown, chair, coach, horses &c., all of which are herein described in detail. So, the author has the pleasure to name his book *The Pleasures of Coronation* (முடிசூட்டு இன்பங்கள்).

While the names of the several chapters are indicated on the right-hand top of each page, the *inner* and *minor* heads of several *items of interest* are given prominently in big and broad types in their appropriate places; so that, the reader may, at a glance, be enabled to know what are the *items of interest* contained in a particular chapter.

Madras,
October 1902 } THE AUTHOR.

# முன்னுரை.



இந்தப்புஸ்தகம் கடந்த ஆகஸ்ட்மீ 9வ நடந்த எ-வது எட்வர்ட் ராஜனின் முடிசூட்டைப்பற்றிச் சொல்லிய கதை. இதில் லண்டன்மாநகரம், அங்கே முடிசூட்டுநடந்த வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயில், இராஜன் பிணி, முடிசூட்டுச்சடங்கு, முடிசூட்டுக்கலியாணம், முடிசூட்டு உடுப்புக்கள், முடிசூட்டுக் கிரீடங்கள் முதலிய முடிசூட்டுச் சாமான்கள் ஆகிய பலவற்றைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. முடிசூட்டுக் குதிரைகள், வண்டிகள், பொருட்காட்சி முதலியவைகளும் விவரமாய்க் காணலாம். இந்தப் புஸ்தகத்தை வாசிப்போர்கள் இங்கிலாண்டுக்குத் தாமே நேரில் போய் இந்த முடிசூட்டைக் கண்ணாரப்பார்த்தாற் போலிருக்கும்; வெகுஇன்பமாயிருக்கும்; ஆகவே, இந்தப்புஸ்தகத்திற்கு முடிசூட்டு இன்பங்களென்று பேர் வைக்கப்பட்டது.

இந்தப் புஸ்தகம் நாட்டுப்புறங்களில் இருக்கும் ஆங்கிலேயம்படிக்காதஜனங்களுக்கும், தமிழ ஸ்திரீகளுக்கும் உபயோகமாகும்; ஏனென்றால், இந்தச் சங்கதிகள் ஐரோப்பியப் பத்திரிகைகளில் தோன்றினபோதிலும் நம்தமிழ்நாட்டுப்பத்திரிகைகளில் அநேகமாய்க் காணப்படவேயில்லை.

சென்னை,
சுபகிருதுஹு
புரட்டாசிமீ.

 தன்னுடுநேசி.

# முடிசூட்டு இன்பங்கள்.

## 1-வது இன்பம்.

## லண்டன்மாநகரம்.

இங்கிலாண்டின்மீது அரசுகைகொண்ட அந்நிய ஜாதியாரொருவன் (Heone), "ஒரு தத்துவ வாதியாய், வேதாந்தியா யிருக்கப்பட்டவன் லண்டனுக்குப் போகக்கூடாது. அவன் நிஜமான கவியாயிருந்தாலோ சர்வதேவ, கொஞ்சங்கூட லண்டனுக்குப் போகக்கூடாது: அந்த மகா பட்டணத்தில் எல்லாம் பிரமாதமா யிருக்கும்; எல்லாம் ஏக ராசியாயிருக்கும், வேற்றுமை வேறுபாடு என்பதிராது; கடியாரம் போகிறாப் போல, எல்லாரும் ஒரே உழைப்பாய் உழைத்துக் கொண்டிருப்பார்கள், ஒருவனாவது சோம்பேறியாய்இருக்கமாட்டான்; சந்தோஷமாய்இருக்கிறவனுடைய மூஞ்சிகூட கடுகடுத்து வக்கையெடுத்துப்போயிருக்கும்; இவற்றையெல்லாம் அந்தத் தத்துவ வாதியாவது, வேதாந்தியாவது, அல்லது கவியாவது பார்த்தால் அவனுடைய இருதயம் பிளந்துபோகும்; அவர்களுக்கு இப்படிப்பட்ட அக்கம்பக்க மிருக்கக்கூடாது" என்று சொன்

ளுன். இப்படிச்சொன்னது நம்மைப்போன்றசாதா ரணமானவர்களுக்கு இவன் ஒரு பொருமையுடன் சொன்னதாகத் தெரிகிறது; இவனுக்கு லண்டன் மேலிருக்கும் பொருமையை அடக்க முடியாமல் இப்படிச் சொன்னதாகவும் தெரிகிறது. காரைச் சாந்து போட்டுத் தளவரிசை கட்டப்பட்ட நாற்சந்திகள் (spuares), நெடுக ஒரே வரிசை யாய்க் காணப்படும் ஒட்டுகள் (terraces) இவற் றை ஒரு அந்நியன் பார்த்துப் பல்லைக் கடித்துப் பொருமைப் படுகிறான்; அவற்றை இவன் யாது செய்யக்கூடும்? நாற்சந்திகளோ, அந்த மகா பட்டணத்தில் குவிந்துகிடக்கும் சம்பத்துகள் இவ்வளவென்று காட்டுகின்றன; வரிசை வரிசை யாய்த் தோன்றும் ஒட்டுகளோ யாதொரு விஷயத்திலும் சலனப்படாத சனங்கள் அந்த மகா பட்டணத்தி லிருக்கிறார்களென்று காட்டு கின்றன; இப்படியெல்லாம் கண்ணுக்கும் மன துக்கும் தோன்றும்போது அந்த அந்நியனுக்கு எங்கு மில்லாத ஆத்திரமும் பொருமையும் பொங்குகின்றன. அன்றி, மேற்சொல்லப்பட்ட சாதாரணமான மனுஷியன் யார் யார்க்குக் கை யால் களிமண்ணைத் தொட்டாற்போல யாதொரு பயனுமற்றவனாய்க் காணப்படுகிறானே, மேற் சொல்லப்பட்ட ஒட்டு வரிசைகளெல்லாம் யார் யார்க்கு வெகு பிரம்மானந்தமான ஜம்பமாய் இருக்கின்றனவோ அவர்கள் யாவரும் தமக்கும் தம்மைப்போன்றவர்க்கும் லண்டனில் உண்டாகும் ஆசாபாசத்தைப் பண் படுத்திப் பாடுகிறார்கள்

அவ்வாசாபாசத்தால் வெகு குதூகலப் படுகிறார்கள்; தோள் கொட்டித் தொடை தட்டுகிறார்கள். லண்டன் மாநகரமானது ஒரு கடலின் வாயில் இருக்கிறது ; உலகத்தின் வியாபாரத்துக் கெல்லாம் மத்தியம்; ஒரு வேடிக்கையை எல்லார் மனதிலும் போட்டும்படியான மத்தியம்; வசந்தகாலத்தில் சூரியாஸ்தமான வேளையில் பொன் நிறம் வாய்ந்த மகிமை தங்கியது, அவ்வேளையில் புறப்படும் செவ்வானம் அவ்வளவு நேர்த்தியானது! லண்டன் மகாபட்டணமிருக்கும் நதியைப்பார்த்தால் எந்நாளும் மறக்காத கதைகள் ஞாபகத்துக்கு வருகின்றன; கார்த்திகை மாசத்தில் உண்டாகும் சந்திவேளை வெளிச்சமானது (Twilight) அம்மாநகரத்துச் சந்து பொந்துகளில் விழும் போது, ஏதோ ஒரு மாயை வந்து அங்கு போவாரைக் கவிந்துகொண்டு மயக்கிவிடுகிறாப்போலிருக்கிறது. இப்படிப்பட்ட காட்சிகளை யெல்லாம் பார்த்தவர்கள் யாராயிருந்தாலும் முதல் முதல் மயங்கிப்போகிறார்கள்; ஆனந்தக்கூத்து கூத்தாடுகிறார்கள்.

இருக்க இருக்கத்தான், லண்டன்மகா பட்டணத்தோடு பழகப்பழகத்தான், ஒருவன் அதைத்தான் முதல்முதல் பார்த்தபோது பிரம்மானந்தப்பட்ட லண்டனா என்று என்று நினைக்கிறான். இப்படிச் சர்வ ஜனங்களும் முதல் முதல் ஏமாந்து போகிறார்கள். இந்த லண்டனால், உலகத்துப் பணலாவா தேவி நடக்கவில்லை; மேற்குப் பக்கமாய்க் கிடக்கும் நாற்சந்திகளும், உய்யான வனங்களும்,

தோட்டந் துறவுகளும், இன்னும் சுகமும் இன்ப
மும் அனுபவிக்கத்தக்க இடங்களுமேயன்று
லண்டனென்பது: ஆனால், இதெல்லாமென்ன
பின்னை? கங்குகரையில்லாமல்உளைமயமாய்க்கிடக்
கும் ஒரு பிரதேசத்தில் ஒரு சிறு குளம் காணப்
பட்டால் எப்படியோ அப்படி. இதெல்லாம் லண்
டனிலிருக்கும் சாரமன்று; லண்டனுள் சாரம்
வேறேயிருக்கிறது; ஒருவனுக்குச் சுகமனுபவிக்க
வேண்டுமானால் லண்டனில் என்ன இருக்கிறது?
அது வியன்னாவில் (Vienna) கிடைக்கும்; செல்
வம் பார்க்கவேண்டுமானால், லண்டனில் ஒன்று
மில்லை, அமெரிக்கா ஐக்கிய நாட்டின் பெரிய
பட்டணத்தில் (நியூயார்க்) இருக்கிறது; சித்திர
வேலையும் நேர்த்தியான வித்தைகளும் சித்திர
வித்தைகளும் படிப்பும் நடந்துவருகிற ஊரைப்
பார்க்கவேண்டுமானால், நாம் பிரான்சுதேசத்து
அல்லது சீனதேசத்துப் பெரிய பட்டணத்துக்
கும் போகவேண்டும்; இதெல்லாம் லண்டனில்
நாம் பார்க்கவே முடியாது. லண்டன் வெறு
மனே ஒரு நிராகாரமான வஸ்து; அதுக்கொரு
உருவமுமில்லை, அதில் ஒரு ஒழுங்குமில்லை; அதில்
62½-லட்சம்ஜனங்கள் ஒருமொத்தையாய் அடைந்
து கிடக்கிறார்கள்; ஏறக்குறைய எல்லாரும் சிறு
வர்களாயே யிருக்கிறார்கள்; இந்தமொத்தையெல்
லாம் முழுவதும் ஒரே தன்மையானது; அதா
வது, அதன் குடிகள் நகரவாசி யென்னும் பே
ரெடுத்த தன்மை யுள்ளது. அதன் சனங்கள்
கிராமங்களில் போய் வசிக்க இஷ்டமில்லாத தன்

மையுள்ளது, அதன் சனங்கள் தம் தேசத்தில் அநேகாயிரம் கிராமங்களைவிட்டு நகரவாசம் பண்ணவந்த தன்மையுள்ளது; இந்தத் தன்மை இப்பூமண்டலத்தில் ஒரு அற்புதந்தான். இந்த 62½ லட்சம் குடிகளும் கசகச வென்று ஜனங்கள் கூடிய கூட்டத்தி லிருந்தும், நெருக்கமாய்க் குடிகள் வசிக்கும் தெருக்களிலிருந்தும் பக்கத்திருப்பவர் நாசிக்கு வழியாயாவது, காலிடுக்கு வழியாயாவது எழும்பி எழும்பி அல்லது குனிந்து குனிந்து சப்தலோகத்தையும் பார்ப்பதுபோல வெளிலோகத்தாரை உற்றுப் பார்க்கிறார்கள். இப்படிப் பார்த்துக்கொண்டே அந்த மகா பட்டணத்தின்மேல் வெண்ணாயுத் தோல் போல் மூடிப் படர்ந்துபோயிருக்கிறார்கள்; அந்தப் பட்டணம் உயிர்த்துப்பெயரும் போதெல்லாம் தாமும் உயிர்த்துப் பெயர்கிறார்கள். சில்லரைக் கவிகள் லண்டன் மாநகரத்தின் பெருமையையும் மகிமையையும் பார்த்து உடம்பு காய்ந்து ஆனந்தப்பட்டிருக்கும்போது, அதிலிருக்கும்குடிகளுக்குப் பிழைப்பு எவ்விதம் நடக்கிறது என்ற ஞாபகம் அக்கவிக்குவருகிறது அப்போது, தன் தேகம ஆனந்தத்தால் சுரம் போலக் காய்ந்து கொண்டிருந்தது க்ஷணமாத்ரத் திடீரென்று குளிர்ந்துபோய் விடுகிறது.

அப்படியாயின், இந்தமாதிரி ஒரு நூற்றாண்டாய் அக்கம்பக்கத்தில் நாட்டுப்புறங்களின் உயிரைப்பிழிந்து இரத்தத்தைக்குடித்து, விஷப்ரயோசனமானவை யாவும் சேர்த்து ஒரு மொத்தை

யாயிருக்கிற இந்த லண்டன்மாநகரம் என்பது என்ன? அதற்குள்ள மதிப்பு இன்னதென்று ஒரு விதமாய்க் கண்டறிய முயலுவோம்: அது இந்த மாதிரி உயிரைப் பிழியத்தொடங்கி இப்போது 3-அல்லது, 4-தலைமுறையாயிற் றென்னலாம். அதற்குள்ளே, தனக்குற்ற வயிற்றுப் பாட்டால் காலும நசுங்கி நண்டபிண்டலாய் அடிபட்டு உபயோகமற்று நிற்கின்றது. லண்டனைப் பார்ப்போர அதன் மதிப்பைக் கணக்கிட முயன்றும் ஈடேற விலலை:—ஒருவர் (G. W. Steevens) அந்த வேலையைத் தம் மேற்போட்டுக்கொண்டு முடிக்கப் பார்த்தார்; லண்டன் மாநகரத்தில் குறுக்கும நெடுக்குமாய் நடந்து பார்த்தார்; தென் வடக்காய் நடந்து பார்த்தார்; கிழமேற்காய் நடந்து பார்த்தார்; அதன் சந்தைகளைக் கணக்கிட்டார்; அதன் ஆகாராதிகளைக் கணக்கிட்டார்; அதன் சாக்கடையைக் கணக்கிட்டார்; ஒருவிதத்தாலும அதன் மதிப்பு தெரிந்துகொள்ள முடியவில்லை. இன்னொருவரும் இப்படியே ஆரம்பித்தார். தமக்குச் சிலபேர்களை உதவியாகக் கொண்டார்; உதவியாகக் கொண்டு எழுதத் தொடங்கினார்; 10 - புஸ்தகங்கள் (Volumes) எழுதியாயின; அவற்றில் குடிகளின் வாழ்க்கையையும் தொழிலையும் பற்றி எழுதினார். குடிகளை அப்படி வகுத்துப் பேசினார், குடிகளை இப்படி வகுத்துப் பேசினார், பலவிதமாய்ப் பேசினார்; லண்டன் படத்தில் ஒரு பக்கம் பச்சை வர்ணம் போட்டார், ஒரு இடத்தில் மஞ்சள் வர்ணம் போட்டார், ஒரு

இடத்தில் சிவப்பு வர்ணம் கொடுத்தார்; இந்த மாதிரி எழுதியும் போட்டும் தன் வேலை முடிய வில்லை; என்ன வர்ணம் போட்டாலும், போடப் போட மனதில் குழப்பம் அதிகரித்ததேயன்றி, லண்டன் மதிப்பின் ஒரு கோடி (end) யாவது காணப்படவில்லை; லண்டனில் குடிகள் கூடிக் கிடப்பதைப் பற்றிக் கணக்குகள் பார்த்தார்; குடிக்கிற குடியைப்பற்றிக் கணக்குப்போட்டார்; ஏழைத் தனத்தைப் பற்றிக் கணக்குகள் குறித் தார்; அங்கே நடக்கும் குற்றங்களைப் பற்றிக் கணக்குகள் எடுத்துப் பார்த்தார். எந்தக் கணக் கும் ஏதோ தலைகாலில்லாத ஒரு கதைபோலக் காணப்பட்டது. ஆகையால், எப்போதுதான் இந்த லண்டனாகிய புதிருக்கு அர்த்தம் பிரிப்பார் யார் வருவாரோ? தெரியவில்லை; மயங்கித் தயங் கும்படியாயிருக்கிறது.

ஆனாலும், இந்த லண்டனைப்பற்றிச் சங்கதி கள் ஏதாவது தெரிந்துகொள்ளவேண்டுமென் றால், வெகு சுலபம்! அங்கே ஒருவன் குணத் தைப் பார்த்தால் எல்லார் குணத்தையும் பார்த் தறிந்தாற்போலத்தான். ஒரு பானைச் சோற் றுக்கு ஒரு பருக்கைதான் பதம் என்பதுபோல ஆயிற்று; ஆயினும், அந்தப் பருக்கையைக் கண்டுபிடிப்பதுதான் கஷ்டம்; அது கண்டுபிடித் தால் பிற்பாடு எல்லாம் சுலபம். பட்டணத்தைப் பார்த்தாலோ எங்கும் ஒரே மாதிரியாய்த்தானி ருக்கிறது: ஓரிடத்தைப் பார்த்தால், மற்றொரு இடமும் பார்க்கத்தேவையில்லை. அதேமாதிரித்

தெரு; அதேமாதிரியான குடிகள், அதேமாதிரியான பிழைப்புகள்; குடிகள் பிழைக்க வழியில்லாமல் கூட்டங்கூடித் திக்குமுக்காடிப் போகிறார்கள். நீங்கள் குழிப்பாதை வண்டியில் (Tram-cars) ஏறிப்போனால், அது மெல்ல மெல்ல எருமைக்கடாவும் செல்லூர் பாடும் போவதுபோலப் போகும்; அது நிற்கும் முட்டிகள் (station) யாவும், குடிக்கும் மாளிகைகளண்டைதானிருக்கும்; அக்குடிமாளிகைகள் (Gin-palaces) அநாமதேயமான பேட்டைகளில்தானிருக்கும் (Suburbs); அம்மாளிகை ஒவ்வொன்றும் லண்டனில் பல பிரதேசங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு அறிகுறியாய் நிற்கின்றது: அதாவது, ஒருமாளிகை தாண்டினவுடன் வேறே பிரதேசம் வருமென்று லண்டனை யறியாத ஒருவன் அம்மாளிகையால் தெரிந்து கொள்ளலாம். இந்தமாளிகைக்குள்ள பேர்களோ மகா பிரமாதமாயிருக்கும்; ஆனால், அவ்வளவுக்கவ்வளவு, லண்டனுக்கு நம்மைப்போல் புதியவனைப்போன அந்நியன் ஒருவன் ஏமாந்து மோசம் போவான். இந்தமாளிகைகளில் உள்ளே போனால், உள்ளிருக்கும் பதார்த்தங்கள் யாவும் எந்த மாளிகையிலும் ஒரேமாதிரியாய்த்தானிருக்கும்; அம்மாளிகைகள் கட்டப்பட்ட விதம் நேரும் கூறுமாயிராது, கலாமலா என்று என்னமோ குழம்பிக் கிடப்பதுபோலிருக்கும்; அதில் உள் வாழ்பவர்கள் வாழ்க்கை கொஞ்சமேனும் ருசிக்காது:—சராசரி ‘இரண்டு மாடியுள்ள கட்டடங்களால், “தலைகால் தெரியாத ஒரு ஊர்(Labyrinth)

கட்டிவையுங்கள்; அந்த ஊரில் கோயில் என்ன, வாசிக்கடை (school) என்ன, வெவ்வேறான அழகு குலைந்த சிறுசிறு துண்டுவிடுதிகளென்ன ஆகிய இவைகள் யாவும் அமைத்து வையுங்கள்; அவற்றுள் தொழிலாளிகளைக் கொண்டமட்டு மடைத்துவையுங்கள்; அந்தஊருக்கு ஏதோ ஒரு பேரைத் தலையில் எழுதி யொட்டி வையுங்கள்; அப்போது அதற்குண்டான பெருமை பாருங்கள்! இந்த மேலேழு லோகம் கீழேழு லோகம் எல்லாவற்றையும் மயக்காதென்று நினைக்கிறீர்களா? லண்டனின் முக்கியமானபாகம் இப்படித்தானிருக்கும்.

இந்தமாதிரியான பிரதேசத்துக்குவெளியே, அப்படம்(Pure)லண்ட னென்று சொல்லப்பட்ட இடத்துக்குப் போனால் அங்கே குடிகளின் உயிர் வாழ்க்கைவெகுகடைப்பட்டிருக்கப்பார்க்கலாம். ஏனென்றால், இந்த இடமானது இந்த லண்டனாகிய மகாபட்டணத்துக்குமார்க்குலைபோன்றமேற்சொல்லப்பட்ட பிரதான ஸ்தானத்துக்கு வெகுதூரத்திலிருக்கிறது; ஆகையால் அந்த மார்க்குலையான இடத்தைக் காட்டிலும் அது அதிக அநாமதேயமாய்க் கிடக்கிறது; அதில் குடிகள் சேற்றில் அகப்பட்ட மனிதன் போல உயிர் பிழைக்கத்தத்தளிக்கிறார்கள். இந்த மகா பட்டணமானது ஒரு பக்கத்தில், கர்ப்பத்தில் தரித்து நிற்காமல் பதமான காலத்துக்கு முன்னேயே பூமியில் விழுந்த குழந்தை போல யாதொரு சுகத்தையும் அநுபவிக்க யோக்கியதை யில்லாது தனியே

கிடத்தப்பட்டு நிற்கும் பேட்டைகளாய்ப் பரவிக் கிடக்கின்றது; இப்பேட்டைகளில் வெகு தாழ்வான குடிசைகள்தான் இருக்கும்; இக்குடிசைகள் ஆட்டு மந்தையில் ஆடுகள் போலக் கூடிப்பரவிக் கிடக்கும். இவற்றில் தொழிலாளிகள் தவிர வேறே எவரு மிருக்கமாட்டார்கள்; இக்குடிசைகள் அங்கங்கே துட்டுக் துட்டாயிப் (block) பல பல வெளிகளாகப்(district i.e.,பிரதேசங்கள்)பிரிந்து போகின்றன; இந்த வெளிகள் மேற் சொல்லப்பட்ட மார்க்குலேபோன்ற பிரதானஸ்தானத்துக்கு வெகுதூரத்தில் கிடக்கின்றன; இந்தப் பிரதான ஸ்தானத்திலேதான் குடிகளுக்குப் பிழைப்புண்டு; ஆகையால், அக்குடிசைகள் அத்தொழிலாளிகள் ஒரு வேலையுமற்று வீணே தூங்கிக் காலங் கழிக்குமிடங்களே யன்றி யாதொரு சுறுசுறுப்பும் காட்டும்படியான இடங்களன்று. அந்தப் பிழைப்புள்ள இடத்துக்கு இத்தொழிலாளி போகவேண்டுமென்றால் விடிகிறதற்கு வெகு நாழிகை முன்னுமேலயே தூக்கத்தை விட்டு எழுந்திருக்கவேண்டும்; இப்படி எழுந்திருந்தது முதல் தான் வேலையில்புகுந்து வேலையைமுடித்து மறுபடியும் வீடுதிரும்புகிற வரையில் உள்ள வெறுங் காலம், அதாவது வேலை வெட்டி ஒன்றுஞ் செய்யாத காலம் எப்படிக் கழிகிற தென்றால்: இருப்புப்பாதை வண்டிகள் அல்லது குழிப்பாதை வண்டிகள் நிற்கும் வண்டிமுட்டிகளுககு (stations) அவசர அவசரமாய் நடந்துபோவதிலும்; அங்கே போனால் அவ்வண்டியில் தாளுட்கார இடம்

வேண்டிச் சண்டைபோடுவதிலும்; பிழைப்பிடத்துக்கு நடுவழியெல்லாம் வெகு நேரம் நாற்றமடிக்க அவ்வண்டியில் பயணம் போவதிலும்; அப்பிழைப் பிடத்துக்குப் போய்க் காக்காய் வேப்பம் பழத்தை விழுங்குவதுபோலத் தான் தீனியை மென்று தின்னச் சவகாச மில்லாமல் அவசர அவசரமாய் விழுங்குவதிலும்; தூக்கத்தைக் கெடுத்துக் கொள்வதிலும்; மறுபடியும் மாலைப் பொழுதில் மேற் சொன்னபடி வீடுவந்து சேர்வதிலும் கழிகிறது. இப்படியிருக்க இவனுக்குச் சுகமெங்கே? என்றென்றைக்கும் ஒரே பிழைப்புத்தான்.

இந்த லண்டனில் இரண்டுவித முண்டு: அப்படப லண்டன் கௌன்ட்டியென்றும்(London County) லண்டன் மகா பட்டணம் என்றும் (greater London). முதலாவது லண்டன் 4, 506, 063. பேர் குடித் தொகையுள்ளது; இரண்டாவது லண்டனில் 6,580,616 பேர்கள் குடிகள் உண்டு. இதுவரையில் சொன்ன தெல்லாம் இந்த இரண்டாவதைத் தான்.

இந்தமாதிரி, மகாசனங்கள் அடர்ந்த இந்த மகாபட்டணத்தில் வாழுங்குடிகள் என்ன மாயிருக்க வேண்டும்? அந்த மகாபட்டணத்தை ஒரு சந்தையென்றேசொல்லவேண்டும்; அந்தச்சந்தையில் குடிவாழும் குடிகளின் கூட்டம் சந்தைக்கு வந்த கூட்டமாகவேதோன்றுது; வெகு ஒழுங்காய் நடந்து கொள்வார்கள்; வெகு சுளியுமாயி

ருப்பார்கள்; வெகு பரோபகாரிகளா யிருப்பார்கள்; இந்தக் குணங்கள் நாளுக்கு நாள் விருத்தியாய்க்கொண் டிருக்கின்றனவேயன்றி க்ஷீணிக்கவில்லை. ஒவ்வொருத்தனும்பிறர்க்குதவியாய்இருக்கிறானேயன்றி ஏனோதானோ என்று இருக்கிறதில்லை. இவர்கள் புறத்தியார் பணக்காரர்களாயிருக்கிறார்களே என்றாவது நல்ல அந்தஸ்தில் இருக்கிறார்களே என்றாவது யாதொரு பொறாமையும் படுகிறதில்லை. புறத்தியார நல்ல ஸ்திதியில் இருப்பதைப்பார்த்துச் சந்தோஷமே அதிகரிக்கிறது; குடிகள் எங்கே பார்த்தாலும் நிறைந்து கிடக்கிறார்கள், காலில் இடர்கிறார்கள், அவ்வாறு இடறும் போது ஒரு மயிரிழையளவில் பிழைத்துக் கொள்கிறார்கள், பெரும் பெரும் குதிரை வண்டிகளின் (Omnibuses) குதிரையின் கீழ் சிலவேளையி லகப்பட்டுக் கொள்கிறார்கள்; முடிசூட்டுக்கு வந்த இந்தியச் சேனைகளில் சிலர் கூட்டத்தில் குதிரைகள் மிரண்டு அக்கூட்டத்தில் ஓடினதால் பிரமாதமான காயம்பட்டு ஆசுபத்திரிக்குக் கொண்டு போகப் பட்டார்கள். சிலவேளையில் குடிகள் ஒருவர்க்கு ஒருவர் மோதிக்கொள்கிறார்கள்; இத்தனை அசௌரிகளுக்கும் ஒரு அணுவேனும் மனங்கோணாமல் மனவெறுப்புக்கொள்ளாமல் யாதாப்பிரகாரமே இருப்பார்கள். லண்டன் மாநகரத்தில் வெகு இக்கட்டமான நெருக்கமுள்ள இடத்தில், குடிகள் வெகு குதூகலப்பட்டுக் கொண்டு ஆவேசமாய்இருக்கும் காலத்தில் வண்டியை ஓட்டிக்கொண்டு போனால், நம் வண்டி

ஜம்பமாய் இருக்க இருக்க, நம்வண்டி வழியை அடைக்க அடைக்கக் குடிகளுக்கு நம்மிடம் அவ்வளவுக் கவ்வளவு நேசமதிகரிக்கும்.

## லண்டனும் பாரிஸூம்.

பக்கத்துத்தேசமாகியபிராஞ்சின்தலைப்பட்டணமாகியபாரிஸ்நகரத்தில்அப்படியன்று: இந்தமாதிரி ஒரு கூட்டத்தில் போனால் நம்மைஒரு பணக்காரனென்று பரிகாசம்பண்ணிஇகழ்ந்துபேசுவார்கள்; நம்மைக்கண்டு ஹா! ஹா!வென்று இரைவார்கள். லண்டனிலோ, தமக்குநடுவேபணக்காரன் வண்டி போனால் நேசத்துடன் வழிவிட்டாலும் விடுவார்களே யன்றி, வீதியில் பழம்விற்கும் அங்காடிக்காரன் கைவண்டிபோனாலும்அவ்வளவுநேசங்காண்பிக்க மாட்டார்கள்; ஆனால், பழம் விற்பவனை அடித்துத் துரத்துவார்களா என்றால், அதன்று; நம்மைக் காட்டிலும் அதிகப் பணக்காரன் மேல் ஒரு வெக்கடுப்பும் (வெ+கடுப்பும்) பொறாமையும் இல்லை யென்பது இதினால் வெளியாகிறது. ஆனால், சிலர் ஆங்கிலேயர்கள் ஒரு கரடிபோலப் பிறரைக் கண்டால் கர் புர் என்றார்களே என்றால், அது நிசந்தான், பொய்யன்று; ஆனால், அந்த நேசகுணம் தம்மவர்களுக்குக் (Own people) காண்பிப்பார்களே யன்றி, அந்நியக் குடிகளிடத்தில் கரடிபோலத்தான், கர் புர் என்று தானிருப்பார்கள். இந்தக் குடிகளைப்பற்றி ஒரு லண்டன் பத்திரிகை எழுதுவது கேளுங்கள் :—

# லண்டன் மாநகரத்துத் தெருக்குடிகளின் நடத்தை.

"லண்டன்மாநகரம் வெகு பெரியபட்டணம். அது, இந்தப் பூமண்டலத்தில் உள்ள இராஜ்யங்களுக் கெல்லாம் பலமானதும், நாகரீகமானதுமான ஆங்கிலேய ஏகாதி பத்தியத்துக்குத்தலைப் பட்டினம். அந்தத் தலைப் பட்டினத்தில் தெருக்களில் உள்ள தாழ் குடிகள் தாங்கள் இருக்கும் நிலைமைக்கும் தங்கள் இராஜாங்கத்தார் கொண்ட அந்தஸ்துக்கும் தக்கபடி நடந்துகொள்ள வேண்டியதென்று ஒப்புக்கொள்ளத் தக்கது. ஆனால், லண்டன்போன்ற ஒருபெரியபட்டணத்தில் உள்ள எல்லாரும் ஒரே மனத்தராயும் குணத்தராயும் இருப்பார்கள் என்று நாம் நம்புவது பிசகு. தாழ்குடிகள் எல்லாரும் அங்கேநல்ல நடத்தையுடன் நடந்து கொள்வார்கள் என்று நாம் எதிர்பார்க்கவும் கூடாது. ஆனால் நாகரீகத்துக் கெல்லாம் சிரோ மணியான அந்த மகா நகரத்தில் கேவலம் நாகரீகமற்ற முறட்டாட்களும் வெகு இழிவென்று நினைக்கும்படி நடத்தலும் துர்நடத்தை.

" இப்படித் துர் நடத்தையான போதிலும் வெகு நாளாய் லண்டனில் அந்த மாதிரி, குடிகள் நடந்து கொண்டு வந்தார்கள். முன்னொரு தடவை லண்டனில் ஒரு இடத்தில் (Hampton Court) முடி சூட்டுக்காகவந்து பாளையம் இறங்கி

யிருந்த சிக் சேனையில் ஒரு சிக்கைப் பார்த்து 'உன் முகத்தைக் கழுவிக்கொள்' என்று ஆபாசமான தழுதழுத்த உடம்புள்ள ஒரு ஸ்திரீ அதிகாரத் துடன் சொன்னாள். பிற்பாடு, கொஞ்சநாளுக் கெல்லாம் சிலர் பெண் பிள்ளைகள் விக்டோரியாப் புகைவண்டி முட்டி (ஸ்டேஷன்) யண்டை சேர்ந்து கூடிக்கொண்டு வழியில் போய்க்கொண்டிருக்கும் இரண்டு (இந்தியச்) சுதேசிகளைச்சுற்றிக் கொண்டு தங்களுக்குத் திருப்தியாகிற வரையில், அவ்விருவர் ஆடைகளைப் பரிசோதித்து, அவர்களுடைய நடை யுடை பாவனைகளை ஆழ ஊன்றி விசாரித்துக் குற்றங் கூறினார்கள். அதுவரையில் அவ்விருவர்களை இடம் வலம் அசையவிடவில்லை.

"இப்போது சொல்லப்பட்டன எல்லாம், சாதாரணமாய்க் குடிகள் இந்தமாதிரி நடந்து கொள்ளும் ஈனமான செய்கைகளுக்கு வெறும் திருஷ்டாந்தமாய்க் கொஞ்சமாக எடுத்துரைக் கப்பட்டனவே யன்றி, அச்செய்கைகள் யாவற்றையும் எடுத்து உரைப்பது சாத்தியமன்று.

"இந்த ஈனத்தன மானது மூடத்தனமாய் வேடிக்கைகள் செய்வதற்காகக் காட்டப் படுகின்றது. குடிகளுக்கு வழக்கமாய்த் தெரிந்தவை என்னமோ அவற்றினும் சற்று மாறு பட்டவைகளைப் பார்த்தால், இந்தமாதிரி அவர்கள் ஈனத்தனமாய் நடந்து கொள்ளுகிறார்கள். ஆயினும் அக்குடிகளுக்கு, தாமிந்த மாதிரி ஈனத்தனமாய் நடந்து கொள்வதொன்றே தம் வழக்கத்துக்கு

விரோதமாக இருக்கும எல்லாவற்றிலும் கொடுமையும் அற்பமுமானது என்று தெரியவில்லை.

"இந்தமாதிரி லண்டன் தெருக்குடிகள் ஈனமாய் நடப்பது, தம்முடைய மூடத்தனத்தைக் காண்பிக்கிறதும் தவிர, தமக்குக் கீழ்ப்பட்டிருக்கும் இதர சாதிக் குடிகள் கண்முன் தம் சாதியாரை ஒருங்கே இழிவாய்க் காட்டுகிறது; இப்படி இழிவாய்க் காட்டுகிறது ஒரு பெரிய குற்றமென்று அவர்களுக்குத் தெரியவில்லை."

## வேல்ஜர்கள் முடிசூட்டுப் பதக்கம் திருடினது.

இதன்றி, முடிசூட்டுக் காலத்தில் இந்தியாவிலிருந்துபோன இந்தியப் படையாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட இருவருடைய முடிசூட்டுப்பதக்கத்தை இரண்டு ஆங்கிலேயப் படையாளிகள் திருடிக்கொண்டார்கள். அவர்கள் விசாரிக்கப்பட்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு இராணுவத்தினின்றும் துரத்தப்பட்டார்கள்; போகும்போது இராணுவ உடுப்பைப் பகிரங்கமாய்க் கழற்றிக்கொண்டு விடப்பட்டார்கள்.

ஆயினும், இப்போது இப்போது கொஞ்சமாய் லண்டன் குடிகள் அந்நியர்களுக்கு வெகு ரயபியமாகவே நடந்து கொள்கிறார்கள். இது என்னத்தினாலே என்றால், தம் இராச்சியத்துக்கு அங்கங்கே குடியேற்ற நாடுகள் இருக்கின்றன; அவையாவும் தம்முடன் நேசத்துடன் ஒற்றுவாழவேண்டுமென்ற எண்ணம் மனதில் பட்டிருக்கி

றது. கடந்த 4 - 5 வருஷங்களாய் மகாபட்ட ணத்துக்குத் தம்குடியேற்ற நாட்டுப் படைகளும் இராஜ்ஜிய தந்திரிகளும் வந்து தம்முடன் அவர் தங்களுக்குள்ள குறைகளை ஒருவயணமாய்ச் சொல் லத்தொடங்கவே, தம்குடியேற்ற நாட்டுக்குடிகள் முறட்டாட்களன்றென்றும், காலமாலை தம்மைப் போலவே புதிய உடைகள் உடுத்து நாகரீகமாய் இருக்கிறார்கள் என்றும், தம் மூர்போலவே அந் நாடுகளிலும் வெகு வலிய இராச்சிய தந்திரிகள் இருக்கிறார்களென்றும், அவர்களுக்கும் தமக் குள்ள குறைகளை எடுத்துச் சொல்லச் சாமர்த்திய முண்டெனவும், இதுவரையில் தாம்கண்டறியாத லாபம் அந்நாடுகள் மூலமாய்த் தமக்குக் கிடைக் கும் என்றும் கண்டு கொண்டு ஆச்சரியப்பட்டுப் படாமலிருக்கிறார்கள். இதினால், ஆங்கிலேயர்கள் வரவரத் தாம்தான் எல்லாம் வல்லவர், உயர்த்தி, தமக்கு மிஞ்சினவர்களில்லை என்று எண்ணும் எண்ணத்தை விட்டுவிட்டார்கள்; புறத்தியார் அந்நியர்களிடத்தில் விசுவாசம், நேசம், தோழ மை காண்பிக்கத்தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மகாபட்டணத்தில் ஆங்கி லேய மகாப்பிரபுவுக்குப் பட்டாபிஷேகம் நடந் தது.

## லண்டன் மாநகரத்தில் நாகரீகமென்பது என்ன?

அந்த இராஜ முடிசூட்டுக்கு போர்ராகோ (இது ஆபிரிகாக்கண்டத்தில் எகிப்துக்கு மேலீ

பக்கமாய் ஸ்பெயின் தேசத்துக்கு எதிரே சமுத்திரக் கரையோரமாய் இருக்கிறது; ஒரு மகம்மதிய தேசம்.) என்ற தேசத்தின் மகம்மதியச் சக்கரவர்த்தி தன் மனுஷன் ஒரு மகம்மதியனை அனுப்பித்திருந்தான். அந்த மனுஷன் முடிசூட்டானபிறகு லண்டன்மாநகரத்தை விட்டுப் போம்போது "இங்கிலாண்டு ஒரு பெரிய தேசந்தான்; ஆனால், இங்கிலாண்டைவிட்டு நான் என் சுதேசத்தில் திரும்பியும் நாகரீகமனுபவிக்கப்போகிறேன் என்று எனக்குச் சந்தோஷம் பொறுக்க முடியவில்லை" என்று இரைந்து சொன்னார். இந்தமாதிரி ஏன் சொல்லவேண்டும்? மகா பராக்கிரமமான, மகா கைத்தொழில் நிபுணர்கள் வசிக்கும்படியான, மகா வித்வான்கள், மகா சமர்த்தர்கள், ராபர்ட்ஸ் பிரபு கிச்சனர் பிரபு ஆகிய வீரர்கள் வசிக்கும்படியான அந்த லண்டன்மாநகரம் நாகரீகமில்லையா? அந்த முரட்டு மொராக்கோத் தேசந்தானா நாகரீக முள்ளது? அப்படியன்று: லண்டனுக்குத் தூரதேசத்திலிருந்து வருகிற அநேகமாய் எல்லாருமே இப்படி அபிப்பிராயப்படுகிறார்கள். இந்த இங்கிலாண்டானது எவ்வளவு செல்வம் படைத்திருந்தபோதிலும், பெருமை யடைந்திருந்தபோதிலும், எவ்வளவு வருவாய்கள் (resources) அடையப் பெற்றிருந்தபோதிலும், அநாகரீகமான முரட்டு மனுஷர்கள் வசிக்கும் பூமியே என்னவேண்டும். பூசாரம் (Climate) நல்லதன்று; மிக்கவெறுப்பை உண்டாக்குகிறது. பெரும் பெரும் பட்டணங்கள் வெகு அழுலாய்த்

தோன்றுகின்றன; கரடுமுரடாய்த் தோன்றுகின்றன; இப்படி ஊழலாயும், கரடுமுரடாயும் இன்னகாரணத்தினால் அப்பட்டணங்கள் இருக்கின்றன என்று அத்தேசாந்திரிகளுக்கு அர்த்தமாகிறதில்லை. குடிகளின் நடையுடை பாவனையெல்லாம் இதுவரையில் எங்கும் காணாதனவாய் அதிசயமாய்த் தோன்றுகின்றன. குடிகளுக்கு, முக்கியமாய் வெட்கமற்று உடம்பை நன்றாய் மூடாமல் (Unveiled) இருக்கும் ஸ்திரீகளுக்கு நன்னடத்தை கிடையவே கிடையாது; அவ்வெகிபர்கள் லண்டன் குடிகளை மதமற்றவர்கள் என்று நினைக்கிறார்கள்; சிருஷ்டியில் நல்லது, பொல்லாதது தெரிந்துகொண்டு சுகப்படுகிறதில்லை; சிருஷ்டியில் அழகு, ஊழல் என்பன அறிந்துகொள்ள முயலுவதில்லை; ஏனென்றால், அவற்றின்மேல் நேசம்வைத்துத் தம் புத்தியைச் செலுத்துவதில்லை. அவர்கள் தம் தேகத்தை வருத்திக்கொண்டு உழைப்பதே வேலையாயிருக்கிறார்கள். இப்படிச் சிறுவர்களும் செய்கிறார்கள், கிழங் கட்டையும் செய்கிறார்கள்; இருவர்க்கும் சற்றேனும் வித்தியாசமில்லை; சுவாமித்தியானம் என்பது சற்றேனும் கிடையாது; விடாய் ஆறுவதென்பது கிடையவே கிடையாது; தேகத்துக்கு ஓய்ச்சல் ஒழிச்சலே யில்லை; அவர்கள் அந்தி சந்தி உழைத்த வண்ணந்தான். லண்டன் தெருக்களில் பிச்சைக்காரர்களிருப்பது கிடையாதென்பது நிசந்தான், இவர்களல்லாது இதரர்களுக்கு யாதொரு துன்பமும் இல்லையென்பதும்

நிஜந்தான்; குஷ்டரோகிகள் கிடையாதென்பதும் வாஸ்தவந்தான். ஆயினும், தெருக்களில் நடந்தால் இவ்விரண்டு விதமான மனுஷர்களால் எவ்வளவு தொந்திரவும் மனக்கவலையும் உண்டாகுமோ அதைக்காட்டிலும் அதிகம் உண்டாகின்றது.



## 2-வது இன்பம்.

# வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயில்.



இங்கிலாண்டின் பெருமைக்கும் இந்தவெஸ்ட் மின்ஸ்டர் க்ஷேத்திரத்துக்கும் சற்றேனும் பிரிவு கிடையாது. இந்த க்ஷேத்திரத்தில் இந்த ஆபிக் கோயில் நாம்போய் பூஜிக்கத் தக்கதான மகா சிரேஷ்டமானகோயில். அதன் அழகு இங்கிலாண் டில் எங்கேயுமில்லை. அதில் பூர்வம்தொட்டுநடந்த காரியம்இங்கிலாந்தில் எங்கும் நடக்கவில்லை. இது லண்டன் பட்டணத்தில் பக்கிங்காம் அரண்மனைக் கருகாமையில் உள்ளது. இந்த நகரத்தில் சென்ற ஆயிரம் வருஷமாக அநேக மாறுபாடுகள் நடந்தி ருக்கின்றன. இன்னும் 15-லட்சம்பவுன்போட்டுச் சில மாறுபாடுகள் நடந்துகொண் டிருக்கின்றன. கி. பி. 1017-வருஷம் முதல் (King Canute the Dane) 1541-வருஷம் வரையில் (King Henry VIII) இங்கே இருந்த வெகு புராதனமான அரண்மனையில் பல அரசர்கள் இராஜசபை பண் ணியிருக்கிறார்கள். 1512-ம்ஆண்டில் இந்த அரண் மனை முற்றுமே நெருப்பில்வெந்து போயிற்று. பிறகு அரசன் அதன்பக்கத்தில் ஒருபுதிய அரண் மனை கட்டிக்கொண்டு(Whitehall) அங்கேஇராஜ சபை நடத்திவந்தான். இந்த நகரத்துக்குப் பக்

கத்தில் ஒரு திராட்சத்தோட்டமிருந்தது. அந்தத் தோட்டத்திலிருந்து தான் ஆபிக் கோயிலில் நடக்கும் சடங்குகளுக்குத் திராட்சமது வந்துகொண்டிருந்தது; இப்போது,தோட்டமிருந்தஇடம் ஒரு தெருவாய் (Romney Street) இருக்கிறது; இப்போது தாழ்குடிச் சபைக்கூடத்துக்கு (House of Commons)எதிரே இருக்கும் பார்லிமெண்ட் சதுக்கம் (Parliament Square) என்பது பூர்வ காலத்தில் ஒரு சந்தையாய் (market place) இருந்தது; இந்தச் சந்தை 1353-ம் ஆண்டு III-வது எட்வர்ட் ராஜனால் ஊன்றப்பட்டது. இந்தச் சந்தையில்தான் எல்லாச் சாமான்களும் விற்கவேண்டியது; அவற்றிற்குச் சந்தைவரி ஒன்று கொடுக்கப்பட்டு வந்தது; இந்தவரியைக்கொண்டு கடற்கரை ஓரமாயிருந்த பெரியசாலையை(Highway) அரசன் செப்பனிட்டான்; இந்தமாதிரி செப்பனிடுவதற்கே இந்தச்சந்தை கட்டி வரிவாங்கப்பட்டது. இந்த சந்தைக்குப் பக்கத்தில் மகா புண்ணியமான இடமொன்றிருந்தது (Sanctuary); அந்த இடத்துக்குள் இராஜனால் தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் ஓடி ஒளிப்பதுண்டு; அன்றி, குடிகளின் ஆவேசத்துக்குப் பயந்தோடும் பெரியோர்களும் அந்தமாதிரி ஓடி ஒளித்து வந்தார்கள். IV-வது எட்வர்ட் ராஜாவின் மனைவி (Elizabeth Woodville) 1471-ம் ஆண்டில் சிறையினின்று (Tower) தப்பித்துக்கொண்டு தானும் தன்புடை சூழ்ந்தாரும் அந்தப் புண்ணியமான இடத்தில் பணிவிடைசெய்யும் பெண்கள் என்று அங்கிருந்த

குருமார்களைத் தம் கணக்குகளில் எழுதிக்கொள்ளச்சொல்லி அந்த இடத்துக்குள் போய் வசித்து வந்தாள். இங்கே வக்கற்றவளாய்ப் V-வது எட்வர்ட் ராஜனைப் பெற்றாள்; அந்தக் குழந்தையை யார்க்பிரபுவான குருமாரும் இன்னொருபிரபுவும் (Duke of Buckingham) அதன் தாயாதி ((Richard) கையில் கொடுத்துவிடும்படி அவளைத் தூண்டினார்கள். அப்படியே அவள் செய்தபோது அந்தக் குழந்தை சிறையில் (Tower) 13 - வருஷகாலம் அடைத்து வைக்கப்பட்ட பிறகு கொல்லப்பட்டது.

இங்கே ஒரு பள்ளிக்கூடமிருக்கிறது. இது வெகுநாளுக்கு முன்னால் ஏற்பட்டது. இந்தப்பள்ளிக்கூடத்தில் படித்துத்தேர்ந்தவர்கள் பலருளர்; இராச்சிய தந்திரிகள், வித்துவான்கள், சட்டப்புலவர்கள், வேதாந்திகள் ஆகிய இந்தமாதிரி நிபுணர்கள்யாவரும் வெளிப் புறப்பட்டார்கள். இங்கேயாவது, மேற்சொல்லப்பட்ட வைட்ஹால் என்னுமிடத்தில் புதியதாய்க் கட்டப்பட்ட அரண்மனையிலாவது இராஜ சபைகள் நடந்துகொண் டிருந்தும், இதற்கருகாமையில் மகா துஷ்டர்கள் மகா கொடியோர்கள் வசித்து வந்தார்கள்! இதுவும் ஒரு ஆச்சரியந்தான்!

பழைய அரண்மனைக்குத்தென்கிழக்கே, அதாவது, இப்போது ஆபிங்டன்என்னும்தெரு (Abingdon Street)க்கோடியில், இராஜ்யத்துக்கு விரோதமாய் ஒருதரம் நடந்த கலகக் கூட்டமேர்சனை

(Gunpowder Plot) க்கு ஒரு பிரபு (Percy) காரணபூதனைக் குடியிருந்தான். அவனைச் சுற்றிக் கூட்டாளிகள் பலபேரிருந்தார்கள். இந்தப் பிரபு தான் இருந்த வீட்டை வாடகைக்கு வாங்கிக் கொண்டிருந்தான். இப்போது உயர்தரக் குடிச் சபைக் (House of Lords) கூடத்தின் கீழிருந்த அறைகளில் (Vaults) தனக்கு வேண்டிய பீரங்கி மருந்துப் பீப்பாய்களை மறைத்து வைத்திருந்தான்; ஏனென்றால், அரசுக் குடிச்சபைக்கு அரசன் வந்தவுடன் அந்தச் சபை நடக்கும் கூடங்களையே மருந்தால் கொளுத்திச் சுட்டுத்தகர்த்து விடுவதாக எண்ணங் கொண்டிருந்தான்; இந்தத் திருட்டுயோசனை எப்படியோ வெளியாய்த் துரைத்தனத்தார்க்குத் தெரிந்துபோயிற்று. அப்போதுமுதல், அரசுக்குடிச்சபை கூடும் ஒவ்வொரு தடவையும் உயர்தரக் குடிச்சபைக் கூடத்தின் கீழிருக்கும் அறைகளைச் சில சோல்ஜர்கள் (beefeaters) அங்கே ஏதாவது அபாயங்கள் உண்டாகுமா என்று தேடிப் பார்த்துவிட்ட பிறகுதான் சபைகூடுவது வழக்கமேற்பட்டிருக்கிறது. இந்தச் சிப்பாய்கள் இராஜரீகவிருந்துகள் நடக்கும் போதும் இன்னுமிப்படிப்பட்டபெரியசமயங்களிலும் இராஜனைக்காத்து நிற்பார்கள். இவர்கள் குதிரைவீரர்கள்; இராஜனுடைய மெய்காப்பாளிகள்; (Body Guard of the Sovereign); இதற்குப் பேர் ஆங்கிலேய பாஷையில் யோமன்ரீக் காவல்ரீ (Yeomanry Cavalry) என்று சொல்வது வழக்கம்.

மேற்சொன்ன சேதிகள் தவிர இங்கு இன்னு மநேக சேதிகள் நடந்தன. ஆனால், எல்லாம் சொல்ல வேண்டுமென்றால் இந்தச் சிறிய புஸ்தகத்தில் அடங்காது; இரண்டொரு சங்கதிகள் விசேஷமானவற்றை மாத்திரம் எடுத்துச் சொல்லலாம்:— 1618-ம் ஆண்டில் இங்கிலாண்டு தேசத்துக் கவீச்சுரன் ஒருவன் (Sir Walter Raleigh) சிரசாக்கினைக் காளானான்; இவனை இராச்சியத்தில் வழக்கமாய்த் தலைவெட்டு மரத்திற்குக் (Scaffold) கொண்டுபோய்த் தலையை வெட்டும் போது இவன் காண்பித்த தைரியம், கடைப்பிடி, நெஞ்சழுத்தம், நெஞ்சுத் துணிச்சல், கல்நெஞ்சு ஒருவரும் இதற்கு முன்னாலும் காண்பிக்கவில்லை, இனியும் காண்பிக்கப்போகிறதில்லை. ஆனால், இவனுடைய தேகத்தை என்ன பண்ணினார்களோ நன்றாய்த்தெரியவில்லை. இவன் தலையைவெட்டித் தலைவெட்டு மரத்துக்கு இருபக்கத்திலும், அங்கே வேடிக்கை பார்க்கவந்த யாவர்க்கும் காண்பித்து விட்டு அதிகாரிகள் அவன்பெண்சாதி யண்டை கொடுத்து விட்டார்கள். அந்தம்மாள் தம் புருஷன் தலையை ஒரு தோல் பையில் போட்டுக் கொண்டுஅதின்மேல் தன் புருஷனுடையபெருஞ் சொக்காய்களைப் போர்வையாக மூடிக்கொண்டு, பிற வெல்லாவற்றையும் ஒரு இழவுவண்டியில் (Mourning Coach)வைத்துக்கொண்டு தம் வீட்டுக்குக் கொண்டுபோனார்; இப்படிச் செய்து இந்தத் தலையை 29-வருஷம் ஒரு பெட்டியில் வைத்துக் காப்பாற்றி இறந்தார். இந்தம்மாளுக்குப்

## லண்டன் மாநகரத்துத் தெருக்குடிகளின் நடத்தை.

"லண்டன்மாநகரம் வெகு பெரியபட்டணம். அது, இந்தப் பூமண்டலத்தில் உள்ள இராஜ்யங்களுக் கெல்லாம் பலமானதும், நாகரிகமானதுமான ஆங்கிலேய ஏகாதிபத்தியத்துக்குத் தலைப் பட்டினம். அந்தத் தலைப் பட்டினத்தில் தெருக்களில் உள்ள தாழ் குடிகள் தாங்கள் இருக்கும் நிலைமைக்கும் தங்கள் இராஜாங்கத்தார் கொண்ட அந்தஸ்துக்கும் தக்கபடி நடந்துகொள்ள வேண்டியதென்று ஒப்புக்கொள்ளத் தக்கது. ஆனால், லண்டன்போன்ற ஒருபெரியபட்டணத்தில் உள்ள எல்லாரும் ஒரே மனத்தராயும் குணத்தராயும் இருப்பார்கள் என்று நாம் நம்புவது பிசகு. தாழ்குடிகள் எல்லாரும் அங்கேநல்ல நடத்தையுடன் நடந்து கொள்வார்கள் என்று நாம் எதிர்பார்க்கவும் கூடாது. ஆனால் நாகரிகத்துக் கெல்லாம் சிரோமணியான அந்த மகா நகரத்தில் கேவலம் நாகரிகமற்ற முரட்டாட்களும் வெகு இழிவென்று நினைக்கும்படி நடந்ததும் துர்நடத்தை.

" இப்படித் துர் நடத்தையான போதிலும் வெகு நாளாய் லண்டனில் அந்த மாதிரி, குடிகள் நடந்து கொண்டு வந்தார்கள். முன்னொரு தடவை லண்டனில் ஒரு இடத்தில் (Hampton Court) முடி சூட்டுக்காகவந்து பாளையம் இறங்கி

பிருந்த சிக் சேனையில் ஒரு சிக்கைப் பார்த்து 'உன் முகத்தைக் கழுவிக்கொள்' என்று ஆபாசமான தழுதழுத்த உடம்புள்ள ஒரு ஸ்திரீ அதிகாரத் துடன் சொன்னாள். பிற்பாடு, கொஞ்சநாளுக் கெல்லாம் சிலர் பெண் பிள்ளைகள் விக்டோரியாப் புகைவண்டி முட்டி (ஸ்டேஷன்) யண்டை சேர்ந்து கூடிக்கொண்டு வழியில் போய்க்கொண் டிருக்கும் இரண்டு (இந்தியச்) சுதேசிகளைச் சுற்றிக் கொண்டு தங்களுக்குத் திருப்தியாகிற வரையில், அவ்விருவர் ஆடைகளைப் பரிசோதித்து, அவர்களுடைய நடை யுடை பாவனைகளை ஆழ ஊன்றி விசாரித்துக் குற்றங் கூறினார்கள். அதுவரையில் அவ்விருவர்களோ இடம் வலம் அசையவிடவில்லை.

"இப்போது சொல்லப்பட்டன எல்லாம், சாதாரணமாய்க் குடிகள் இந்தமாதிரி நடந்து கொள்ளும் ஈனமான செய்கைகளுக்கு வெறும திருஷ்டாந்தமாய்க் கொஞ்சமாக எடுத்துரைக் கப்பட்டனவே யன்றி, அச்செய்கைகள் யாவற் றையும் எடுத்து உரைப்பது சாத்தியமன்று.

"இந்த ஈனத்தன மானது மூடத்தனமாய் வேடிக்கைகள் செய்வதற்காகக் காட்டப் படுகின் றது. குடிகளுக்கு வழக்கமாய்த் தெரிந்தவை என்னமோ அவற்றினும் சற்று மாறு பட்டவை களைப் பார்த்தால், இந்தமாதிரி அவர்கள் ஈனத் தனமாய் நடந்து கொள்ளுகிறார்கள். ஆயினும் அக்குடிகளுக்கு, தாமிந்த மாதிரி ஈனத்தனமாய் நடந்து கொள்வதொன்றே தம் வழக்கத்துக்கு

விரோதமாக இருக்கும் எல்லாவற்றிலும் கொடுமையும் அற்பமுமானது என்று தெரியவில்லை.

"இந்தமாதிரி லண்டன் தெருக்குடிகள் ஈனமாய் நடப்பது, தம்முடைய மூடத்தனத்தைக் காண்பிக்கிறதும் தவிர, தமக்குக் கீழ்ப்பட்டிருக்கும் இதர சாதிக் குடிகள் கண்முன் தம் சாதியாரை ஒருங்கே இழிவாய்க் காட்டுகிறது; இப்படி இழிவாய்க் காட்டுகிறது ஒரு பெரிய குற்றமென்று அவர்களுக்குத் தெரியவில்லை."

## வேல்ஸர்கள் முடிசூட்டுப் பதக்கம் திருடினது.

இதன்றி, முடிசூட்டுக் காலத்தில் இந்தியாவிலிருந்துபோன இந்தியப் படையாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட இருவருடைய முடிசூட்டுப்பதக்கத்தை இரண்டு ஆங்கிலேயப் படையாளிகள் திருடிக்கொண்டார்கள். அவர்கள் விசாரிக்கப்பட்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு இராணுவத்தினின்றும் துரத்தப்பட்டார்கள்; போகும்போது இராணுவ உடுப்பைப் பகிரங்கமாய்க் கழற்றிக்கொண்டு விடப்பட்டார்கள்.

ஆயினும், இப்போது இப்போது கொஞ்சமாய் லண்டன் குடிகள் அன்னியர்களுக்கு வெகு நம்பியமாகவே நடந்து கொள்கிறார்கள். இது என்னத்தினாலே என்றால், தம் இராச்சியத்துக்கு அங்கங்கே குடியேற்ற நாடுகள் இருக்கின்றன; அவையாவும் தம்முடன் நேசத்துடன் ஒற்றுவாநூவேண்டுமென்ற எண்ணம் மனதில் பட்டிருக்கி

றது. கடந்த 4 - 5 வருஷங்களாய் மகாபட்ட ணத்துக்குக் தம்குடியேற்ற நாட்டுப் படைகளும் இராஜ்ஜிய தந்திரிகளும் வந்து தம்முடன் அவர் தங்களுக்குள்ள குறைகளை ஒருவயணமாய்ச் சொல் லத்தொடங்கவே, தம்குடியேற்ற நாட்டுக்குடிகள் முறட்டாட்களன்றென்றும், காலைமாலை தம்மைப் போலவே புதிய உடைகள் உடுத்து நாகரீகமாய் இருக்கிறார்கள் என்றும், தம்மூர்போலவே அந் நாடுகளிலும் வெகு வலிய இராச்சிய தந்திரிகள் இருக்கிறார்களென்றும், அவர்களுக்கும் தமக் குள்ளகுறைகளை எடுத்துச் சொல்லச் சாமர்த்திய முண்டெனவும், இதுவரையில் தாம்கண்டறியாத லாபம் அந்நாடுகள் மூலமாய்த் தமக்குக் கிடைக் கும் என்றும் கண்டு கொண்டு ஆச்சரியப்பட்டுட படாமலிருக்கிறார்கள். இதினால், ஆங்கிலேயர்கள் வரவரத் தாம்தான் எல்லாம் வல்லவர், உயர்த்தி, தமக்கு மிஞ்சினவர்களில்லை என்று எண்ணும் எண்ணத்தை விட்டுவிட்டார்கள்; புறத்தியார் அந்நியர்களிடத்தில் விசுவாசம், நேசம், தோழு மை காண்பிக்கத்தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மகாபட்டணத்தில் ஆங்கி லேய மகாப்பிரபுவுக்குப் பட்டாபிஷேகம் நடந் தது.

## லண்டன் மாநகரத்தில் நாகரீகமென்பது என்ன?

அந்த இராஜ முடிசூட்டுக்கு போரா கோ (இது ஆபிரிகாக்கண்டத்தில் எகிப்துக்கு மேலி

பக்கமாய் ஸ்பெயின் தேசத்துக்கு எதிரே சமுத்திரக் கரையோரமாய் இருக்கிறது; ஒரு மகம்மதிய தேசம்.) என்ற தேசத்தின் மகம்மதியச் சக்கரவர்த்தி தன் மனுஷன் ஒரு மகம்மதியனை அனுப்பித்திருந்தான். அந்த மனுஷன் முடிசூட்டானபிறகு லண்டன்மாநகரத்தை விட்டுப் போம்போது "இங்கிலாண்டு ஒரு பெரிய தேசந்தான்; ஆனல், இங்கிலாண்டைவிட்டு நான் என் சுதேசத்தில் திரும்பியும் நாகரீகமனுபவிக்கப்போகிறேன் என்று எனக்குச் சந்தோஷம் பொறுக்க முடியவில்லை" என்று இரைந்து சொன்னர். இந்தமாதிரி ஏன் சொல்லவேண்டும்? மகா பராக்கிரமமான, மகா கைத்தொழில் நிபுணர்கள் வசிக்கும்படியான, மகா வித்வான்கள், மகா சமர்த்தர்கள், ராபர்ட்ஸ் பிரபு கிச்சனர் பிரபு ஆகிய வீரர்கள் வசிக்கும்படியான அந்த லண்டன்மாநகரம் நாகரீகமில்லையா? அந்த முரட்டு மொராகோத் தேசந்தானு நாகரீக முள்ளது? அப்படியன்று; லண்டனுக்குத் தூரதேசத்திலிருந்து வருகிற அநேகமாய் எல்லாருமே இப்படி அபிப்பிராயப்படுகிறார்கள். இந்த இங்கிலாண்டானது எவ்வளவு செல்வம் படைத்திருந்தபோதிலும், பெருமை யடைந்திருந்தபோதிலும், எவ்வளவு வருவாய்கள் (resources) அடையப் பெற்றிருந்தபோதிலும், அநாகரீகமான முரட்டு மனுஷர்கள் வசிக்கும பூமியே என்னவேண்டும். பூசாரம் (Climate) நல்லதன்று; மிக்கவெறுப்பை உண்டாக்குகிறது. பெரும் பெரும் பட்டணங்கள் வெகு அழலாய்த்

தோன்றுகின்றன; கரடு முரடாய்த் தோன்றுகின்றன; இப்படி ஊழலாயும், கரடுமுரடாயும் இன்னகாரணத்தினால் அப்பட்டணங்கள் இருக்கின்றன என்று அத்தேசாந்திரிகளுக்கு அர்த்தமாகிறதில்லை. குடிகளின் நடையுடை பாவனை யெல்லாம் இதுவரையில் எங்கும் காணாதனவாய் அதிசயமாய்த் தோன்றுகின்றன. குடிகளுக்கு, முக்கியமாய் வெட்கமற்று உடம்பை நன்றாய் மூடாமல் (Unveiled) இருக்கும் ஸ்திரீகளுக்கு நன்னடத்தை கிடையவே கிடையாது; அவ்வந்நியர்கள் லண்டன் குடிகளை மதமற்றவர்கள் என்று நினைக்கிறார்கள்; சிருஷ்டியில் நல்லது, பொல்லாதது தெரிந்துகொண்டு சுகப்படுகிறதில்லை; சிருஷ்டியில் அழகு, ஊழல் என்பன அறிந்துகொள்ள முயலுவதில்லை; ஏனென்றால், அவற்றின்மேல் நேசம்வைத்துத் தம் புத்தியைச் செலுத்துவதில்லை. அவர்கள் தம் தேகத்தை வருத்திக்கொண்டு உழைப்பதே வேலையா யிருக்கிறார்கள். இப்படிச் சிறுவர்களும் செய்கிறார்கள், கிழங் கட்டையும் செய்கிறார்கள்; இருவர்க்கும் சற்றேனும் வித்தியாசமில்லை; சுவாமித்தியானம் என்பது சற்றேனும் கிடையாது; விடாய் ஆறுவதென்பது கிடையவே கிடையாது; தேகத்துக்கு ஓய்ச்சல் ஒழிச்சலே யில்லை; அவர்கள் அந்தி சந்தி உழைத்த வண்ணந்தான். லண்டன் தெருக்களில் பிச்சைக்காரர்களிருப்பது கிடையாதென்பது நிசந்தான், இவர்களல்ல இதரர்களுக்கு யாதொரு துன்பமும் இல்லையென்பதும்

நிஜந்தான்; குஷ்டரோகிகள் கிடையாதென்பதும் வாஸ்தவந்தான். ஆயினும், தெருக்களில் நடந்தால் இவ்விரண்டு விதமான மனுஷர்களால் எவ்வளவு தொந்திரவும் மனக்கவலையும் உண்டாகுமோ அதைக்காட்டிலும் அதிகம் உண்டாகின்றது.



## 2-வது இன்பம்.

# வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயில்.



இங்கிலாண்டின் பெருமைக்கும் இந்தவெஸ்ட் மின்ஸ்டர் க்ஷேத்திரத்துக்கும் சற்றேனும் பிரிவு கிடையாது. இந்த க்ஷேத்திரத்தில் இந்த ஆபிக் கோயில் நாம்போய் பூஜிக்கத் தக்கதான மகா சிரேஷ்டமானகோயில். அதன் அழகு இங்கிலாண்டில் எங்கேயுமில்லை. அதில் பூர்வம்தொட்டுநடந்த காரியம்இங்கிலாந்தில் எங்கும் நடக்கவில்லை. இது லண்டன் பட்டணத்தில் பக்கிங்காம் அரண்மனைக் கருகாமையில் உள்ளது. இந்த நகரத்தில் சென்ற ஆயிரம் வருஷமாக அநேக மாறுபாடுகள் நடந்திருக்கின்றன. இன்னும் 15-லட்சம்பவுன்போட்டுச் சில மாறுபாடுகள் நடந்துகொண் டிருக்கின்றன. கி. பி. 1017-வருஷம் முதல் (King Canute the Dane) 1541-வருஷம் வரையில் (King Henry VIII) இங்கே இருந்த வெகு புராதனமான அரண்மனையில் பல அரசர்கள் இராஜசபை பண்ணியிருக்கிறார்கள். 1512-ம்ஆண்டில் இந்த அரண்மனை முற்றுமே நெருப்பில்வெந்து போயிற்று. பிறகு அரசன் அதன்பக்கத்தில் ஒருபுதிய அரண்மனை கட்டிக்கொண்டு(Whitehall) அங்கேஇராஜ சபை நடத்திவந்தான். இந்த நகரத்துக்குப் பக்

கத்தில் ஒரு திராட்சத்தோட்டமிருந்தது. அந்தத் தோட்டத்திலிருந்து தான் ஆபிக் கோயிலில் நடக்கும் சடங்குகளுக்குத் திராட்சமது வந்துகொண்டிருந்தது; இப்போது, தோட்டமிருந்தஇடம் ஒரு தெருவாய் (Romney Street) இருக்கிறது; இப்போது தாழ்குடிச் சபைக்கூடத்துக்கு (House of Commons) எதிரே இருக்கும் பார்லிமெண்ட் சந்தி (Parliament Square) என்பது பூர்வ காலத்தில் ஒரு சந்தையாய் (market place) இருந்தது; இந்தச் சந்தை 1353-ம் ஆண்டு III-வது எட்வர்ட் ராஜனால் ஊன்றப்பட்டது. இந்தச் சந்தையில்தான் எல்லாச் சாமான்களும விற்கவேண்டியது; அவற்றிற்குச் சந்தைவரி ஒன்று கொடுக்கப்பட்டு வந்தது; இந்தவரியைக்கொண்டு கடற்கரை ஓரமாயிருந்த பெரியசாலையை (Highway) அரசன் செப்பனிட்டான்; இந்தமாதிரி செப்பனிடுவதற்கே இந்தச்சந்தை கட்டி வரிவாங்கப்பட்டது. இந்த சந்தைக்குப் பக்கத்தில் மகா புண்ணியமான இடமொன்றிருந்தது (Sanctuary); அந்த இடத்துக்குள் இராஜனால் தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் ஓடி ஒளிப்பதுண்டு; அன்றி, குடிகளின் ஆவேசத்துக்குப் பயந்தோடும் பெரியோர்களும் அந்தமாதிரி ஓடி ஒளித்து வந்தார்கள். IV-வது எட்வர்ட் ராஜாவின் மனைவி (Elizabeth Woodville) 1471-ம் ஆண்டில் சிறையினின்றும் (Tower) தப்பித்துக்கொண்டு தானும் தன்புடைசூழ்ந்தாரும் அந்தப் புண்ணியமான இடத்தில் பணிவிடைசெய்யும் பெண்கள் என்று அங்கிருந்த

குருமார்களைத் தம் கணக்குகளில் எழுதிக்கொள்ளச்சொல்லி அந்த இடத்துக்குள் போய் வசித்து வந்தாள். இங்கே வக்கற்றவளாய்ப் V-வது எட்வர்ட் ராஜனைப் பெற்றாள்; அந்தக் குழந்தையை யார்க்பிரபுவான குருமாரும் இன்னொருபிரபுவும் (Duke of Buckingham) அதன் தாயாதி ((Richard) கையில் கொடுத்துவிடும்படி அவளைத் தூண்டினார்கள். அப்படியே அவள் செய்தபோது அந்தக் குழந்தை சிறையில் (Tower) 13 - வருஷகாலம் அடைத்து வைக்கப்பட்ட பிறகு கொல்லப்பட்டது.

இங்கே ஒரு பள்ளிக்கூடமிருக்கிறது. இது வெகுநாளுக்கு முன்னால் ஏற்பட்டது. இந்தப்பள்ளிக்கூடத்தில் படித்துத்தேர்ந்தவர்கள் பலருளர்; இராச்சிய தந்திரிகள், வித்துவான்கள், சட்டப்புலவர்கள், வேதாந்திகள் ஆகிய இந்தமாதிரி நிபுணர்கள்யாவரும் வெளிப் புறப்பட்டார்கள். இங்கேயாவது, மேற்சொல்லப்பட்ட வைட்ஹால் என்னுமிடத்தில் புதியதாய்க் கட்டப்பட்ட அரண்மனையிலாவது இராஜ சபைகள் நடந்துகொண்டிருந்தும், இதற்கருகாமையில் மகா துஷ்டர்கள் மகா கொடியோர்கள் வசித்து வந்தார்கள்! இதுவும் ஒரு ஆச்சரியந்தான்!

பழய அரண்மனைக்குத்தென்கிழக்கே, அதாவது, இப்போது ஆபிங்டன்என்னும்தெரு(Abingdon Street)க்கோடியில், இராஜ்யத்துக்கு விரோதமாய் ஒருதரம் நடந்த கலகக் கூட்டுயோசனை

(Gunpowder Plot) க்கு ஒரு பிரஸி (Percy) காரணபூதனாய்க் குடியிருந்தான். அவனைச் சுற்றிக் கூட்டாளிகள் பலபேரிருந்தார்கள். இந்தப் பிரஸி தான் இருந்த வீட்டை வாடகைக்கு வாங்கிக் கொண்டிருந்தான். இப்போது உயர்தரக் குடிச் சபைக் (House of Lords) கூடத்தின் கீழிருந்த அறைகளில் (Vaults) தனக்கு வேண்டிய பீரங்கி மருந்துப் பீப்பாய்களை மறைத்து வைத்திருந்தான்; ஏனென்றால், அரசுக் குடிச்சபைக்கு அரசன் வந்தவுடன் அந்தச் சபை நடக்கும் கூடங்களையே மருந்தால் கொளுத்திச் சுட்டுத்தகர்த்து விடுவதாக எண்ணம் கொண்டிருந்தான்; இந்தத் திருட்டுயோசனை எப்படியோ வெளியாய்த் துரைத்தனத்தார்க்குத் தெரிந்துபோயிற்று. அப்போதுமுதல், அரசுக்குடிச்சபை கூடும் ஒவ்வொரு தடவையும் உயர்தரக் குடிச்சபைக் கூடத்தின் கீழிருக்கும் அறைகளைச் சில சோல்ஜர்கள் (beefeaters) அங்கே ஏதாவது அபாயங்கள் உண்டாகுமா என்று தேடிப் பார்த்துவிட்ட பிறகுதான் சபைகூடுவது வழக்கமேற்பட்டிருக்கிறது. இந்தச் சிப்பாய்கள் இராஜரீகவிருந்துகள் நடக்கும் போதும் இன்னுமிப்படிப்பட்டபெரியசமயங்களிலும் இராஜனைக்காத்து நிற்பார்கள். இவர்கள் குதிரைவீரர்கள்; இராஜனுடைய மெய்காப்பாளிகள்; (Body Guard of the Sovereign); இதற்குப் பேர் ஆங்கிலேய பாஷையில் யோமன்ரீக் காவல்ரீ (Yeomanry Cavalry) என்று சொல்வது வழக்கம்.

மேற்சொன்ன சேதிகள் தவிர இங்கு இன்னு மநேக சேதிகள் நடந்தன. ஆனால், எல்லாம சொல்ல வேண்டுமென்றால் இந்தச் சிறிய புஸ்தகத்தில் அடங்காது; இரண்டொரு சங்கதிகள் விசேஷமானவற்றை மாத்திரம் எடுத்துச் சொல்லலாம்:— 1618-ம் ஆண்டில் இங்கிலாண்டு தேசத்துக் கவீச்சுரன் ஒருவன் (Sir Walter Raleigh) சிரசாக்கினைக் காளானான்; இவனை இராச்சியத்தில் வழக்கமாய்த் தலைவெட்டு மரத்திற்குக் (Scaffold) கொண்டுபோய்த் தலையை வெட்டும போது இவன் காண்பித்த தைரியம், கடைப்பிடி, நெஞ்சழுத்தம், நெஞ்சுத் துணிச்சல், கல்நெஞ்சு ஒருவரும் இதற்கு முன்னும் காண்பிக்கவில்லை, இனியும் காண்பிக்கப்போகிறதில்லை. ஆனால், இவனுடைய தேகத்தை என்ன பண்ணினார்களோ நன்றாய்த்தெரியவில்லை. இவன் தலையைவெட்டித் தலைவெட்டு மரத்துக்கு இருபக்கத்திலும், அங்கே வேடிக்கை பார்க்கவந்த யாவர்க்கும் காண்பித்து விட்டு அதிகாரிகள் அவன்பெண்சாதி யண்டை கொடுத்து விட்டார்கள். அந்தம்மாள் தம் புருஷன் தலையை ஒரு தோல் பையில் போட்டுக் கொண்டுஅதின்மேல தன் புருஷனுடையபெருஞ் சொக்காய்களைப் போர்வையாக மூடிக்கொண்டு, பிற கெல்லாவற்றையும் ஒரு இழவுவண்டியில் (Mourning Coach) வைத்துக்கொண்டு தம் வீட்டுக்குக் கொண்டுபோனார்; இப்படிச் செய்து இந்தத் தலையை 29-வருஷம் ஒரு பெட்டியில் வைத்துக் காப்பாற்றி இறந்தார். இந்தம்மாளுக்குப்

பிறகு இவள் பிரியமுள்ள செல்வப் பிள்ளை (Carew) வெகு பயபக்தியுடன் காப்பாற்றி வந்தான். இந்தப் பிள்ளை யிறந்த போது இந்தப் பிள்ளையுடன் இந்தத் தலையும் புதைக்கப் பட்டது. தலையிக்கதியடைய, இவன் தேகத்தின் முண்டமானது இந்த வெஸ்ட் மின்ஸ்டர் கோயி லில் ஒரு ஆழ்வாரின் சந்நிதானத்தில் (Altar of St. Margaret's) புதைக்கப்பட்ட தென்று சொல்லுகிறார்கள். இதற்குப் பிறகு வெகுநாள் கழித்து இன்னும் அதிசயமான செய்தி ஒன்று நடந்தது:— இராஜத் துரோகத்தால் இராஜ ஹத்திசெய்த ஒரு சேனைபதி (Cromwell) தேக மானது, அது புதைக்கப்பட்டவெகுநாள் கழித் துப் பேர்த்து தோண்டி எடுக்கப்பட்டு அதினின் றும் தலை துண்டிக்கப்பட்டது. இத் தலையும் இன்னும் இராஜஹத்தி செய்தவர்களுடைய தலை களும் (Ireton and Bradshaw) தலைக்கு ஒரு கொம்பு கொடுத்துச் சூரன் தலைபோல் வெஸ்ட் மின்ஸ்டர் கூடத்தில் (Hall) நட்டுவைக்கப்பட்டன. இவர்களில் ஒவ்வொருவனும சூரன் என்பதில் தடையில்லை; சூரன் அண்டாதி அண்டமெல்லாம் ஆண்டான்; சிவபக்தன். அப்படியே இம்மூவரும் ஐரோப்பாதேசத்தில்வெகுசெல்வாக்குடன் அரசு புரிந்தமகான்கள்; வெகுமதாபிமானிகள், இயேசு கிறிஸ்துவிடத்தில மகா நேசம் வைத்து வந்து பய பக்தியுடன் நாட்டை ஆண்டு வந்தார்கள்; சூரன் போலவே, இவர்கள் பண்ணினநரஹத்தி கணக்கு வழக்கில்லை. அயர்லாண்டில்மாத்திரம் ஆயிரக்கணக்

காய் மாதாக்கோயிலில் போய் ஒளித்துக் கொண்டகுடிகளை வெள்ளரிக்காய்போல நறுக்குநறுக்கு என்று நறுக்கித் தள்ளினார்கள். ஆயினு மக்காலத்தில் இவர்களில்லா விட்டால் இங்கிலாண்டுக்கு இவ்வளவு பலமும் செல்வாக்கும் உண்டாயிருக்க மாட்டா.

இவ் வெஸ்ட்மின்ஸ்டர் கூடத்தில் இம்மூவர்கள் தலை வெகுகாலம் அங்கு வநதோரை யெல்லாம் விழித்து விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தன; இதற்குப் பிறகு, 250-வருஷம் கழித்து இந்தச் சேனபதிக்கு ஒரு சிலையடித்து வைக்கப்பட்டது. இவன் தலை அங்கே கொம்பிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த இடத்துக்கு அருகாமையிலேயே கொஞ்ச கஜதூரத்தில் வைக்கப்பட்டது. இப்படித்தான் விதிப்பயன் என்பது! இங்கே உள்ள ஒருநதிக்கு ஒருபாலம் (Westminster bridge) கட்டுமுன்னால் குதிரை ஓடம் (Horse - ferry) என்று ஒரு ஓடத்துறை இருந்தது. இந்தத் துறையானது ஒரு பிரதான குருமாரின் (Archbishop of Canterbury) ஆதீனத்தில் இருந்தது; அதில் வருகிற வரும்படியெல்லாம் அவரே அனுபவித்துவந்தார். இந்த நதிக்கு அக்கரையில் இந்தப் பிரதான குருமாரின் மாளிகை யிருக்கிறது. இதில் நூற்றாண்டுக் கணக்காய் அவர் இருந்துவருகிறார். இங்கே ஓடம் ஓட்டுவதில்இவர் தவிர வேறொருவருக்கும் உரிமையிருக்கக் கூடாதென்று அரசன் இவர்க்கு ஒரு மானியம் போல

அதை (அந்த ஓடம் ஓட்டும் உரிமையை) விட்டிருந்தான். இப்போது ஓடம் ஓட்டும் வாடிக்கை நின்றுபோய்விட்டது, அதற்குப் பதிலாய், தொங்கிக்கொண்டிருப்பதுபோல ஒரு பால மமைக்கப்பட்டிருக்கிறது; அதில் தான் இப்போது சனங்கள் நடந்து போகிறார்கள்; இந்தப் பாலத் தண்டை இப்போது குதிரை ஓடத்துறைச் சாலை (Horseferry Road) என்று ஒரு சாலையு மிருக்கிறது; இந்தத் துறையில் இந்தப் பிரதானநதுமார் மிகச் சம்பாதித்து வந்த தாகத் தெரிகிறது; ஏனெனில், ஒவ்வொரு தடவையில் இந்தத்துறையில் ஒரு ஆளுக்கும் அவன் குதிரைக்கும் 2-ஷில்லிங் அதாவது ரூ 1–8–0 யும், குதிரைவண்டி ஒன்றுக்கு ரூ0–12–0வும், பாரவண்டி ஒன்றுக்கு ரூ 1–2–0 வும்கூட வாங்கப் பட்டுவந்தது; ஏன் இவ்வளவுயர்த்தியானசத்தம் (Fare) வாங்கிவரப்பட்டது என்றால், நதியைக் (The Thames) கடக்க இந்த ஓடத்துறைதவிர வேறேவழியில்லையாம்.

1688-ம் ஆண்டில் இங்கிலாண்டில் ஒரு கலகம் நடந்தது. அப்போது II-வது ஜேம்ஸ் ராஜனின் மனைவி பக்கத்து நாடாகிய பிராஞ்சுதேசத்துக்கு ஓடியே போனாள் :—குளிர்காலத்தில் ஒரு நாள்இராத்திரி அரண்மனையைவிட்டுவிட்டுத் தன் கைக்குழந்தையோடும் இன்னும் சில தோழிகளோடும், ஒரு பெரியமனுஷ வேலைக்காரனுடன் (Gentleman-in-waiting) இந்த ஓடத்துறைக்கு

வந்தாள். அங்கே எல்லாருமாய்ச் சேர்ந்து ஒரு படகேறிநதிக்கக்கரைபோய்ச்சேர்ந்தார்கள். அன்றை இராத்திரி வெகு ஊதலாயும் சீறலாயு மிருந்தது; தும்மிருட்டாய்க் கிடந்தது; ஓடத்தில் போம்போது ஒருவர் மூஞ்சி ஒருவருக்குத் தெரியவில்லை; எல்லாரும் கிட்டத்தில் பக்கத்தில்தான் உட்கார்ந்திருந்தார்கள்; படகு வெகு சின்னதானதால் ஒருவர் பக்கத்தில் ஒருவர் உட்காராமல் முடியவில்லை; மழையோ கொட்டுகொட்டெனக் கொட்டிற்று. அக்கரை சேர்ந்தவுடனே இந்தம்மாளுக்கென்று சித்தமாய்க் காத்துக் கொண்டிருந்த ரா [illegible] (coach) வண்டியை வெகு பிரயாசத்துடன் அந்தப் பெரிய மனுஷர் போய் இட்டுக்கொண்டு வந்தார். இந்த வண்டி வருகிற வரையில் பிரதான குருமாரின் கோயில் மதிலின் கீழ் இராணியும் புடை சூழ்ந்தார்களும் மழைக்கு ஒண்டிக்கொண்டிருந்தார்கள். அப்போது வண்டி வந்தபிறகு கடல்துறைமுகத்துக்கு(Gravesend) ஏறிப்போனார்கள். அப்போது அங்கே ஒரு சிறு கப்பல் இவர்க்காகக் காத்துக்கொண்டிருந்து பிராஞ்சுதேசத்துக்குஏற்றிக்கொண்டுபோயிற்று. பிராஞ்சுக்கும்இங்கிலாண்டுக்கும்சுமார்50-60மைலில் கப்பற் பிரயாணந்தான் இருக்கும்.

இப்படிப்பட்ட இடத்திலிருக்கப்பட்ட ஆபிக் கோயிலில் முடிசூட்டுத் திருநாள் கொண்டாடப்பட்டது.



# 3-வது இன்பம்.

# முடிசூட்டுச்சடங்கின் விவரம்.

## பிரதான மந்திரியின் தொடங்குரை.

வெஸ்ட் மின்ஸ்டர் ஆபிக்கோயிலில் நடக்கும் முடிசூட்டுச் சடங்கு தொடங்குமுன், முக்கிய மந்திரியானவர் (Premier) அங்கு கூடிக் கிடக்கும் குடிகளுக்குப் பின் காட்டியபடி முடிசூட்டைத் தெரிவிப்பார்:—"கனவான்களே! காலஞ்சென்ற மகாப் பிரபுவான மிகப் பிரியமுள்ள விக்டோரியா ராணியாரின் குமாரரான எட்வர்ட் நம்மரசர் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை என்று தங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். இன்றைக்கு நம்மரசர் அரசியார் எண்ணெயிடப் பட்டுப் பின் சொல்லப்போகிற விதமாய் முடி சூட்டிக் கொள்கிறார்கள்:—முதல் முதல் இராஜன், தம் உன்னதமான அந்தஸ்தில் ஆணையிட்டுக் கொடுக்கவேண்டிய நியாயம்போல ஆணையிட்டுக் கொடுக்கிறார்; அரசுக் குடிச்சபையில் (Parliament) எல்லாரும்ஒப்புக்கொண்டபடி அமைக்கப் பட்ட சட்டங்களையும் இன்னும் அந்தந்த நாடுகளுக்குத் தக்கபடிஏற்பட்டசட்டங்களையும், வழக்கங்களையும் தழுவித் தம்தேசத்துப் பிரஜைகளை

யும், அதற்குச் சேர்க்கப்பட்ட இதரதேசங்களில் வாழுங்குடிகளையும் ஆண்டுவருவதாகவும்; தாமே தீர்மானம் செய்யும் விஷயங்களில், சட்டம், நியாயம் இவைகளை மிகக் காருணியமாய் நடத்தவும்; தாம் கடவுளின் ஒழுங்குகளுக்கு விரோதமில்லாமல், நிஜமான கிறிஸ்தவ வேதத்தை அனுசரித்து, சட்டத்தால் நாட்டில் நாட்டப்பட்ட பிராடெஸ்டண்ட் மதத்தைக் காப்பாற்றவும்; இங்கிலாண்டில் சட்டத்தால் ஏற்பட்ட சர்ச் அப் இங்கிலாண்ட் என்னும் கொள்கை, அதின்படி நடக்கவேண்டிய பூஜை, பயிற்சி, நடவடிக்கை இவற்றைச் சற்றேனும் பிசகாமல் காப்பாற்றவும் இன்று ஆணையிட்டுக்கொடுக்கிறார். பிறகு மகாப் பிரபுக்குப் பயபக்தியுடன் எண்ணெய் இடப்படும்; ஏனென்றால், இப்படியே பூர்வகாலந்தொட்டு, அதாவது, பைபில் உண்டாவதற்குமுன் தொட்டு இந்த வழக்கம் வந்துகொண்டிருக்கிறது! எண்ணெய் இடப்பட்ட பிறகு அவர் இடுப்பில் நல்ல நெறிக்கு அறிகுறியான ஒருகத்தி சுற்றிக் கட்டப்படும்; ஏகாதிபத்திய உடைகள் போடப்படும்; சிலுவைவைத்தஉருண்டை ஒன்று (Orb), மோதிரம்ஒன்று, சிலுவைவைத்ததடிஒன்று, புறாவைத்த தடி ஒன்று இவையாவும் கொடுக்கப்படும். பிறகு மகாப்பிரபு புராதனமாய் இருக்கும் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு முடிசூட்டப்படுவார். முடிசூட்டுக்குப் பிறகு புண்ணியகரமான பைபில் கொடுக்கப்படுவார். இந்தப் பைபில் தான் இந்த உலகத்தில் மனுஷனுக்கு முக்கியமாய் வேண்டியது;

இந்தப் பைபிலில்தான் ஞானமெல்லாம் காணலாம்; இந்தப் பைபிலில் தான் இராஜரீகச் சட்ட (Royal Law) மெல்லாம் காணலாம்; இந்தப் பைபிலில் தான் கடவுள் மக்களுக்கு வெளியிட்ட இரகசியங்கள் யாவும் துணியில் பத்திரமாய்க் கட்டிவைக்கப்பட்டதுபோலக் காணலாம். இந்த மாதிரி இராஜன் முடிசூட்டப்பட்ட பிறகு இராஜாத்தியும் முடிசூட்டப்படுவார். கடையிசில் இராஜனுக்கு அங்கு வந்திருக்கும் குருமார்களும், பிரபுக்களும் தலைவணக்கம் செய்ய மகாப் பிரபு அதை அங்கீகரிப்பார்."

## முடிசூட்டுத் திருக்கோயில் சடங்கு.

இந்தத் திருக்கோயில் சடங்கு 19-பங்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் (1) பங்கு "முயற்சி":— "ஆபி" கோவிலுக்கு மேலே வாசற் கதவுக்கு வெளியில் தலைப்பாகைகள் போட்டுக்கொண்டு பிரதான குருமார்களும் சிறிய குருமார்களும் (Bishops) கூட்டங்கூடிக்கொண்டிருப்பார்கள். மகாப்பிரபுக்கள் இருவரும் (King & Queen) அந்தக் கதவண்டை வருவதை எல்லாரும் தரிசித்து அங்கேயிருந்து ஒரு வரிசையாய்க் கோயிலுக்குள் பிரவேசிப்பார்கள். இரண்டாம் (2) பங்கு "கோயிலுக்குள்பிரவேசம்":—இப்படிக்கோயிலுக்குள் மகாப் பிரபுக்கள் பிரவேசமாகும்போது வெஸ்ட்மின்ஸ்டரில் இருக்கும்பண்பாடுவோர்கள் தம்பண்ணைப் பாடுவார்கள். பாடும்போது உள்ளே சிம்மாசனங்கள்பக்கமாய்ப் போய்த்தெய்வத்தைப்

பணிவுடன் வணங்குவார்கள், பணிந்துவிட்டுச் சிம்மாசனத்தின் கீழ் அவற்றின் சந்நிதியில் போட்டிருக்கும் நாற்காலிகளில் வீற்றிருப்பார்கள். மூன்றவது (3) பங்கு "அங்கீகாரம்":—காண்டர்பரி முக்கிய குருமார் குடிகளைப்பார்த்து இனியபேச்சு பேசிக்கொண்டிருக்கும்போது, மகாப்பிரபு தம் நாற்காலியண்டை எழுந்து நின்றுகொண்டு அங்கே மண்டபத்தில் ஒவ்வொரு பக்கத்திலும் காத்துக் கிடக்கும் குடிகள்பக்கம் திருப்பிக்கொண்டு தம்மைக் காட்டிக்கொள்வார். முக்கிய குருமார் குடிகளைப்பார்த்து "ஐயா! இதோ! தங்கள் இராஜனை எட்வர்ட்டைப் பாருங்கள்; இவர்தான் தங்களரசுக்கு ராஜன் என்பதில் ஒரு ஐயமுமில்லை. தாங்கள் யாவரும் அரசரை வழிப்படுவதற்கு இங்கு சேர்ந்திருக்கிறீர்கள். அப்படி வழிப்பாடு செய்யத் தங்களுக்கு இஷ்டமா?" என்று கேட்பார். இப்படிக் கேட்டவுடன் குடிகள் யாவரும் ஒரே மனதாய் உரக்க இரைந்து "எட்வர்ட் மகாராஜா வாழி" என்று வாழ்த்தி பாடிக் கைகொட்டுவார்கள். பிற்பாடு பைபிலைக் குருமார்கள் பலிபீடத்தில் (Altar) வைப்பார்கள். பிறகுபலிபீடத்தின் தென்புறத்தில் மகாப் பிரபுக்கள் இருவரும் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் மணைக்கு (Faldstool) வந்து முழங்கால்மட்டிபோட்டுக்கொண்டு வணங்குவார்கள். அப்போது லிடனி என்ற பண் படுவார்கள். இந்த லிடனிப்பண் இச்சடங்கின் நான்காம் (4) பங்கு:—இந்த லிடனிப் பண்ணானது இரண்டு குருமார்களால் பாடப்படும். இந்தக

குருமார்கள் பாடும்போது அதற்கு முறை வைத்து அங்குள்ள பண் பாடும் கூட்டத்தார் மறுமொழி பாடுவார்கள். ஐந்தாவது (5) பங்கு "சுவாமி நிவேதன வினியோகம்" (Communion Service). ஆறாவது (6) பங்கு உபதேசம்: இது இந்தமாதிரியான பெரிய விசேஷங்களுக்குத் தகுந்ததுதான். இது மிகவும் சிறியதாய் இருக்கும். வினியோகத்துக்கு முன் லிடனிப் பண் பாடும்போது மகாப்பிரபு எல்லார்க்கும் பெட்டி காண்பிப்பார். உபதேசம் ஆரம்பிக்கும்போது இரண்டு மகாப் பிரபுக்களும் தங்கள் தங்கள் நாற்காலியில் வீற்றிருந்து பட்டுத் தலைப்பாகை தரிப்பார்கள். அப்படியே கடைசிவரையில் பட்டுத் தலைப்பாகையோடேயே இருப்பார்கள். டர்ஹாம் நகரத்துக் குருமார் அரசரின் வலது பக்கம் நின்றுகொள்வார்; கொஞ்சம் எட்டி அதே பக்கத்தில், பிரபுக்கள் இரண்டுகத்திகள் தரித்துக் கொண்டு நிற்பார்கள். மகாப் பிரபுவின் இடது பாகத்தில் பாத்வெல்ஸ் என்ற குருமாரும் பெரிய சாம்பர்லேன் என்ற பிரபுவும் வீற்றிருப்பார்கள். ராணியாரின் இரண்டு பக்கத்தில் இரண்டு குருமார்கள் நின்றுகொண்டு ராணியாரைக் காத்து வருவார்கள். சடங்கு நடக்கும்போது பின்புறம் பாவாடைதூக்குவோர்களும் தோழர்களும்ராணியாரண்டை இடைவிடாது காத்துக்கொண்டேயிருப்பார்கள்.

ஏழாவது(7)"ஆணை":—இந்த ஆணை என்னவென்றால்: 1901-ம் வருஷம் பிப்பிரவரி மாதம்

14-ந் தேதியன்று, விக்டோரியா ராணியார் காலஞ்சென்றபிற்பாடு, அரசுக்குடிச்சபையிலடங்கிய இரண்டு கூட்டத்தாருக்கும் (Lords and Commons) சத்தியம்பண்ணிக்கொடுத்துக் கையெழுத்துப்போட்ட ஆணை. ராஜாவின்சந்நிதானத்தில் சற்று எட்டி நின்றுகொண்டு காண்டர்பரிப் பிரதானகுருமார் அவரை முடிசூட்டுக்குரியஆணையிட்டுக்கொடுக்கக்கேட்பார். அப்படிச்சொல்லும்போது "ஐயா! தங்கள் கனத்துக்கு ஆணையிட்டுக் கொடுக்க இஷ்டமிருக்கிறதா?" என்று கேட்பார். அரசர் "எனக்கு இஷ்டந்தான்" என்று சொல்லுவார். அப்போது, பிரதான குருமார் ஏற்கெனவே சித்தப்படுத்தியிருக்கும் கேள்விகளை அரசருக்குப்போடுவார். அரசர் முறையே விடைகொடுத்து எழுந்திருக்க, முன்போல் பலபேர் புடைசூழ, தம் சந்நிதானத்தில் அரசுமுறைக் கத்தி (Sword of State) முன்னே பிடிக்கப்படும். இந்தமாதிரியான கோலத்தோடு பலிபீடத்தண்டை போவார். குடிகள் எல்லாருக்கும் எதிர்நின்று அங்கே மெய்விரித்துச் (uncovered) சுபமான சத்தியவார்த்தைகளடங்கிய ஆணையிட்டுப் பேசுவார். பேசும்போது தம் வலதுகையைப் பெரிய பைபிலில் இருக்கும் பரிசுத்தமான சுவிசேஷத்தண்டை (Holy Gospel) வைத்துக் கொள்ளும்படி பலிபீடத்திலிருந்து பைபிலைப் பிரதான குருமார் அரசருக்குக் கொண்டுவந்து கொடுப்பார். கொடுக்கும்போது, அரசர் பலிபீடத்துப் படிகளில் முழங்கால் மட்டும் போட்டுக்

கொண்டு "ஏற்கெனவே வாக்குறுதிசெய்த இந்தச் செய்திகளை நான் செய்யக்கடவேன்; நிலைக்கச் செய்வேன்; கடவுள் என்னை ரக்ஷிக்கவேண்டும்" என்பார். பிற்பாடு அரசர் பைபில் புஸ்தகத்தை முத்தமிட்டு ஆணையில் கையெழுத்துப் போட்டுவிடுவார்.

"எண்ணெய்இடல்" என்பது இந்தச்சடங்கில் எட்டாம் (8) பங்கு:—பிரதான குருமார், மகாப்பிரபுக்க ளிருவரும் மேற்குறித்தபடி மண்டிபோட்டுக்கொண் டிருக்கும்போது "வெனிக்ரியேடர்ஸ்பிரிடஸ்" என்ற பைபில் வாக்கியத்தைப் பாடத்தொடங்குவார், உடனே பண்பாடுவோரும் கூடப்பாடுவார். இந்தப் பாட்டுக்கள் சொல்லிப் பாடி முடியுங்காலத்தில், பிரதான குருமார் ஒரு தோத்திரம் சொல்லுவார். உடனே பின்னோடு வழக்கமான பல்லவி (Authem)யும் பாடப்படும். இதற்குள் மேற்சொன்ன பெரிய சாம்பர்லேன் பிரபு அரசரான மகாப்பிரபுவின் அங்கிகளைக் கயற்றி யிருப்பார்; மகாப்பிரபு இராஜரீகத் தலைப்பாகையை எடுத்துவிட்டு பலிபீடத்தண்டை போவார்; தமக்குப்போட்டிருக்கும் நாற்காலியில் வீற்றிருப்பார். அந்த நாற்காலியி லுட்கார்ந்த பிறகு பிரதான குருமார் அரசருக்குத் தலையில் எண்ணெயிட்டு, அரசர் மறுபடியும் மண்டிபோட்டுக் குனியும்போது ஆசீர் வசனங்கள் பாடுவார். ஒன்பதாவது(9)பங்கு என்பது, குதிமுள்(Spurs) கொடுத்து இராஜரீகக்கத்தியையும் அரசர்க்கு இடுப்

யில்சுற்றிக்கட்டிச் சுவாமிக்கு நிவேதனமாக அர்ப்பணம் பண்ணுவது. "இந்த இராஜரீகக் கத்தியை அங்கீகரியுங்கள், அதைக் கடவுளின் பலிபீடத்திலிருந்து கொண்டுவந்திருக்கிறோம்; கடவுளின் திருத்தொண்டர்களாகிய நாங்கள் தங்களுக்கு அதைக் கொடுக்கிறோம். நாங்கள் எவ்வளவு எளியர்களானாலும் அந்தக் கத்தியை வாங்கிக்கொள்ளப் பிரார்த்திக்கிறோம்" என்று பிரதான குருமார் அப்போது அரசரைக் கேட்டுக் கொள்வார். மேற்படி சாம்பர்லேன் பிரபு அந்தக் கத்தியை அரசர் இடுப்பில்சுற்றிக் கட்டுவார். அன்றி, அரசரின் குதிகால்களை மேற்சொன்ன பிரபு குதிமுள்களால் தொட்டுவிட்ட பிறகு அவை பலிபீடத்தில் கொண்டுபோய்த் திருப்ப வைக்கப்படும்; அரசர் கத்தியை இடுப்பைவிட்டுக் கழற்றிப் பலிபீடத்துக்குப்போய் உறையில் வைக்கும்படிக் கொடுத்துவிடுவார். அந்தக்கத்தியை முதல்முதல் வாங்கின பிரபு அந்தக் கத்திக்கு விலைகொடுத்து வாங்கிக்கொள்வார்; இந்தப்படி அக்கத்தியான சுவாமிசொத்தை நிர்மாலிய நிலையினின்றும் நீக்கிவிட்டு (Redeemed) அரசர் சந்நிதானத்தில் உறையில்லாமல்பிடித்துக்கொண்டு இருப்பார். பத்தாவது (10) பங்குநடக்கும்போது, அரசர் மேல்வஸ்திரத்திய உடுப்புகள்போடப்பட்டுச்சிலுவை (Cross) வைத்த உருண்டையும் கொடுக்கப்படும். இந்தமாதிரி வெஸ்ட்மின்ஸ்டர் நகரத்தின் குருமார் செய்வார். உடுப்புகளைப்போட்டவுடன் அந்தஉடுப்பின் கொக்கியைப் பெரிய சாம்பர்லேன் பிரபுமாட்

டுவார். இந்த உடுப்புகள் போடும்போது அவர் எழுந்து நின்றுகொண் டிருப்பார். அவர் உட்கார்ந்தவுடன் சிலுவைவைத்த உருண்டையொன்று பலிபீடத்திலிருந்து பிரதான குருமார் கொண்டு வந்து அரசர் கையில் கொடுப்பார். கொடுக்கும் போது ஆசிர் வசனமும் தைரியமும் சொல்லிக் கொடுப்பார். பதினொராவது (11) பங்காவது:— பிரதான குருமார் அரசர் வலது கையில் 4-ஆவது விரலில் இராஜாதிகாரத்தின் அறிகுறியான மோதிரமொன்றை யிட, கையுறையை (Gloves) ஒரு தொண்டர்ப் பிரபு கொடுக்க, அரசர் தம்கையில் அந்த உறையைப் போட்டுக் கொள்வார். உடனே அரசுநாட்டாண்மைக்கோலும் சிலுவையோடு வலதுகையில்வைக்கப்படும்; அப்படி வைப்பது அரசர் இராஜாதிகாரம் வகித்தார் என்றும் இனி அவர் நெறிதவறாது அரசு புரிவார் என்றும் அர்த்தம். இடது கையில் மறுெருரு கோல் ஒரு புறவுடன் வைக்கப்படும்; அதினால், அரசர் இனி நடுநிலை வழுவாது தயாளுவாய் அரசாள்வார் என்று பொருள். முன் கையுறை கொடுத்த தொண்டர்ப்பிரபு அரசர் மகாப் பிரபுவின் வலது புஜத்தைத்தாங்கி நிற்பார். 12-ம் பங்கு முடி சூட்டுதல்:—காண்டர்பரிப் பிரதான குருமார் பலிபீடத்தின் சந்நிதானத்தில் நின்று கொண்டு ஒரு கடவுள் ஸ்தோத்திர வசனம் சொல்லுவார். பிறகு, வெஸ்ட்மின்ஸ்டர் டீன் அரசரிருக்கும் நாற்காலிக்கு அந்த முடியைக் கொண்டு வருவார். காண்டர்பரிப் பிரதான குரு

மார் மகாப்பிரபுவான அரசர் தலையில் வெகு மரி யாதையாயும் வணக்கமாயும் அதை வைப்பார்; இதைப்பார்த்துவிட்டு அந்தக்கோயிலில் இருக்கும் ஜனங்கள் யாவரும் உரக்க இரைச்சலுடன் "அர சரைக் கடவுள் காப்பாற்றுக" என்று அடிக்கடிக் கைகொட்டிக் கத்தவேண்டும்; அப்போது பிரபுக் களும் "கிங்ஸ்ஆப் ஆர்ம்ஸும்" (Kings of Arms) தங்கள் தங்கள் கிரீடங்களைப் போட்டுக்கொள் வார்கள்; தப்பட்டைகள் அடிக்கப்படும்; அப் போது உண்டாகும் ஒரு அமிர்குறியைப் பார்த்து கோபுரத்தில் (Tower) இருக்கும் பெரிய பீரங்கி களிலிருந்து அதிர்வெடிகள் சுடப்படும். பதின் மூன்றாவது (13) பங்கு என்பது புண்ணியகரமான பைபிலை அரசருக்குக் கொடுப்பது.

அரசருக்கு இந்தமாதிரி எண்ணெய் இட்டு முடிசூட்டி இராஜரீகத்துக்குரிய எல்லாப் பிருது களும் கொடுத்தபிறகு, பதினாலாவது (14) பங் குச்சடங்குசெய்யப்படும்:—அதாவது, அரசருக்கு ஆசீர்வாதமும் ஜனங்களுக்கு உபசாரமும் சொல் லுவது. எல்லாக் குருமார்களும், இதர பிரபுக்க ளுடன், ஆசீர்வாதத்தின் ஒவ்வொரு அம்சத்தை யும் ஸ்பஷ்டமாய் உரக்க உச்சரித்து இரைந்து கொண்டு மனப்பூர்த்தியாய்த் ததாஸ்து என்று சொல்லுவார்கள்.

பதினைந்தாவது (15) சடங்கு சிங்காதன மேறல்:—உபசாரவார்த்தைகள் முடிந்தவுடன்பிர தான குருமார்களும் சிறிய குருமார்களும் மற்

றப் பிரபுக்களும் அரசரை எழுப்பிச் சிங்காதனமிருத்திய பிறகு இரண்டு கத்திகள், இரண்டு கோல்கள் ஆகிய இவை பிடிக்கும் உத்தியோகஸ்தர்களும் இதர இராஜரீக பிருதுகள் பிடிக்கும் பிரபுக்களும் சிங்காசனமேடைப் படிகளைச் சுற்றி நிற்பார்கள். பிரதான குருமார் அரசர் சந்நிதானத்தில் நின்றுகொண்டு அரசரைப்பார்த்து "ஒரு நிலையாயிருந்து உறுதியாய் நிற்கவும்" என்று தைரியம் சொல்லுவார்.

இந்தமாதிரி அரசருக்கு மனோதைரியம் சொல்லுதல் ஆனபிறகு, இராஜ்யத்து எல்லா இளங்கோமக்களும்பிரபுக்களும் அரசருக்கு வணக்கஞ் செய்வது பதினாறுவது (16) பங்காம்:—ஒவ்வொருவரும் அரசரண்டைபோய் வணங்கிவருவது கஷ்டசாத்தியமா யிருக்கிறது மல்லாமல் மிகக் காலந்தாழ்க்குமாதலால், பிரதான குருமார்களும் சிறிய குருமார்களும் சேர்ந்து அத் திருக்கோயிலில் கூடிய சபையார்க்குப் பதிலாய்த் தாமே வணக்கம் செய்து விடுவார்கள். அப்போது, பிரதான குருமார் அரசரின் இடது கன்னத்தை முத்தமிடுவார். பிறகு வேல்ஸ் கோமகன் தம் சிறு கிரீடத்தை எடுத்துவிட்டு அரசர்முன்னால் மண்டிபோட்டுக்கொண்டு நிற்பார்; இராஜவம்சத்துமற்ற இளங் கோமக்களு மவ்வாறே மண்டிபோட்டுக்கொண்டு நிற்பார்கள்; வேல்ஸிளவரசர்போலமற்ற இளவரசர்களும் தத்தம் சிறு சிறு கிரீடங்களை எடுத்து விடுவார்கள்; எல்லா இளவரசர்களுடன்

வேல்ஸிளவரசர் பின் வருமாறு வாய்புதைத்துப் பேசுவார்: "வேல்ஸிளவரசான நான் தங்களுக்கு என் உயிரும் சர்வாங்கமும் தியாகம் பண்ணி இந்தப் பூமண்டலத்தில் தாங்களே சர்வேச்சுரனென்று பூஜிக்கும் அபிமானமுள்ள மனுஷனாகிறேன்; தங்களுக்கு நம்பிக்கையும் உண்மையும கொண்டு நடப்பேன்; இப்படி நடந்துகொண்டு எந்தமாதிரியான மனுஷன் தமக்குப் பகையாய் வந்தாலும் அவனுக்குத் தங்களை விட்டுக்கொடுக்காமல் வாழ்ந் துயிர் துறக்கச் சித்தப்படுகிறேன். இந்தமாதிரியாகச் சுவாமி எனக்குத் தயவும் கிருபையும் செய்யட்டும்". இந்தமாதிரியே அந்தந்தக் கோமகன் தன்தன் பேரிட்டுப் பேசுவான். அப்போது இளங்கோக்கள் யாவரும் மகாப் பிரபுவான அரசரின் சிரசில் இருக்கும் முடியைத் தொட்டுத் தொட்டுப்போவார்கள். தொடும்போது மகாப்பிரபுவின் இடது கன்னத்தை முத்த மிடுவார்கள்; அரசிலுள்ள பிரபுக்கள் யாவருமப்படியே தனித்தனியாய்த் தங்களிடத்திலிருந்தே வணங்கி வழிப்பாடு செய்வார்கள். முதல் முதல் டியூக்குகள் (Dukes), இரண்டாவது மார்க்வெஸ்கள்; (Marquesses), பிறகு எர்ல்கள் (Earls), அப்புறம் வைகௌண்ட்கள் (Counts), கடைசியாய்ப் பாரன்கள் (Barons);— எல்லாரும் தத்தம் இடத்திலிருந்து கொண்டே அவரை வழிப்படுவார்கள். ஒவ்வொரு அந்தஸ்துப்பிரபுக்கூட்டத்து முதல் பிரபுவும் அரசர் முன்பாக மண்டிபோட்டுக் கொண்டு நிற்பார்; பிறகு அக்கூட்டத்து மற்றவர்

கள் மண்டிபோட்டு நிற்பார்கள். மேற்சொன்ன முதல் பிரபு ஒவ்வொருவரும் அரசரின் சிரசில் இருக்கும் முடியைத்தொட்டுத்தொட்டுப்போவர்; ஏனென்றால், அப்படித்தொட்டால்தான் அரசரின் முடியைத் தம்மாலானமட்டும் காத்துவருவோமென்று வாக்குத்தத்தம் செய்து கொடுத்ததாக அர்த்தமாகும் (இந்த வழக்கம் நம்மவர்க்குள்ளும் உண்டு: ஒருவன் வாக்குறுதி கொடுக்க வேண்டுமென்றால், கைபோட்டுக் கொடுக்கிறன்); முடியைத் தொட்டுவிட்டு அரசரின் கன்னத்தையு முத்தமிடுவார்கள். இந்தமாதிரி வழிப்பாட்டுச் சடங்கு முடிந்தவுடன் முரசு கொட்டுவார்கள்; பாண்டு வாசிப்பார்கள். அப்போது எல்லா ஜனங்களும் ஒன்றுகூடிக்கத்திக்கொண்டே,

அரசேட் வார்டைக் கடவுளே காக்க,
அரசேட் வார்ட் நீ டூழியே வாழ்க,
அரசேப் போதும்நன் றாயே வாழ்க

என்று மங்களம்பாடிக் கைகொட்டுவார்கள்.

"அரசி முடி சூட்டு" என்பது பதினேழாவது (17) பங்கு:—இது "யார்க்" நகரத்துப்பிரதான குருமாரால் நடத்தப்படும். அரசியாரைப்பலிபீடத்தண்டை இரண்டு குருமார்கள் தாங்கிக்கொள்ள யார்க்கின் பிரதான குருமார் கடவுள் வாழ்த்து ஒன்று சொல்வார். மகாப் பிரபுவான அரசிக்குத் தலையில் பிற்பாடு எண்ணெயிடப்படும். அதுகழிந்தவுடன் பிரதான குருமாரானவர் உள்ளம்பொருந்திபநேசத்துக்கு அறிகுறியானமோதிரத்தை அர

சியாரின் நான்காவது விரலில் போடுவார். பிறகு அவர் பலிபீடத்திலிருந்து மகுடத்தைக்கொண்டு வந்து அரசியாரின் சிரசில் வைத்துவிடுவார். அப்படி வைத்த பிறகு, பிரபுமனைவிகள் யாவரும் தம் தம் சிறுசிறு மகுடத்தைத் தலையில் சூடுவார்கள். உடனே பிரதான குருமார், அரசிக்குரிய கோல் ஒன்றை அரசியாரின் வலது கையில் வைத்துத் தந்தக் கோல் ஒன்றை ஒரு புறுவுடன் அவர் இடது கையில் வைப்பார். இந்தமாதிரி அரசியார்க்கு ஊழியம் செய்துவிட்டுக்கடவுள்வாழ்த்து ஒன்று சொல்லுவார். இப்படி பெண்ணை யிட்டுக் கொண்டும் முடி சூட்டிக்கொண்டும் நகைகள் பூட்டிக்கொண்டும் அரசியார் நடந்து போகும் போது இரண்டு குருமார்கள் அவரைத் தாங்குவார்கள். நடந்துகொண்டே கோயிலில் சிம்மாசன மேடையேறி சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் அரசரண்டை போகும்போது அரசருக்குத் தலைவணங்கி நிற்பார். பிறகு தம் சிங்காதனம் போயுட்கார்வார். இப்படியெல்லாம் சடங்குகள் நடந்தபிறகு சிரமபரிகாரக் கோலங்கள் நடக்கும்; இக்கோலங்கள்தான் பதினெட்டு (18) பத்தொன்பதாவது (19) பங்குகளாகும். சிரமபரிகாரமான பிறகு எல்லாரும் சேன்ட் எட்வர்ட் சாபல் என்னும் சந்நிதிக்குப் போவார்கள். இங்கே இராஜனும் இராஜாத்தியும் முடிசூட்டுக் காலத்தில் போட்டுக்கொண்ட உடுப்புகளை அவிழ்த்துவிட்டு ஒப்பற்ற நிலைமைக்கு அறிகுறியான உடுப்புகள் உடுத்து வந்தவழியே அரண்மனை போவார்கள்.

# ஐரோப்பாவில் பற்பல நாடுகளில் முடிசூட்டுக்காலத்தில் அரசன் இட்டுக்கொடுக்கும் ஆணை.

இந்தச் சடங்கின் 19 பங்குகளில் ஏழாவது பங்கு ஆணையிட்டுக் கொடுப்பது; அப்போது அரசனுக்கும் காண்டர்பரி நகரத்து முக்கிய குருமார்க்கும் (Archbishop) நடக்கும் வினா விடைகள்:—

முக்கியகுருமார்:— ஐயா! மகாப் பிரபுவுக்கு ஆணையிட்டுக்கொடுக்க இஷ்டமா?

மகாப்பிரபு: —இஷ்டந்தான். (பிறகு மகாப்பிரபுவுக்கு முக்கியகுருமார் ஒரு பைபில் கொடுப்பார்; அதைக் கையில் வைத்துக்கொண்டு முக்கிய குருமார் போட்ட கேள்விக்கெல்லாம் மகாப் பிரபு விடை சொல்லிக்கொண்டே வருவார்.)

முக்கிய குருமார்.—அரசுக்குடிச் சபையில் எல்லாரும் ஒப்புக்கொண்டபடி அமைக்கப்பட்ட சட்டங்களையும், பெரும் பிரிட்டனும் அயர்லாண்டும் கூடிய இந்த அரசுக்குச் சேர்க்கப்பட்ட இன்னும் இதர நாடுகளுக்குத் தக்கபடி ஏற்பட்ட சட்டங்களையும், வழக்கங்களையும் தழுவித் தங்கள் தேசத்துப் பிரஜைகளையும் மேற்படி இதர தேசங்களின் பிரஜைகளையும் ஆண்டுவரும்படிப் பயபக்தியுடன் உறுதிமொழி கொடுத்து ஆணையிட்டுக்கொடுக்க மகாப் பிரபுவுக்கு இஷ்டந்தானா?

மகாப்பிரபு;—நான் அப்படிச்செய்யப் பயபக்தியுடன் உறுதிமொழி கொடுக்கிறேன்.

முக்கிய குருமார்:— தாமே தீர்மானம்செய்யும் விஷயங்களில் சட்டம், நியாயம் இவைகளைக் கண்டிப்பில்லாது மிகக் காருண்யமாய் நடத்துவாரா?

மகாப்பிரபு:— நடத்துவேன்.

முக்கியகுருமார்:— தாம் கடவுளின் ஒழுங்குகளுக்கு விரோதமில்லாமல் நிஜமான கிறிஸ்தவ வேதத்தை அநுசரித்துச் சட்டத்தால் நாட்டில் நாட்டப்பட்ட ப்ராடெஸ்டண்ட் மதத்தையும் இங்கிலாண்டில் சட்டத்தால் ஏற்பட்ட சர்ச் அப் இங்கிலண்ட் (Church of England) என்னும்கோயில் கொள்கை, அதன்படி நடக்கவேண்டிய பூஜை, பயிற்சி (Discipline), நடவடிக்கை (Government) இவற்றையும் சற்றேனும் பிசகாமல் தங்களாலியன்றமட்டும் மகாப்பிரபு காப்பாற்றுவாரா? இங்கிலாண்டின் குருமார்களுக்கும், பூஜாரிகளுக்கும் அந்நாட்டில் அவர்கள் வசத்தில் விடப்பட்டிருக்கிற கோயில்களுக்கும் ஆகிய இவர்கள்யாவர்க்கும் அல்லது எவருக்காவது சட்டத்தால் ஏற்பட்ட உரிமைகளையும் (Rights) சலுகைகளையும் (Privileges) காப்பாற்றிக் கொடுப்பாரா?

மகாப்பிரபு:—காப்பாற்றிக் கொடுப்பேன்.

இந்தமாதிரியே இந்தமகாப்பிரபுவின் தாயாராகிய விக்டோரியா ராணியும் 1838-ம் ஆண்டில் யார்க் நகரத்து முக்கிய குருமார்க்கு ஆணையிட்டுக் கொடுத்தார்.

இந்தமாதிரி ஆணையிட்டுக் கொடுப்பது ஐரோப்பாக் கண்டத்தில் அநேக இராச்சியங்களில் வழக்கமாய் இருக்கிறது.

ஹாலண்டு நாட்டு ராணிக்கு 1898-ம் வருஷம் முடி சூட்டினபோது:—நான் ஹாலண்டு நாட்டுக் குடிகளுக்கு அவர்கள் நாட்டு அமைதியானது (Constitution) சற்றேனும் வழுவாமல் காப்பாற்றி எப்போதும் அதன்படி நடக்க ஆணையிட்டுக் கொடுக்கிறேன். ஒரு நல்ல பாதிரியான ராணி செய்வதுபோல, நானும் என்னால் கூடியமட்டில், அரசுக்குரிய நாடெல்லாம் அப்படியே, சற்றுங்குறையாமல், அதின் தாளாட்சிக்கு யாதொரு விக்கினமும் வராமல் அரசைக்காக்கவும்; குடிகளின் போது உரிமையையும் குடிகளின் ஆள்உரிமைகளையும், எல்லாக் குடிகளின் உரிமைகளையும் காப்பாற்றவும்; நான் கையாளும்படியான சட்டங்களின்படி எல்லா விதத்தாலும் போது வளமும் ஆள் வளமும் நாட்டில் பெருகும்படிச் செய்யவும் ஆணையிட்டுக் கொடுக்கிறேன். கடவுள் எனக்குதவி செய்வாராக;—என்று சொன்னாள்.

இந்த ஹாலண்டின் பக்கத்தில் இருக்கப்பட்ட ஒரு சிறு (Belgium) இராச்சியத்தில் அரசன் முடிசூட்டிக்கொண்டு சிங்காதனம் ஏறுமுன்னால், அந்த நாட்டு அரசுக் குடிச்சபையாருக்கு (United Chambers i. e., Parliament) ஆணையிட்டுக்கொடுக்கும்போது என்னசொல்வானென்றால்:—இந்நாட்டில் அமைதி, சட்டம் இவ்விரண்டையும் குடிகளின் இஷ்டப்படி நடத்துகிறேன்; நாடு தாளாட்சியுடன், முழுமைகுறையாமல் இருக்கும்படிக் காப்பாற்றுகிறேன்;—என்று சொல்வான்.

இவ்விரண்டு இராச்சியங்களின் பக்கத்தில் இன்னொரு சிற்றரசுண்டு (Denmark). அது தான் நம் மகாப்பிரபுவான இராஜனுக்கு வேட்டகம் (house of one's wife). அந்தநாட்டு அரசர் முடிசூட்டிக்கொள்ளும்போது தம் நாட்டுச் சபையார் (Council of State) முன்னால் ஆணையிட்டுக்கொடுப்பது எப்படியென்றால்:—கொஞ்சமும் வழுவாமல் இந்நாட்டின் அமைதியின்படி நடக்கிறேன்";—என்பான்.

இட்டலிநாட்டு அரசன் தன் நாட்டார் கூடியிருக்கும்போது "தற்போதைய அமைதியை நடத்தி வருகிறே" னென்று சொல்வான்.



## 4-வது இன்பம்.

# இராஜா ராஜாத்தி

### இராஜன்.

காலஞ்சென்ற விக்டோரியா ராணி இருபத்தோராம் வயதில் ஸேக்ஸ் கோபர்க் (Saxe-Coburg) நாட்டு ஆல்பர்ட் பிரபுவை மணம்புரிந்தார். அப்பிரபு 1861-ம் வருஷம் டிசம்பர்மீ 14-ம் தேதி, நாலு குமாரர்களையும், ஐந்து குமாரத்திகளையும் விட்டுவிட்டு மரித்துப்போக, ராணியார் பிள்ளைகளை ஞான முள்ளவர்களாய்ச் செய்வது போல, சுவாமிக்குப் பயப்படுகிறவர்களாயும் வளர்த்துவந்தார். ராணியின் மரணத்தறுவாயில் இரண்டு குமாரரும் நாலு குமாரத்திகளும், நாற்பது பேரப்பிள்ளைகளும் இருந்தார்கள். அவர்களில் ஜெர்மனித் தேசத்துச் சக்கரவர்த்தியாகிய வில்லியம் மிகவும் கீர்த்திபெற்றவர். ராணி மரித்தபோது அறுபது வயதுள்ள வேல்ஸ் இளவரசாகிய அவருடைய ஜேஷ்ட புத்திரர் ஆல்பர்ட் எட்வர்ட், "எனது அன்புள்ள தாயார் தங்களுடைய பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் தங்களைச் சூழ்ந்து நிற்கும்சமயத்தில் மரித்தார்" என்று தந்தி சமாசாரம் அனுப்பினார்.

கொஞ்ச நேரத்துக்குப் பின்பு 1901-ம் வருஷம் ஜனவரி மாசம் 23-ம் தேதியில் (Albert

Edward) ஆல்பர்ட் எட்வர்ட் என்னும் பிரபு "தேவனுடைய கிருபையால் பெரும் பிரிடனும் அயர்லாண்டும் கூடிய அரசுக்கு ஏழாம் எட்வர்ட், அரசர், மதக்கைநப் பாதுகாப்பவர், இந்துதேசத்துச் சக்கரவர்த்தி" என்று விளம்பரம் பண்ணப் பட்டது.

தற்காலத்தில் ஏழாம் எட்வர்ட் அரசர் என்று சொல்லப்படுகிற ஆல்பர்ட் எட்வர்ட் லண்டன் நகரத்தில் பக்கிங்காம் அரண்மனையில் 1841-ம் வருஷம் நவம்பர் மாசம் 9-ம் தேதி பிறந்தார். காலஞ்சென்ற பிரதான மந்திரியாகிய கிளாட்ஸ்டன் என்பவருடைய மனைவிக்குச் சகோதரியாகிய லிட்ல்டன் (Miss Lyttleton) கன்னிகை அவருக்கு முதல் உபாத்தியாயராயிருந்ததோடு கூட ஆல்பர்ட் இளவரசர் பிறந்து ஆறுவருஷகாலமாக ராஜகுடும்பத்திலுள்ள மற்றப்பிள்ளைகளுக்கும் ஆசாரியராயிருந்தார். ஆல்பர்ட் இளவரசுக்குப்பதினெட்டு வயதானபோது, அவர் கொஞ்சகாலம் ஐரோப்பாவில் பிரயாணஞ்செய்து கழித்து அதற்கப்புறம் எடின்பர்க் (Edinburgh) ஆக்ஸ்பர்ட் (Oxford) என்னும் சர்வகலாசாலைகளில் கல்விபயின்று கேம்பிரிட்ஜிலுள்ள (Cambridge) சர்வகலாசாலையில் பிரவேச (மெட்ரிக்கியுலேஷன்) பரீட்சையில் தேறினார்.

ஆல்பர்ட் எட்வர்ட் இங்கிலாண்டு தேசத்திலுள்ள விண்ட்ஸர் (Windsor) மாளிகையில் டென்மார்க் அரசனுடைய ஜேஷ்ட புதல்வியாகிய

அலெக்ஸாண்ட்ரா (Alexandra) சீமாட்டியை 1863-ம்வருஷம் மார்ச்சுமாசம் 10-ம் தேதி மணம் புரிந்தார். அவர்களுக்கு மூன்று குமாரரும் மூன்று குமாரத்திகளும் பிறந்தார்கள்; ஆயினும், தற்கா லத்தில் அவர்களுக்கு ஒரு புத்திரன் தான் உண்டு.

அவருடைய விவாகத்திற்கு முன் அமெரிக் காவிலுள்ள கனடா தேசத்தையும் இந்தியமா காணங்களையும், அவருடைய விவாகத்திற்குப் பின் தமது சீமாட்டியோடுங் கூட எகிப்து கிரேக்கு முதலான தேசங்களையும் சுற்றிப் பார்த் தார்.

ஒருதடவை அவருக்கு விஷஜுரம் வந்து மரண அபாயத்திலிருந்து விடுவிக்கப் பட்டதை யிட்டு விசேஷித்தநன்றியறித லாராதனையொன்று பரிசுத்த பால் அத்தியக்ஷர் தேவாலயத்தில் (St Paul's) நடத்தப்பட்டது. அவ்வாராதனைக்குப் பதின்மூவாயிரம்பேர் வந்திருந்தார்கள். 1875-ம்வரு ஷம் அவர் இந்தியாவுக்கு வந்தார். இந்தியாவிலே அவருக்கு அதிகமான மரியாதைசெய்யப்பட்டது. அவருடைய தாயாராகிய விக்டோரியா ராணியார் 1877-ம் வருஷம் இந்துதேச சக்கரவர்த்தினி யென்று விளம்பரம் பண்ணப்பட்டது.

இவர் பிரபுக்களுடைய (House of Lords) சபையில் ஒருவர்; அச்சங்கத்தில் அவர் செய்த முதலாம் உபந்நியாசத்தில் அதிகமாய் ஏழை ஜனங்களுக்கு நல்லவீடுகள் கட்டிக் கொடுக்கப்

படவேண்டும் என்னும் விஷயத்தைக் குறித்து வற்புறுத்திப் பேசினார். அவர் ஜனசங்கைப் பிரியர்; மல்லயுத்தப் பிரியர்; பற்பல வேடிக்கை விளையாட்டுப் பிரியர்.

அவர் இளவரசராயிருந்தபோது கடைசிப் பத்து வருஷங்களையும் தேச க்ஷேமத்துக் கவசியமான பற்பல கல்விச்சாலைகள், சங்கங்கள், தாமே பரிபாலனம் செய்துவந்த அநேக பரோபகார தானதர்மங்கள் முதலானவைகளைத் தாமே மேல் பார்வை பார்த்து வருவதில் அதிக உழைப் பெடுத்து வந்தார்.

ஆயிரத்துத் தொளாயிரம் வருஷத்தில் அவர் பெல்ஜியம் (Belgium) நாட்டு வழியாய்ப் பிரயாணம் செய்துவருகையில், மதிமயங்கின ஒரு வாலிபன் அவரைத் துப்பாக்கியினால் சுட்டான்; ஆயினும் கடவுள் அவருக்கு யாதொரு விக்கினமும் நேரிடாமல் அவரைப் பாதுகாத்தார். ஏழாம் எட்வர்ட் (Edward VII) அரசர் தாம் வேல்ஸ் நாட்டு இளவரசராயிருந்தபோது, தமது நேரத்தை அதிகமாய் விளையாட்டில் கழித்தபோதிலும் அதிக கடினமான வேலையையும் செய்து வந்தார்; விசேஷித்த காரியங்களைக் குறித்து வெகு கவலையாய் அவரிடத்தில் சம்பாஷணை பண்ணினவர்கள் தமக்கும் தமதுகுடிகளுக்கும் உள்ள சம்பந்தத்தைக் குறித்தும், தமது விசேஷித்த பொறுப்பைக் குறித்தும் அவருக்குத்திட்டமான அறிவு உண்டென்று கண்டறிந்திருக்கிறார்கள்.

தேசத்தின் பொது நன்மைக்குரிய அநேக வேலைகளைத் தாமேசெய்து நிறைவேற்றும்படி நேரிட்டபோது, அவைகளை அப்படியேதாம்செய்து முடித்தார்.

அவற்றில் சில ஜனசங்கைக் குரியவை; சில ராஜ சடங்காசாரங்களுக்குச் சம்பந்தப்பட்டவை; சில பரோபகாரம், தான தர்மம் முதலிய விஷயங்களுக்கு அடுத்தவை; தமது சரீரப் பிரயாசத்தையும், செல்வத்தையும்கொடுத்து நடத்திவந்திருக்கிற தான தர்மங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. 1902-ம் வருஷம் ஜூன்மீ 26-ம் தேதி ஏழாம் எட்வர்ட் அரசருக்கும் அவருடைய பத்தினியாகிய அலெக்ஸாண்ட்ரா ராணிக்கும் லண்டன் நகரத்திலுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் தேவாலயத்தில் அதிக ஆடம்பரத்துடன் முடிசூட்டுநடந்தேறவேண்டியிருந்தது. அவர்க்குடம்பு செம்மையில்லாமற் போனதினால் அது நின்று போயிற்று. வந்த நோயின் ஆபத்து பின்னால் சொல்லப்படும்.

## இராஜாவின் சிரசு.

எண்சாண் உடம்புக்குச் சிரசே பிரதானம். தலைக் குறிகள் அறிந்து சொல்லவல்ல பெரியோர்கள்நம் மகாப்பிரபுவின் தலையின் உரு, குறி முதலியவற்றைப்பற்றிக் கற்றறிய பல முயற்சிகளும் செய்துவருகிறார்கள். மகாப்பிரபு வானவர் "நிஜமாய் எல்லாம் நடக்கவேண்டி நினைக்கும் மனசுள்ளவர்" (Practical frame of mind), அவர்

போடும் தொப்பியின் அகலம் 6½ அங்குலம்; அந்தத் தொப்பி அதைப்போடும் இடத்தில் 21¾ அங்குலம் சுற்றளவுள்ளது; புருவத்துக்கு மேலோடு அவர் தலை 22½ அங்குலம் இருக்கிறது. இராஜாவின் தலை கொஞ்சம்பரந்து அகலமாயிருக்கிறது. மூளை அடிபரந்து வலுவாய்ப் பெருகியிருக்கிறது, கண்கள் பக்கத்திலும் (perceptive organs)மூளை அகன்றிருக்கிறது. அவர் தலைக்குச் சம்பந்தமான உறுப்புகளும், அவர்குணத்தைப் பாதிக்கக்கூடிய உறுப்புகளும், அவர் உற்றுப்பார்க்கும் சக்தியே; இந்தச் சக்தியோடு தோழமை, நேசம், நல்ல எண்ணம், தன்னைப் பிறர் விரும்பும்படிச் செய்துகொள்ளுதல் (alimentiveness), ஒத்துப்பார்த்தல், கூடச்செய்தல், பெருமை, தொழுதல், நம்பிக்கை, பயம், கொண்டு முடித்தல்—ஆகிய இவைகள் கலந்திருக்கின்றன. அன்றி, நம்மகாப் பிரபுவுக்கு முழுமனது, இசைந்து நடத்தல், தயாளத்துவம், அனுதாபம், மரியாதை வைத்தல், தைரியம், நாருக்கு, இளகின மனது;—ஆகிய இவைபெல்லாமும் கலந்திருக்கின்றன.

## இராஜனுக்குச் சம்பவித்த ஆபத்து துக்கங்கள்.

இவர் சான்ட்ரிங்காம் அரண்மனையில் தாமும் தம் இராஜாத்தியாரும் சாவகாசமாய்வீற்றிருந்து வரும் நாளில், சுமார் 31 வருஷத்துக்கு முன்னுள் இவர்க்கு வலுத்தசுரம் வநதுவிட்டது; இந்தச் சுரத்தால் வெகு துன்பப்பட்டார். இவர் தகப்ப

ஞரின் 10-ம் ஆடைத்திவசத்தன்றைக்கு, அதாவது 23-நாள் கழித்து (14—12—1871) வைத்தியர்கள் இவர் இனிப் பிழைக்கமாட்டார் என்று கைவிட்டுவிட்டார்கள்; விக்டோரியா ராணியம்மாள் பண்ணின அதிர்ஷ்டத்தால் பிழைத்துப்போனார். இவர்க்கு வருவதெல்லாம் கண்டமாய்த்தான் வருகிறது! தம்மூத்தகுமாரர், இப்போது வேல்ஸ் இளவரசாயிருக்க வேண்டியவர், இனிப்பட்டத்துக்கு வரவேண்டியவர் (Duke of Clarence) 9-வருஷங்களுக்குமுன்னால் காலஞ்சென்றார். இவர்க்கு இது பெருந் துக்கமாயிருந்தது. இங்கிலாண்டின் குடிகள் யாவரும் அந்தத் துக்கத்தில் மூழ்கினார்கள்.

இவர் தம் வோட்டாந்துக்குப் போகும் தருவாயில் ஒரு சிறுவன் (Sipido) இவரைச் சுட்டான். அவன் அவர்மேல் வைத்த குறியானது ஒரு மயிரிழை தப்பிற்று. இது 1900-௵ ஏப்-மீ நடந்தது. இதன்றியில் 4-வருஷத்துக்கு முன்னால் ஒரு பிரபு வீட்டில் இருக்கும்போது (1898) மாடிப்படியில் கால்சறுக்கி விழுந்துவிட்டார். இவர்க்குப்பட்ட காயத்தால் இவர் இனி ஆயுள்பரியந்தம் நொண்டியாய்ப் போய்விடுவார் என்று நாட்டார்கள் எண்ணினார்கள். ஆயினும், தேவனருளால் உடம்பு சொஸ்தமாகி யதாப்பிரகாரம் போல இருந்து வந்தார்.

மறுபடியும், இவருடைய சகோதரி ஜர்மன் தேசத்துச் சக்கரவர்த்தினி 1901-ம் வருஷம் துவக்கத்தில் காலஞ்சென்றாள். இந்தம்மாளுக்கு

ப்ரெடெரிக் சக்கிரவர்த்தினி என்று புக்காத்துப் பேர்; பிறந்த வீட்டில் தம் தாயாராகிய விக்டோரியா ராணியார் விக்டோரியா அடிலெய்ட் மேரி லூயிஸியா என்று பேரிட்டிருந்தார். இந்தம்மாள் இராணிக்கு மூத்தபெண்; இறந்தபோது 61-வயது; இவர்தான் எல்லாக் குழந்தைகளுக்கும் மூத்த குழந்தை, மூத்த புத்திரி என்று சொல்லலாம்;

இராஜன் கட்டச் சீரங்கால் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கும்போது கடலில் தம் சொந்தக் கப்பலிலேயே கொஞ்சநாள் நிவாசம் பண்ணலாமென்று கப்பல் இருக்கும் துறைக்குப் புறப்பட்டார். அரண்மனையை விட்டுப் புகைவண்டி முட்டிக்கு (Railway station) வந்தார். தாமும் ஒருநாதியும் இராஜாத்தியும் வந்துகொண்டிருக்கும்போது சவாரிக் குதிரைகள் தாவிட்டுக் கீழே விழுந்தன. ஆயினும், மகாப்பிரபலமுள்ள இங்கிலாண்டில் லீ என்பவள் (Gipsy Lee) கூறி சொன்ன மன்னிக்கு ஆயுள் கெட்டியானதால் யாதொரு அபாயமும் இல்லாமற் கப்பல் சென்றார்.

## இராஜனின் பூரணமான பட்டப்பேர்.

* "கடவுள் அருளால், பெரும் பிரிடனும் அயர்லாண்டும் கூடிய அரசுக்கும், கடலுக்கப்புறத்துள்ள

* Edward VII, by the Grace of God, of the United Kingdom of Great Britain and Ireland, and of all the British Dominions beyond the Seas, King, Defender of the Faith, Emperor of India.

பிரிட்டிஷ் நாடுகளுக்கும் எ-வது எட்வர்ட், அரசர், மதத்தைக் காப்பவர், இந்தியாவின் மன்னாதி மன்னர்.

## இராணி.

இந்தியா தேசத்து ஜனங்கள், விசேஷமாய் இந்து தேசத்துப் பெண்கள் தங்களை ஆளும் அரசர்களை நன்கு மதிக்கும் வகையில் மிகவும் கவனிக்கப்படத்தக்க விஷயமொன்றுண்டு. குடிகளுடைய க்ஷேமத்தைக் கைபாண்டு நடத்துவதற்கு விசேஷித்த ஆட்களைக் கடவுள் தெரிந்துகொள்கிறார் என்னும் விசுவாசம் அவர்களுக்குள் பலமாய்க் குடிகொண்டிருக்கிறது. இந்தப்பொதுவான விஷயத்தோடுகூட, இங்கிலீஷ் இராஜனுக்குரிய மகா மேன்மையும் மகத்துவமுமான குணாதிசயங்கள் யாவும் மகா காருண்ய விக்டோரியா ராணியினிடத்தில் அமைந்திருந்தன என்னும் விஷயமும்; விக்டோரியா ராணி இந்து தேசத்து ஜனங்களுக்குத்தாங்கள் நினைத்தவண்ணம் அருமையாய்க் கிடைத்த ராணி பென்றும், அவ்வரசியினுடைய ஆளுகை எழுவெற்றதும் சிறப்புற்றதும் மகிமை பொருந்தியதுமானது என்றும் ஒரு எண்ணமும் அவர்கள் மனதில் குடிகொண்டிருக்கின்றன. அதனால், நம் தேசத்திலுள்ள புதல்வரும் புதல்விகளும் இங்கிலீஷ் அரசாட்சிக்குக் காண்பிக்கிற பற்றுதலும் நன்கு மதிப்பும் எவ்வளவு பலமுள்ளது என்று நாம் எளிதில் உணர்ந்துகொள்ளக்கூடும். விக்டோரியா இராணி

தம் ஆளுகையை முடித்துத் தேகவியோகமாய்ப் போனபோதிலும் இந்த தேசத்து ஜனங்கள் விக்டோரியா அரசியின்பேரில் எவ்வளவு பற்றுதலும் விசுவாசமு முள்ளவர்களா யிருக்கிறார்களோ அவ்விதமாகவே, பெரும் பிரிடன்லுள்ள (Great Britain) கோடானுகோடி ஜனங்களின் சந்தோஷம் நிறைந்த விக்டோரியா அரசியினுடைய புத்திரனிடத்திலும், அப்புத்திரர் பக்கமாய் முடிசூட்டன்று விற்றிருந்த கடல் ராஜனுடைய (Sea King i. e. King of Denmark) புத்திரியினிடத்திலும் ஒரே விசுவாசமும் ஒரே பற்றுதலுமுள்ளவர்களா யிருக்கிறார்கள்.

## குழந்தைப் பருவம்.

அலெக்சாண்ட்ரா இராஜாத்தி 1844-ம் வருஷம் டிசம்பர் மீ முதல் தேதி டென்மார்க் தேசத்திலுள்ள கோபன்ஹேகன என்னும் நகரத்தில் பிறந்தார். இப்போது அவர்களுக்கு 57-வயது. இந்த இராஜாத்தி சுகமாயும் சந்தோஷமாயும் மனோவியாகூலத்திற்கு இடங்கொடாமலும் தங்கள் காலத்தைக் கழித்துவந்ததினால், இவருடைய பாலியத்திலிருந்த கண்ணைப்பறிக்கத்தக்க சௌந்தரியம் இந்த வயதிலும் மாறாமலிருக்கிறது. தற்காலத்தில் அரசாட்சி செய்துவருகிற டென்மார்க் தேசத்து அரசனாகிய கிரிஸ்டியன் மகாப் பிரபு இந்த அரசிக்குத் தகப்பனார். இவருடைய தாயாராகிய லூயி ராஜாத்தி மிகவும் திறமை சாலியும் நாநா பாஷைக் கலைக்கியானியும் சங்கீத

வித்வாம்சியும் முர்சிலேயில் தேர்ந்த நிபுணி யுமா யிருந்தார்; இந்த குணநிசபங்க ளெல்லாம் அவருடைய ஜேஷ்ட குமாரத்தியாகிய அலெக் சாண்ட்ரா இராஜகுமாரத்திக்கும் உண்டு. கிரிஸ் டியன் என்னும் ராஜனும் அவருடைய குடும்ப மும் பாரம்பரியமாய் இராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களா யிருந்தபோதிலும் யாதொரு இராஜ ஆடம்பரத்தையும் விரும்பாமல் சாதாரண மாய்க் காலங்கழித்துவந்தார்; தற்காலத்திலும் அலக்ஸாண்ட்ரா இராஜாத்தியின் நேர்மை வியக் கப்படத் தக்கதென்றே சொல்லவேண்டும். இவர் கல்வியில் தேர்ந்தவர்; தங்கள் சிறு பிராயமுதல் ஆங்கிலேய பாஷையையே பேசினவர். இவர்கள் சாந்தகுண முள்ளவரும், ஊக்கமுள்ளவரும், ஞா னம் நிறைந்த சப்பாஷணையுள்ளவரும், மிகவும் புத்தி சாதுரிய முள்ளவருமானதினால் விக்டோ ரியா இராணி "அருமையான அலெக்ஸ் மிகவும் புத்திசாலியும் உத்தமியுமானவள்" என்று அவ ரைக் குறித்து எழுதி யிருக்கிறார்.

## விவாகம்.

வேல்ஸ் இளவரசர் 19-வயது உள்ளவரா யிருந்தபோது அலெக்ஸாண்டரா ராஜகுமாரத்தி யின் முகப் படத்தைத் தன் சிநேகிதரில் ஒருவர் வைத்திருக்கத் தற்செயலாய்க் கண்டார். அந்தப் படத்தைப் பார்த்தவுடனே அந்த ராஜ குமாரத்தி யைக் கண்டு அவளிடத்தில் சிநேகம் பண்ணும் படித் தம் மனதிலே எண்ணிக்கொண்டு அதே

வருஷத்தில் ஜெர்மன் தேசத்தில் பூர்வீக நகரமாகிய ஸ்பியர் (Speier) நகரத்திலுள்ள தேவாலயத்தில் முதல் முதல் அவளைச் சந்தித்தார். இருவரும் தங்கள் கருமத்தில் கொண்ட எண்ணங்களை அறிந்துகொண்டார்கள். இரண்டுவாலிபரும் ஒருவரை யொருவர் அதிகமாய் நேசித்தார்கள். ராஜகுடும்பத்தில் நடக்கும் விவாஹங்கள் பெரும்பாலும் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் உள்ள உண்மையான உத்தம நேசத்தின் காரணத்தைக் கொண்டு நடந்தேறினவைகளாயிருக்கமாட்டா; ஆயினும், இது சாதாரண ஏற்பாட்டுக்கு முற்றிலும் விரோதப்பட்டது.

1863-ம் வருஷம் பிப்ரவரி மாசம் ஆங்கிலேய அரசுக்குடிச்சபை கூடின போதுதான் ராணியார் விவாகத்திற்குச் சம்மதித்தார்.

அலெக்ஸாண்ட்ரா ராஜ குமாரத்தியை ஆங்கிலேய தேசத்தார் மிகுந்த உற்சாகத்தோடு ஏற்றுக் கொண்டார்கள். அவர் 1863-ம் வருஷம் பிப்பிரவரி மாசம் 26-ம் தேதி கோபன்ஹேகன் (Copenhagen) நகரத்தை விட்டுப்புறப்பட்டார். அவருடைய வழிப் பிரயாணம் நெடுக, பிரபுக்களும் அவர்களுடைய மனைவிமாரும் ராஜகோலத்தோடேயே அவரை எதிர்கொண்டழைத்துக் கொண்டு அவருக்கு மரியாதை செய்தார்கள். கிரேவ்ஸெண்ட் (Gravesend) என்னும் இடத்தில் அலெக்ஸாண்ட்ரா சீமாட்டியை வேல்ஸ் இளவரசர் சந்தித்தார். அவர் கப்பலின்

மேல்தளத்திற்கு வந்தபோது, அலெக்ஸாண்ட்ரா இராஜகுமாரத்தி வெள்ளை உடுப்புதரித்துக்கொண்டும், சிறு வெள்ளைத் தொப்பியைப் போட்டுக்கொண்டும் வேல்ஸ் இளவரசரைச்சந்திக்கும்படித் தானிருந்த கப்பலறை வாசலண்டைக்கு முன்னேக்கிச் சென்றார். இராஜகுமாரன் இராஜகுமாரத்தி வீற்றிருந்த கப்பலறையின் வாசலுக்குத் தீவிரமாய் நடந்து, தனக்கு மனைவியாகப்போகிற அந்த இராஜ குமாரத்திக்குக் கைகொடுத்து அவரை வாஞ்சையாய் முத்தமிட்டார். கப்பல் துறை வாராவதியில் கூடியிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் யதார்த்தமாய் நடந்தேறின இந்த வாழ்த்துதலைக் கண்ணுற்று ஆநந்தபரவசமடைந்தார்கள். இராஜ குமாரத்தி கரையில் இறங்கி, டென்மார்க் தேசத்துக்குரிய வர்ணங்களாகிய சிவப்பும் வெள்ளையும் கலந்த உடுப்புகளைத் தரித்திருந்த அறுபது பாலிய ஸ்திரீகளினல் பரப்பப்பட்ட புஷ்பங்களின்மேல் நடந்து வந்தார். மேன்மேலும் இராஜ குமாரத்திக்கு முன்பாக புஷ்பமாரி பொழிந்துகொண்டிருந்தது. இராஜ குமாரத்தி பிரமிப்படைந்து, தன் நேசர் தனக்குக் கைலாகுகொடுக்க அவருடைய புயத்தில் சார்ந்துகொண்டே புகை வண்டிப் படிக்கு நடந்துபோனார். லண்டன்மாநகரத்தில் இராஜகுமாரத்திக்குச் செய்யப்பட்ட மரியாதை கொஞ்சநெஞ்சமல்ல. இந்த இராஜ குமாரத்தியின் விவாகத்திற்காகச் செய்யப்பட்ட சகலவிதமான பிரயத்தனங்களின் மாட்சிமையையும் மகத்

துவத்தையும் குறித்து, "இவ்வளவு சிறப்பான ஊர்க்கோலத்தை இதற்குமுன்நான் ஒருபோதும் கண்டதில்லை. வேல்ஸ் இளவரசியார் சாந்தமும், உணர்ச்சியும், தன்னடக்கமும் உள்ளவராய் நடந்துகொண்டார். வேல்ஸ் இளவரசரும் அப்படியே முன்னிருந்ததுபோலிராமல் முன்னிலும் அதிகமான மரியாதை நிறைந்தவராய்க் காணப்பட்டார்" என்று சொல்லப்பட்டது.

சமுத்திர ராஜன் மகள் இங்கிலாண்டு தேசத்தோர்களுக்குச் சீக்கிரத்தில் சந்தோஷத்தை யுண்டாக்கினர். சமுத்திர அலைகளினால் கரைபோர்ந்த தேசமாகிய தம் முன்னோர்களின் தேசத்தைத் தாம் நேசித்துவந்தது போலவே இங்கிலாண்டு தேசத்தையும் அலெக்ஸாண்ட்ரா அரசி நேசித்து வந்தார். இராஜமாளிகையைச் சேர்ந்த வேலைகளிலும் உல்லாசத்திலும் அதிகமாய்த் தம் காலத்தைக் கழித்தபோதிலும் ஸான்றிங்ஹாம் (Sandringham) என்னும் இடத்தில் தனித்துக் கட்டப்பட்டிருந்த தம் சொந்த அரண்மனையில் தம் ஜீவகாலத்தை அதிகப்பிரயோஜனமாய்க் கழித்து வந்தார். வேல்ஸ் இளவரசரும் அவருடைய மனைவியாரும் தம் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். இராஜகுமாரத்தி சாதாரணமாயும் முகக்களையுள்ளவராயும் காணப்பட்டார். அவர் மகா ரூபவதியும், அன்புள்ளவரும், கதைகளிலே விஸ்தரிக்கப்படுகிற அழகுள்ள மோகினிகளைப்போல அழகும் சவுந்தரியமும் பொருந்தினவருமா யிருந்தார்.

## இல்வாழ்க்கை.

இல்லற வாழ்க்கையை அலெக்ஸாண்ட்ரா அரசி எப்போதும் விரும்பினார். ஏனென்றால், தாய்க்குரிய அன்பும் இயற்கையான பிரியமும் அவரிடத்திலிருந்தன. ஸான்ட்ரிங்ஹாம் (Sandringham) அரண்மனை சாதாரணமாயித் தேசத்திலுள்ள ஒரு துரையினுடைய வீட்டைப்போலத் தானிருந்தது. அந்த ஸான்ட்ரிங்ஹாம் தோட்டத்திலுள்ள குடிசைகள் நன்றாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. அவைகளில் வசித்துவரும் கூலியாட்கள் நன்றாய்ப் பாதுகாக்கப்பட்டு வருகிறார்கள். அரசி அக்கம்பக்கத்திலுள்ள இடங்களுக்குக் கால் நடையாய் நடந்துபோய் அல்லது சிறு குதிரை பூட்டிய வண்டியில் சவாரி செய்து போய்க் கூலிக்காரரைப் பார்த்து அவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்து வருவார். அந்தக் கிராமத்தில் கைத்தொழில் கற்றுக்கொடுக்கும் கல்விச்சாலை யொன்றுண்டு; அதில் அரசி தாமுபபோய்க் கிராமத்திலுள்ளவர்கள் கற்றுக்கொள்ளுகிற கைத்தொழில்களை உபாத்திமார் மூலமாய்க் கற்றுக்கொண்டு மரத்தில் சித்திரவேலை செய்யவும், பதனிட்ட தோலைக்கொண்டு வேலை செய்யவும் நன்றாய்ப் பழகிக்கொண்டார். தம் அரண்மனையில் ராணியின் பாற்சாலை யொன்று ஏற்படுத்தப்பட்டு அதிலிருந்து அரண்மனைக்கு வேண்டிய பாற்கட்டி முதலிய உணவு பதார்த்தங்கள் கிடைக்கின்றன. அரசி தாமே வெண்ணெ யெடுப்பதில் மெத்த கெட்டிக்காரர்.

அலெக்ஸாண்ட்ரா அரசியின் தாய்க்கொப்பான வாழ்க்கை, இப்பிரபஞ்சத்தில் பற்பலவித மான நிலைமையிலுள்ள தாய்மாருக்குப் போந்த படிப்பினைகள் நிறைந்திருக்கிறது. அலெக்ஸாண்ட்ரா அரசி தமக்குரிய பொதுவான கடமைகளை அசட்டை செய்யவில்லை என்று ஜனங்கள் நினைக்கத்தக்கதாக, தங்கள் பிள்ளைகளை வளர்ப்பதற்கு அவசியமான முயற்சியைக் கையாளுவதிலும், அவர்களுடைய பாடங்களில் அவர்களை உற்சாகப்படுத்துவதிலும், அவர்களோடு சேர்ந்து வாசிப்பதிலும், அவர்களுக்கு வாசித்துக் காட்டுவதிலும், அவர்களோடு சேர்ந்து விளையாடுவதிலும், பிள்ளைகளை வளர்க்கும் அறையில் நடக்கிறதும் சகலவிதமான நுட்பவேலைகளை எல்லாம் பரிபாலனம் செய்து வருவதிலும், தம் பிள்ளைகளை நேர்மையாய் வளர்த்து வருவதிலும் தங்களை முற்றிலும் ஒப்புக்கொடுத்தார். தம் சொந்தக் குடும்பத்தைப் புத்தியாய்ப் பரிபாலித்து வருவதில் சிம்மாசனத்துக்குச் சுதந்தரவாளியின் மனைவியாருடைய முதல் வேலை அடங்கியிருக்கிறதென்று மகா காருண்ய விக்டோரியா அரசிக்குத் தெரிந்திருந்ததுபோல இந்தம்மாளுக்கும் தெரிந்திருந்தது. 1867-ம் வருஷத்தில் அலெக்ஸாண்ட்ரா அரசிக்குக் கைகால்பிடிப்பு நேரிட்டதினால் அவர் நொண்டியாய்ப் போய்விடுவாரோ என்ற பயமிருந்தது. ஆயினும் புத்தி • சாதுரியமாய் அவர்க்கு ஔஷதப்பிரயோகம் செய்யப்பட்டு வந்ததினால் சீக்கிரத்தில் சுகப்பட்டார்.

அலெக்ஸாண்ட்ரா அரசியின் ஜீவியத்தை நினைவு மூட்டுகிறதற்கு அவர் செய்த நற்கிரியைகள் அநேகம் உண்டு. 1871 - ம் வருஷத்தில் வேல்ஸ் இளவரசர் விஷ ஜுரத்தினால் வருத்தப்பட்டு மரணத்தறுவாயிலிருந்தார். அவருடைய உத்தம பத்தினி அவருக்குப் பக்கத்திலேயேயிருந்து அவரை விழிப்பாய்ப் பாதுகாத்து வந்தார்; மேலும், அபாயமான அந்தத்தருணத்தில் அலெக்ஸாண்ட்ரா அரசி தம் சுகத்தை வெறுத்துத் தைரியமாய் அவருக்கு உதவிபுரிந்து வந்ததினால் ஜனங்கள் அவரை முன்னிலும் அதிகமாய் நேசித்தார்கள். வியாகூலம் நிறைந்த இந்தச் சமயத்தில், தாம் ராஜ குமாரத்தியினுடைய ஆழ்ந்த மார்க்க வைராக்கிய பக்தி முழுபலத்தோடு வெளியாகிறது. வேல்ஸ் இளவரசுக்குச் சற்றுச் சுகமுண்டானபோது வேல்ஸ் இளவரசியார் 'என் நாயகருக்குக் கொஞ்சம் சுகம் உண்டானதால் தெய்வத்துக்குப் பிரார்த்தனை செலுத்த நான் தேவாலயத்துக்குப் புறப்பட்டு வருகிறேன். அவருடைய படுக்கைக்குப் பக்கத்திலிருந்து விழிப்பாய்ப் பாதுகாக்கவேண்டியபடியினால், ஆராதனை முடியுமுன்னே நான் தேவாலயத்தை விட்டுப் புறப்பட்டு வரவேண்டியதாயிருக்கும் என்று எண்ணுகிறேன். நான் என் நாயகரிடத்திற்குத் திரும்பிப்போகுமுன் அவருக்காக நானும் உம்மோடுகூட ஜெபிக்கும்படிக்கு, ஆராதனையின் ஆரம்பத்தில் சில வார்த்தைகளைச் சொல்லி அவருக்காக ஜெபிக்கமாட்டீரா?' என்று (Sandring-

ham) ஸான்றிங்ஹாம் குருவானவருக்கு எழுதி அனுப்பினர். வேல்ஸ் இளவரசர்க்குப் பூரண சௌக்கியமுண்டான உடனே ஸான்றிங்ஹாம் கோவிலுக்குப் பித்தளையினால் செய்யப்பட்ட அழகான மேஜை யொன்றைச் செய்து போட்டார். அம்மேஜையில் 'தேவனுக்கு மகிமை; அவருடைய இரக்கத்திற்காக அவருக்கு நன்றியறிதலான காணிக்கை: 1871-ம் வருஷம் டிசம்பர் மாசம் 14-ம் தேதி:—அலெக்ஸாண்ட்ரா: நான் கலங்கினபோது கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அவர் எனக்குச் செவிகொடுத்தார்' என்கிற வார்த்தைகள் வரையப்பட்டிருந்தன.

1875-ம் வருஷம் அக்டோபர் மாசத்தில் வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்ததினால் அலெக்ஸாண்ட்ரா அரசி தம் இல்வாழ்க்கையில் தம் நாயகரைவிட்டு முதல்தடவையாக நெடுநாள் பிரிந்திருக்கும்படி நேரிட்டது. அச்சமயத்தில் அவர் ஸான்றிங்ஹாம் மாளிகையில் அமரிக்கையாய்வாசஞ்செய்து தம் பிள்ளைகளோடு, சந்தோஷமாய்க் காலங்கழித்து வந்தார். வேல்ஸ் இளவரசர் இந்தியாவை விட்டுத் தமது தேசத்திற்குத் திரும்பிப் போகையில், கப்பல் நிறையத் தம்மோடு கொண்டுபோன விசித்திர விநோதமான சாமான்களும், பரிசுகளும், ஜீவப் பிராணிகளும், பட்சிகளும் அலெக்ஸாண்ட்ரா அரசிக்கு அரண்மனைக்குரிய வீட்டு வேலைகளைப் பரிபாலனஞ் செய்துவருவதில் உண்டாயிருந்த அறிவை அதிகப்படுத்துவதற்கு ஏதுவாயிருந்தன.

அலெக்ஸாண்ட்ரா அரசியின் ஜீவிய சரித்திரம் இதுவே. இப்போது இவருக்கு ராணி என்னும் மேன்மையான பட்டம் சூட்டுவதற்கு இவர் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார். அதிக உத்தரவாதமும் மேன்மையுமான இந்த ஊழியத்தில் இதுவரைக்கும் தங்களுடைய நற்குண நற்செய்கைகளினால் ஆங்கிலேயக் குடிகளுக்கு எப்படிப் பிரியமாய் நடந்துவந்தாரோ அதினும் அதிகமாய்த் தங்களுடைய சிறந்த குணாதிசயங்களை அடிக்கடிப் பிரயோகம் செய்து துலங்கிப் பிரகாசிப்பார் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஸ்திரீயின் அழகு இளை துளிர்காலத்தில் பூக்கிற புஷ்பங்களுக்கு ஒப்பாயிருக்கிறது. ஆனால், குணசீலமோ வானத்தின் நக்ஷத்திரங்களுக்கு ஒப்பாயிருக்கிறது. இவருடைய சுத்தமான நடக்கையும், நேர்மையான வழிகளும், தம் நாயகர்பேரில் தமக்குள்ள பக்தியும், தம் பிள்ளைகளின் பேரிலுள்ள பற்றுதலும், அக்கம்பக்கத்திலுள்ளவர்களைப்பற்றிய கவலையும், வருத்தப்படுகிறவர்களுக்குத்தாம் பாராட்டும் இரக்கமும், இவை எல்லாவற்றிற்கு மேலாகக் கடவுள் பேரிலுள்ள பூரண நம்பிக்கையும், ஆழ்ந்த பக்தியும் இவை முதலிய குணாதிசயங்களெல்லாம் தமக்கு இடப்பட்ட ராணி யென்னும் பட்டத்திற்குப் பொருந்தினவைகளாயும் அந்த மேன்மையான பதவிக்குத் தம்மைத் தகுதியாக்குகிறவைகளாயும் இருப்பதோடு கூட, மகா காருண்ணிய விக்டோரியா அரசியைப்போலவேதாமும் கனத்தை

யும மேன்மையையும் அடைந்து துலங்குவாரென் பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆகையால்,

“கடவுள் அலெக்ஸாண்ட்ரா அரசியை ஆசீர் வதிப்பாராக” என்று முழு இருதயத்தோடும் வேண்டிக்கொள்வோம்.



# 5-வது இன்பம்.

# இராஜனுக்கு மலைபோல் வந்த பிணி பனிபோல் நீங்கியது.



## இந்துக்கள் குறிசொல்லியது.

இந்தியாவின் மன்னருக்கு மன்னரான (மகா ராஜாதிராஜன், ஏகாதிபத்தியர்) இங்கிலாண்டின் எ-வது எட்வர்ட் அரசரைப்பற்றி அநேகம்பேர் அநேகவிதமாய்க் குறி சொல்லி யிருக்கிறார்கள். ஆனால் இப்படிக் குறிசொல்வது யாவும் பலிக்கிறதில்லை. வங்காளத்தில் ஒருவர் (நாராணிப் பிரசாத ஜோதிஷி) போவர் யுத்தமானது இங்கிலாண்டில்அமைச்சர்கள்மாறுவதால்நின்றுபோமென்று சொல்லியும், அதற்கு மாறாய் யுத்தம் நின்று போனபிறகு அமைச்சரில்பிரதானியானவர் மாறினார். பிரதானியான ஸாலிஸ்பரிப் பிரபு 1902ஆம் ஜூலை மாதம் தம் பிரதானி வேலையைக் கைவிட்டார்; அவர்க்குப் பதிலாய் பால்பர் துரை பிரதானியாயிருக்கிறார்; ஆனால், யுத்தத்தைத் தொடங்கின கட்சியான நாடுமடக்கிக் கட்டுங் கட்சியானது மாறவில்லை. மழைவிட்டும் துவ்வானம் விடவில்லை என்பது போலாயிற்று. இந்த ஜோதிஷி குறி சொன்ன முட்டான காலம் வந்து சேம்பர்லேன் துரையும் கிச்சனர் பிரபுவும் கஷ்டப்படவில்லை. ஆனாலும், முடிசூட்டு விஷயமாய் அவர் குறி

சொன்ன சேதிகள் மாத்திரம் கொஞ்சம் பலித்தன என்னலாம். முடிசூட்டுவிஷயமாய் நடக்கும் பேரெண்ணங்கள் பலவிதமாய்த்தடைப்படும். இப்படிச் சொன்னது போன ஜனவரி மாசம். குறி சொல்லும் ஒருவன் பல சங்கதிகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டே வரும்போது யாதாவது ஒன்று பலிப்பது ஸகஜந்தான்; ஆனால், அவன் குருட்டடியாய்க் குறிசொல்லி யிருந்து அவன் சொன்னது பலித்திருந்தால் அது வெகு ஆச்சரியந்தான்.

இது தவிர வேறே ஒரு செய்தியும் குறி சொன்னபடி பலித்தது; அதைப் "பலித்தது" என்று சொல்லமாட்டார்கள் சிலர்; அவர்கள் அதைக் காக்காய் உட்கார்ந்ததும் பனம்பழம் விழுந்ததும் சரிப்போயின என்று சொல்வார்; ஏனென்றால்:—அந்தச் செய்தியைப் பற்றிக் குறி சொன்னது திண்டுக்கல்லில் இருக்கும் M. கந்தசாமிப் பிள்ளையவர்கள்; அவர் விக்டோரியா மகாராணியார் 1913-ம் ஆண்டு தான் இறந்துபோவாரென்று குறி சொன்னார்; அப்படிக் குறிசொன்னது பலிக்கவில்லை. ஆனாலும், அந்தமாதிரி பலிக்காமல் போனதற்குத்தம்நாட்டாரை மன்னிப்புக் கேட்டுக்கொண்டு இனிக் குறிசொல்வது பலிக்காமல் போனால் அந்த வழக்கத்தை அடியோடு விட்டுவிடுகிறேன் என்று வீம்பு கூறினார். அந்த வீம்பு வீண்போகவில்லை. சுமார் ஒரு வருஷத்துக்குமுன் இந்தப் பிள்ளையவர்கள் "கிரகங்கள் இருக்கும் நிலைமையைப் பார்த்தால்,

1902ஹு ஜூன்மீ 21-ம் தேதிக்கும் 28-ம் தேதிக்கும் நடுவில் நம்முடைய மன்னுதிமன்னர் பிளவை போன்ற கட்டிச் சிரங்குகளினுல் கஷ்டப்படுவார்; தேகமெல்லாம் அவஸ்தையாய் இருக்கும்; அதினுல் அபாயமும் உண்டாகலாம். இதற்குக் கிரகப்பிரீதியாய்க் காராம்பசுக்கள் தானம் பண்ணவேண்டுமென்று இந்து சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. அப்படிச்செய்தால் நம்முடைய மன்னுதி மன்னருக்குக் கொஞ்சம் உபசாந்தியாய் அவஸ்தை நீங்கும்'' என்ருர். இப்படிக் குறிசொல்லிப் பரிகாரஞ் சொன்னவர், "ஆனுலும் குறிசொல்வதுபோல அவ்வளவு லகுவாய்க் காராம்பசுக்கள் கிடைக்காது'' என்று பரிகாசமும் செய்தார்; இப்படிச் செய்தவர்க்கு அரசர் யாதாவது காராம்பசுக்கள் கொடுத்தாரோ என்ருல், அது பெற்றுக்கொள்ளக் குறி சொல்லும் நம் பிள்ளையவர்கள் யாதொரு பிரயத்தினமும் செய்யவில்லை; அது மிக விசனகரமானதுதான். அப்படி முயற்சி செய்திருந்தபோதிலும் காராம்பசுக்கள் இவர்க்குக் கிடைத்திருக்குமா என்பது சந்தேகம்; ஏனென்ருல்:—எப்போது இந்துக்கள் சாஸ்திரங்களில் சொன்னதை அரசர் ஒப்புக்கொண்டு காராம்பசுக்கள் தானம் பண்ணுகிருரோ அப்போது அச்சாஸ்திர விதிப்படித்தான் பண்ணவேண்டும்; அக்காராம்பசு பிராமணர்களுக்குத்தான் தானம் கொடுக்க வேண்டும்; இவர் பிராமணரன்ருகையால் இவர்க்குக் காராம் பசு தானம் கிடைத்திருக்காது.

இருகவிர கந்தசாமிப் பிள்ளையவர்கள் இந்தியாவில் 1901ஞு ஆகஸ்டுமீ 30-31-ம்தேதி பூகம்பம் உண்டாகுமென்றும்; அதற்குப்பிற்பாடு இங்கிலாண்டை அடுத்த வருஷத்தில் இரண்டு அரசர்கள் படையெடுப்பார்கள் என்றும்; கன்னாட் இளவரசருக்கு வருகிற அக்டோபர்மீ 28, 29, 30-தேதிகள் ஒன்றில் ஒரு ஆபத்துநேரிடுமென்றும்; ஆகையால், கன்னாட்டு இளவரசர் அந்தக் காலத்தில் ஒரு ஆயுதத்தையும் தொடாமலும் ஆயுதசாலை வழிக்குப் போகாமலும், ஆயுதபாணிகளோடு ஒரு விவகாரமும் பண்ணாமலும், இன்னும் வேண்டிய முன்சாக்கிரதைகள் செய்துகொண்டிருந்தால் நல்லது என்றும் குறிசொன்னார்.

குறி சொல்லும் செய்திகள் சரியாய்ச சொன்னபடிப்பலிக்கிறதில்லை; அதற்கொரு திருஷ்டாந்தரம இதோ இருக்கிறது.—வங்காளத்தில் மன்மத பட்டாசார்ஜ் ஜோதிஷரும் வைத்தியருமான ஒரு கனவான், போன ஜூன் மாசத்தில் காளிகட்டத்தில் (Calcutta) அரசரைப்பற்றித் தம்மைப்பலரும் அடிக்கடி கேட்கத் தலைப்பட்ட போது,அவர்கள் யாவர்க்கும் ஒரேதடவையாய் அரசரின் கதி யிப்படிப்பட்டதென்று தெரிவித்து அவர் மனோ வியாகூலத்தைத் தணிக்கும்படி:— சுக்கிரன் 1,2-வது இடத்தில் இருப்பதால்முடிசூட்டும் முடிசூட்டுக் கொண்டாட்டங்களும் பங்கப்படும்படி அரசனுக்கு யாதொரு அசௌக்கிய

மும் சொற்பமாய்க் கூட வாராது. ராய்டர் தந்தி அடித்த குளிரும் சலதோஷமும் கொஞ்ச நாள் தானிருக்கும். சுக்கிரன் 1, 2-வது இடத்தில் இருப்பதால் இந்தியாவில் கூட ஜனவரி மாதம் (1-ந் தேதி யன்று) வெகு வேடிக்கையும் படாடோபமும் விநோதமும் நடக்கும்;—என்றுதமக்குத்தெரிந்ததை முன்னுடியாய்க் குறிசொன்னர். இந்த ஜோதிஷி சொன்னவிவரம் பலபேர்க்கு இன்னதென்று அர்த்தம் புரியாது; இந்தமாதிரி அர்த்தம் புரியாமல் சொல்வதினும் சும்மாயிருந்தாவது அல்லது வேறே விதமாய்க் காலக்ஷேபம் செய்தாவது காலந்தள்ளலாம். அன்றி, இவர்சொன்னபடி நேர்ந்தது என்றாலோ, அதுவுமில்லை.

மறுபடியும் நம் சென்னையில் வெகு தேசாபிமானத்துடன் வீற்றிருக்கும் மகா தைரியசாலியும் ஊக்கமுடையவருமான திவான் பகதூர் R. ரகுநாத ராவு அவர்கள் நம் மன்னுதி மன்னரைப்பற்றிப் பலபேர் பலவிதமாய்க்கெட்ட குறிகள சொல்லப்பார்த்து ஏழெட்டு மாதங்களுக்கு முன் மன்னுதிமன்னரின் ஜாதகத்தைப்பற்றி மந்திரவாதிகளைக் கேட்டார்: அந்த மந்திரவாதிகள் "நம் மாகாப் பிரியமுள்ள மன்னுதிமன்னர் சீக்கிரம் சிங்காதனமேறி (அதாவது முடிசூட்டப்பட்டு) தம் நாடுகளில் மிகப் பிரகாசமாய்ப் பெரும் பேர் பெற்றுஇன்னும் 15-வருஷத்துக்குக்குறையாமல் அரசாண்டு வருவார். சில வியாதிமாத்திரம் அவரைச் சற்றுப்பீடிக்கும்; ஆயினும், இன்னும் பல

ளாண்டுக்கு அவர் ஆயுள்கெட்டிதான், ஆயுளுக்கு மோசமில்லை என்று சொன்னார். ஐரோப்பாவில் நம் மன்னாதி மன்னரைப்பற்றி ஜோதிஷிகள் சொல்லிக்கொண்ட கெட்ட செய்திகளுக்கு நேர் விரோதமாய் இதை ஸ்ரீ ஐயரவர்கள் விளம்பரஞ் செய்தார்.

ஸ்ரீ கந்தசாமிப்பிள்ளையவர்கள் தாம் சொன்ன ஜோதிஷத்துக்குக் கடையில் "நம்மன்னாதிமன்னருக்கு இந்தமாதிரியான விபத்துக்கள் யாதொன்றும் நேராமல் இருக்கவேண்டுமென்று நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன், அப்படி ஒரு வேளை அந்தவிபத்துக்களும்ஆபத்துக்களும்வந்துவிட்டாலும் நம் யகாப்பிரபுவானவர் அவற்றால் யாதொரு தீங்குமடையாமல்தப்பித்துக்கொள்வார்" என்று வெரு பெருமையைக் காட்டினார். இந்த விஷயத்தில் நாம்யாவரும் ஸ்ரீ கந்தசாமிப் பிள்ளையவர்களோடு சேர்ந்துகொள்ளவேண்டும்.

இவர் சொன்னபடி பூகம்பமும் பலித்தது. சென்ற ஆகஸ்ட் மாசம் 30-31 - தேதிகளில் பாதாளலோகமாகிய அமெரிக்காக் கண்டத்திலும் (மார்ட்டினிக் தீவில்), தெற்கே சிம்மளத் தீவிலும், நம்மிந்தியாவில் வடக்கே வங்காள மாகாணத்தில் அடுத்த செப்டம்பர்மீ 6-ம் தேதியிலும் எரிமலை எரிச்சலும், பூகம்பமும் உண்டாயின. மற்றிரண்டு தேதிகளும் எப்படியாகுமோ தெரியவில்லை!

## இராஜனுடைய உள்ளங்கை.

லண்டனுக்குத் தெற்கே ஒரு துறைமுகப் பட்டணத்துக்கு அருகாமையில (Brighton) கிழவி ஒருத்தியிருக்கிறாள். இவள் (Gipsy Lee) வெகு நாளாயக் குறிசொல்லுந் தொழில் வைத்துக் கொண்டிருக்கிறாள். இவள் முன்னொரு தடவை இராஜன் உள்ளங்கையைப் பார்த்துவிட்டு இவருக்குப் பட்டாபிஷேகமாகாது, அதுவரையில் பிழைக்கமாட்டார் என்று சொன்னாளாம். இப்போது அவளைப் போய் "நீ அப்போது அப்படிச் சொன்னாயே! இப்போது, இராசனுக்குப்பட்டாபிஷேகம நடந்துபோயிற்றே!" என்றுகேட்டதற்கு "நான் அப்படி ஒன்றும அபசகுனமா யிராஜனைப் பற்றிச் சொல்லவும் இல்லை; அப்படி ஏதாவது அசுபமான சேதிகள் இராஜனைப்பற்றி இருந்தாலும் நான் சொல்லியிருக்கவே மாட்டேன்; நான் சொன்னது என்னவென்றால், இராஜன் கையைப் பார்த்தவுடன் எனக்கு ரேகைகள் என்னமோ ஸ்பஷ்டமாயில்லை போலத் தோன்றின; அது எனக்கு வெகு வேடிக்கையாய்த்தா னிருந்தது. அந்த ரேகைகளைப் பார்த்துக்கொண்டே போனேன்; திடீரென்று அவை அழிந்து மங்கி மறையத்தலைப்பட்டன. அப்போது இராஜனுக்கு என்னமோ கொஞ்சம் ஆபத்துக்கள் நேரிடப்போகின்றனவென எனக்குத்தோன்றிற்று. அதை அவருக்குச்சொல்லிக் 'கொஞ்சம் ஜாக்கிரதையா யிருக்கச் சொன்னேன்; அந்த ஆபத்துக்கள் உடம்பு சொஸ்தமில்லாமல் போகிறதா அல்லது கொலையா

என்று குறிப்பாய் ஒன்றும் சொல்லவில்லை. இப்போதும் சொல்லுகிறேன்: மகாப்பிரபுவின் வாழ் நாள் வெகு பெருமையாய்க் கழியும்; நான் சொல்கிறேனே! வேண்டுமென்றால் பாருங்கள்; பின்னால் உங்களுக்குத் தெரியும். இந்தமகாப்பிரபுவைப்பல வருஷங்களுக்குமுன்னால் பார்த்தேன்; வெகுசாய் அங்கே எங்கேயோ (at the Ice Carnival at the Albert Hall) பார்த்தஞாபகமாயிருக்கிறது; இன்னுங்கூட இராஜன் கையைப்பார்த்து நான் சொல்லலாம், கஷ்டமன்று; அவர்க்குஆயுள்வெகு ரொம்ப இருக்கும்; வெகு கிழவராவார். இந்தச் சங்கதியைஅப்போதே அவர்க்குநான் சொன்னேனே! என்னண்டை யாரோ அவரை அழைத்துக் கொண்டு வந்தார்கள். அவரை நான் இன்னார் என்று கண்டுபிடித்துக்கொள்ளமாட்டேனென்று அவர்கள் நினைத்தார்கள். எனக்கு வேல்ஸ் இளவரசர் முகங்கூட அடையாளந் தெரியாமற் போக வேண்டுமா? அவர் என்னண்டை கொண்டுவந்து விடப்பட்டபோது அவர்வேல்ஸ் இளவரசர்தான்; இன்னும் பட்டத்துக்குவரவில்லை. நானிவையெல்லாம் இளவரசர்க்குச் சொன்னவுடன் வெகு சந்தோஷப் பட்டுக்கொண்டு சிரித்தார். நீங்கள் இப்போது சொன்ன அந்தமாதிரியான பயங்கரமான சேதி அந்த இளஞ் செல்ல இராஜகுமாரனுக்குச் சொல்லியிருப்பேனோ?" என்றுசொன்னளாம்.

குறி சொல்பவர்களின் பேச்சும் நடவடிக்கைகளும் எங்கும் ஒரே மாதிரிதான். இங்கே

நம் தமிழ் தேசங்களில் குறிகேட்கவில்லையா! குறி கேட்கவில்லையா!! என்று தெருவில் குறச்சாதிப் பெண்பிள்ளைகள் கூவிக்கொண்டு வருகிறார்கள். வடதேசங்களிலும்அப்படியேவருகிறார்கள். இந்த வெள்ளைக்காரிச்சிகூட ஜிப்ஸி (Gipsy) சாதிப் பெண்பிள்ளை; ஜிப்ஸி என்றால் நிலையற்றுத் திரியும் யாசகர்; குறத்திகளுக்கு மாத்திரம் வீடுவாசல் நிலையேது?

## இராஜன் வியாதி.

இதை யெல்லாம் இலட்சியம் பண்ணாமல் 1902-ம் வருஷம் ஜூன் மாதம் 26-ந் தேதி முடிசூட்டு வைபவம் நடக்கவேண்டுமாய் முகூர்த்தம் வைக்கப்பட்டது. இந்த முடிசூட்டு வைபவம் வெகு காம்பீரமாய் நடத்தவேண்டுமென்று பல பிரயத்தினங்கள்நடந்தன;26-ம்தேதிகிட்டத்தட்ட இராஜனுக்கு உடம்பு கொஞ்சம் என்னமோ போல இருக்கத் தலைப்பட்டது. அப்போது இது என்னமோ, அவர்போன இடங்கள் ஈரமாயிருந்திருக்கும், அந்த ஈரத்தில் போய்க்கொண்டு வந்து கொண்டிருந்ததால் வயிற்றில் அஜீரணமாயிருக்கும் (stomachic diarrhoea) என்று எண்ணப்பட்டது. இது ஜூன் மாதம் 21-ந் தேதி வரையில் நடந்த சமாசாரம்; இவர்க்கு முதல் முதல் உடம்பு அசௌக்கியங் கண்டது ஜூன் மாதம் 15-ந்தேதி:—அப்போதுசலதோஷமாயும் இடுப்பு வலியாயும் இருந்தது(Symptoms of lumbago); கடைசியாய், வலதுபக்கத்தில் பெரியகுடல்,அதா

வாது கீழ்க்குடல் (large intestine) அடியைச்சுற்றி வீக்கமே (inflammation) கண்டிருந்ததாம்; அந்த வியாதிவந்தால் சாதாரணமாய் வெளியில் ஒரு கட்டிச்சிரங்கு புறப்படுமாம்; அப்போது அந்த இடத்தை அறுக்கவேண்டி நேரிடும்; சாதாரணமாய் 40, 50-வயதுக்குப் பிறகுதான் இந்த வியாதி மனுஷர்களுக்குண்டாகிற வழக்கம். இந்தியாவிலும் இந்தவியாதி சாதாரணமாய்த்தோன்றுகிறது; சிலவேளையில் முண்டுச்சிரங்கு (boil or abcess) புறப்படு முன்னாலேயே எங்கே வலிக்கிறதோ அந்தஇடத்துக்குச்சரியாய்க்குடலை அறுப்பதுமுண்டு; ஏனென்றால், சிரங்கு புறப்பட்டுவிட்டால் மனுஷன் பலவீனப்பட்டுப் போகிறான். மகாப்பிரபுவுக்கு ஜூன் மாசம் 24-ந் தேதி அந்தச் சிரங்கை வைத்தியர் (Sir Frederick Treves) பகல் 12-மணிக்கு அறுத்தார்; வெகு நேர்த்தியாய் அறுத்துவிட்டார்; இராஜன் அப்போது வெகு பொறுமையாயிருந்தார். சாயந்திரம் ஆறு மணிக்கெல்லாம் இப்படி அறுப்பதினால்சிரங்கினாலுண்டான வலியின்றிப்போய் வெகு சுகமாயிருந்தார். ஆனாலும் இவர்க்கு, ஆயுள் கெட்டி, கெட்டியில்லை யென்று சொல்லச் சில நாள் போகவேண்டுமென்று வைத்தியர்கள் சொன்னார்கள். அறுக்கு முன்னால் இராஜனுக்கு மயக்கம் கொடுத்து அவரை ஒரு வெறுங் கட்டைபோல ஆக்கிவிட்டார்கள். அப்படி ஆக்காதுபோனால் அவர் வலி பொறுத்திருக்கமாட்டார். இந்தச் சிரங்கு உள்ளேயிருந்ததே ஒழிய வெளியில் இல்லை; அதா

வது வெளியில் அதற்கு வாயில்லை. உள்ளே சிறுக்குடலில் (Vermiform) ஒரு ஓட்டை உண்டாயிற்று. குடலில் இருக்கப்பட்ட துர்மலம் அதின் வழியாய் வயிற்றில்தொப்புளின் கீழ் வலதுபக்கத்தில் இருக்கப்பட்ட சந்துகளில் வந்துகொண்டிருந்ததால் அந்தத் துர்மலமெல்லாம் ஒரு சிரங்காய்த் திரண்டது. இந்தச் சிரங்கால் இராஜன் தேறுகிறதற்கு 3-மாசம் பிடிக்குமென்று வைத்தியர்கள் சொன்னார்கள். இன்னும் கொஞ்சநாள் இந்தச்சிரங்கை இப்படியே இலக்ஷியம் பண்ணாமல் விட்டிருந்தால் இராஜன் பிழைப்பது துர்லபமாயிருந்திருக்கும்.

## இவர்க்குச் சிரங்கு அறுக்கப்பட்ட விதம்.

வலது கவிட்டியண்டை, வயிற்றுக்குக் கீழே தொடைக்குமேல், வயிற்றுக்கும் தொடைக்கும் நடுவில் (Groin) வைத்தியர் ஒரு அறுப்பு அறுத்து அந்த அறுப்பை மேலே கொண்டு போனார். இந்தமாதிரிச் செய்து, உள்ளே இருக்கப்பட்ட சீ வெளி வராது பண்ணிக்கொண்டு தடையாய் இருந்ததை நீக்கிவிட்டார். இதினால் குடலில் நடக்க வேண்டிய வேலை (முன்னால் தடைபட்டிருந்தது) இப்போது தடைபடாமல் நடக்கத் தொடங்கிற்று. இந்தமாதிரி அறுப்பதற்காக வைத்தியர் இராஜனுக்கு மயக்கம் கொடுத்து அவரைக் கட்டிலினின்றும் வெளியில் எடுத்துப் போட்டார். இப்படி அறுப்பதால்

வெகு மோசம் நேரிடும்; இரணவைத்தியம் இந்தக்காலத்தில் எவ்வளவு விருத்தி யடைந்திருந்த போதிலும் மோசம் மோசந்தான். இப்படி அறுக்கு முன்னால் வைத்தியர் (Sir Frederick Treves) அநேக கைகார வைத்தியர்களுடைய அனுமதி பெற்றுக் கொண்டார்; அவர்கள் சொன்ன புத்திமதியைக் கேட்டுக்கொண்டார். இராஜன் மயக்கந்தெளிந்து தம் புத்தி தமக்கு வந்தவுடன் "என் பிள்ளையாகிய வேல்ஸ் இளவரசைக் கொண்டுவாருங்கள், நான் பார்க்கவேண்டும்" என்று வைத்தியரைக் கேட்டுக்கொண்டார். அவ்விளவரசர் உடனே தம் தகப்பனரை ஒரு விநாடி பார்க்கும்படி விடப்பட்டார். இவர் தம தகப்பனரைப் பார்த்தவுடன் இவ்வளவு நன்மையாய் இந்தச் சிரங்கு அறுக்கப்பட்டதே என்று குதூஹலப்பட்டார்.

## அரசர்கள் பிணியாளிகளா யிருந்தால் வைத்தியம் எப்படி?

இராஜன் சாதாரணமாய் நல்ல குணசாலியான பிணியாளியானபோதிலும், தமக்கு நோய் வந்தகாலத்தில் சாதாரணமாய் மிகப் பொறுமையாயிருந்தபோதிலும், சில வேளையில் பிணியாய்ப் படுக்கையில் படுத்துக்கொண்டிருந்த காலத்தில் அவர்க்கு வைத்தியர்கள் வைத்திருந்த பலவிதமான தடைகளுக்கு அவர் ஒப்பாமலே யிருந்தார். சாப்பாடு, சரியான சாப்பாடு சாப்பிடுகிறதில்லை; அபத்தியம் பண்ணுவது வழக்கமாயிருந்

தது. இவர் ஆயுளெல்லாம் வெளியில்போய் அங்கும் இங்கும் திரிந்து தேகப் பயிற்சி செய்து வந்தவரை உள்ளேயே அடைந்துக் கிடக்கும்படி வைத்தியர்கள் சொன்னால் அவர்க்குச் சரிப்படுகிறதில்லை; இரண்டு மூன்று நாள் பலவந்தத்தினால் உள்ளே இருந்தாலும் நாலாவது நாள் "இனி நான் உள்ளேயே இருக்கமாட்டேன். உலகத்திலுள்ள வைத்தியர்கள் எல்லாரும் வந்து எனக்குச் சொன்னாலும் சரிதான், நான் உள்ளே அடைந்துக் கிடக்கமாட்டேன்! ஒரே கண்டிப்பு!!" என்று சொல்லி விடுவது வழக்கமாம். இந்த மகாப் பிரபுவுக்குத் தம்மிடத்தில் வைத்தியராய் இருக்கும் ஸர் தாமஸ பார்லோ என்பவரிடத்தில் வெகு மரியாதையாம். இவரும் மகாப் பிரபுவும், (இராஜன் வேல்ஸ் இளவரசராயிருந்து வந்தகாலத்தில்) ஒருதரம் வாதாடிக் கொண்டார்கள். மகாப் பிரபு தம் தேகசௌக்கியத்தைப் பற்றிச் சற்றேனும் சிரத்தை எடுத்துக்கொள்ளாமல் இருப்பதைக்குறித்து மகாப் பிரபுவுக்கு ஒரு உபந்நியாசம் பண்ணிக்கொண்டே வந்தார். வரும்போது நடுவில்,

மகாப்பிரபு:—நிஜந்தான், வைத்தியரவர்களே நான் என்ன ஒரு குழந்தையா? என்னை ஒரு குழந்தையாகப் பாவித்துப் பேசுகிறீர்களே? (பிறகு ரொம்பச் சிரித்துக்கொண்டு) வைத்தியரவர்களே! ஒரு சங்கதி ஞாபகம் வைத்துக்கொள்ளும்; நான் ஒரு இளவரசனானதால், நான் சறு

கையாய்த்தான் இருப்பேன், அதற்குத் தாங்கள் உட்பட்டுத்தா னிருக்கவேண்டும்.

வைத்தியர்:—(வெகு ஆத்திரத்துடன் கடைப் பிடிபாய்) ஐயா! நான் தங்களைப் பேட்டி காணவந்த அறையிலாவது, அல்லது தங்களுடன் திண்டி தின்று கூத்தாடும் அறையிலாவது (Ball-room) தங்களோடு நான் பேசும்போது தங்களை ஒரு இளவரசராய் நினைப்பேன். தங்களை ஒரு பிணியாளி படுத்திருக்கும் அறையில் கண்டால், நான் தங்களைப் பிணியாளியாய்த்தான் எப்போதும் நினைக்கிறேன்.

மகாப் பிரபு கடிதங்கள் எழுதவேண்டுமானால் எப்போதும் அவர்க்குச் சோம்பல்தான். இவர் உடம்பு செம்மையில்லாமல் எப்போதாவது அறையில் தனியே படுத்துக்கொண்டு விட்டால்தான் அவர்க்குக் கடிதங்கள் எழுத ஆசை பிறக்கும், ஆவலுண்டாகும். மற்றப்படி அவ்வளவுண்டாகாதாம். ஒரு தரம் ஜர்மன் சக்கரவர்த்திக்கு மகாப் பிரபு தாம் வேல்ஸிளவரசரா யிருந்த காலத்தில் எழுதினதைப் பாருங்கள்:— "இப்போது எனக்குச் சலதோஷம் ஆளைக் கொல்கின்றது. இரண்டு மூன்று நாளாய் வெளியில் கொஞ்சங்கூடப் போகக்கூடவில்லை; என் பிராணனுக்கு வருகிறது. எனக்குமனசு சரியில்லையாகையால், இப்போதாவது தங்களுக்கு எழுதலாமென்று நினைத்தேன்" இந்தக்கடிதத்தை ஜர்மன் சக்கிரவர்த்தி கடைசியாய் இங்கிலாண்டுக்கு வந்

தபோது மகாப் பிரபுவுக்குக் காட்டினார். மகாப் பிரபு அதைப் பார்த்து அதைத் தாம் தெரியாமல் முறட்டுத்தனமாய் எழுதினதைப் பற்றி வயிறு வெடிக்கச் சிரித்தார்.

## அரசர்களும் அவர்கள் வைத்தியர்களும்.

ஜர்மன் தேசத்துக்கு ஏகாதிபத்தியராயிருந்த ப்ரடெரிக் சக்கிரவர்த்தியாரிடத்தில் அநேகம் பேர்கள் வைத்தியர்கள் இருந்தும் அவருக்கு உடம்பு செம்மைப்படாமலே இறந்துபோனார். ருஷியா தேசத்து சக்கிரவர்த்தியான III-வது அலெக்சாண்டரண்டை பேருக்கு வெகு வைத்தியர்கள் இருந்தார்கள். ஆனால், அவர்கள்சொன்னதில் ஒன்றாவது அவர் இலட்சியம் பண்ணவில்லை. அவர் "ப்ரைட்ஸ்" வியாதியால் (Bright's disease) இறந்தார். அந்தவியாதியை நேரே பார்த்த வைத்தியர்கள் நியாயமாய்ச் சரியாய் அந்த வியாதிக்குச் சிகிச்சை செய்திருந்தால் இன்னும் சில வருஷம் பிழைத்திருக்கலாம் என்று சொன்னார்கள்.

பிராஞ்சு தேசத்துச் சக்கரவர்த்தியான காலஞ்சென்ற நெபோலியன் தன் வழக்கமான வைத்தியர்கள் சொன்ன மருந்தைக் கவனிக்கிறதே கிடையாது. ஒரு ஜர்மன் வைத்தியன் சொன்ன வைத்தியத்தையே கவனித்து வந்தார். இந்த ஜர்மன் வைத்தியன் ஜர்மன் தேசத்துப் பிரதானியான பிஸ்மார்க் என்னும் இளவரசரிடம்

வந்து இரகசியமாய் உழைத்துவந்தவன். இந்த வைத்தியன் சக்கிரவர்த்தியைத்தினம்தினம்பார்த்துக்கொண்டிருந்தான். சக்கிரவர்த்தினி இராஜ்யாதிபதியாய்வந்தபோது இவரைப்பிடித்துச்சிறையில் அடைத்து விட்டாள். இந்தத்தேசத்துக் காம்பெட்டா என்றமந்திரியண்டை சக்கிரவர்த்தியின் தேகஸ்திதியைப் பற்றி இந்த வைத்தியன் சொல்லிக்கொண்டிருந்தான். பிராஞ்சுதேசத்துக்கும் ஜர்மன் தேசத்துக்கும் 32-வருஷங்களுக்கு முன் இந்தச் சக்கிரவர்த்திகாலத்தில் ஒரு யுத்த முண்டாயிற்று. "எப்படியும் ஒரு யுத்தம இந்தச் சக்கிரவர்த்தினியால்தான் உண்டாகப் போகிறது; அது நிச்சயம்; அப்போது சக்கிரவர்த்தியைச் சக்கிரவர்த்தினியார் நேரேபோய்ச் சேனாதிபதித்தனம் பண்ணச் சொல்வதும் நிச்சயம்; சக்கிரவர்த்திக்கு ஏற்கனவே உடம்பு கெட்டுப் போயிருக்கிறது. யுத்தத்தினின்று திரும்பிவந்தால், பிணமாய்ப் பாடையில் தான் வருவார்" என்று யுத்தம் கிளம்பச் சற்றுநாள் முன்னால் சொன்னான். "அன்றி, தேசத்தில் இப்போது ஏகாதிபதியாய்ச் சக்கிரவர்த்தி ஒருவன் இருக்கிறான். இனிச்சக்கிரவர்த்திஸ்தானத்தைப்போக்கடித்துக்குடியரசு ஒன்றுஏற்படுத்தச் சித்தப்படுங்கள்" என்றும் சொன்னான். யுத்தம் வரவேவந்தது; பிராஞ்சும் தோற்றது; சமாதானத்துக்குப் பிறகு நாட்டில் கலகமுண்டாய்க் குடியரசு முண்டாயிற்று. இந்தக்கலகம் கிளம்பின அடுத்த தினம் இந்த வைத்தியனை இந்த மந்திரி சிறையினின்றும் விட்டுவிட்டார்.

இந்தச் சக்கரவர்த்தியின் தேகத்தின் நிஜமான வியாதி யுத்தத்துக்குமுன்னாலேயே ஜர்மன் டாக்டர்களால் கண்டு கொள்ளப்பட்டது. ஆனாலும், அதைச் சக்கரவர்த்திக்குச் சொல்லாமலிருக்கப் பிரியராயிருந்த கட்சியார்கள் ஒளித்துவைத்திருந்து யுத்தங்கிளம்பினவுடன் சக்கரவர்த்தியின் பெயரில் என்னவோ ஒரு மகிமை இருக்கிறதென்று அவரை ஒரு ஊரில் சேனாதிபத்தியம் பண்ணச் சொன்னார்கள்.

போர்த்துகல் தேசத்து இராணி ஆசுபத்திரிகளில் தாதிவேலை கற்றுக்கொண்டிருந்தாள். டூரினில் இருக்கப்பட்ட மற்றொரு அம்மாள் தாதி (Nurse) வேலையைப்பற்றியாவும் கற்றுக்கொண்டாள். தன் தகப்பன் வியாதியாய் இருந்தபோது தாதி ஒருவள் பிணியாளிக்குச் செய்யக்கூடிய நலமிப்படிப்பட்டதென்றும், அறிந்துகொண்டாள். தாதி ஒருத்தியில்லாமல் பிணியாளிக்கு எவ்வளவு பேர் வைத்தியர்கள் நிபுணர்களாயிருந்து முபயோகமில்லை.

இராணியார், தம் கணவர்க்கு வியாதிவந்தால் இந்த உலகத்தில் அவரைப்போல் பக்கத்திலிருப்பவர்களை அவஸ்தைப் படுத்துகிறவர் ஒருவரையும் காணேம் என்று எப்போதும் சொல்லிக் கொள்கிறார். இராஜன் அநேகந்தடவை "நான் என்னுடம்பைச் சரியாய்ப் பார்த்துக்கொள்ளாமற்போனாலும், எனக்குயிர் தக்கிக்கொண்டேயிருக்கிறது" என்று தம் வாயிலேயே ஜம்பமும்

பெருமையும் சொல்லியிருக்கிறார். இவர் மருந்து சாப்பிடுவதில் அசிரத்தை செய்வதுபோல உலகத்தில் மற்ற யாருஞ்செய்யமாட்டார்கள்.

ஜெர்மன் சக்கிரவர்த்தியார்க்கு, அதாவது நம் மகாப்பிரபுவின் (சகோதரிவயிற்றுக் குமாரரான) மருமகனுர்க்குக் கோபம் தாபம் சுபாவமாகவே வெகு உண்டு. அவர்க்கு வியாதி வந்துவிட்டால் இந்தக் கோபதாபம் அதிகரிக்கின்றன; ஏனென்றால், அவர் உள்ளேயே அடைத்துக்கிடக்கத் தம் மாமாவைப்போல இஷ்டமேகிடையாது. அப்போது, தாம் பிறருடன் முன்னுடியாக ஒப்புக்கொண்ட வேலைகளெல்லாம் நிறுத்திவைக்க வேண்டி யிருக்கிறபடியால் அவர்க்கு வெகு கோபம் வந்துவிடுகிறது. இவர் சில வருஷங்களுக்குமுன் வெகு அபாயமாய்ப் பிணியுடன் இருந்தபோது,

தம்வைத்தியர்:—ஐயா! தாங்கள் இன்னும் இரண்டு மூன்றுநாள் வெளியில் போவதைக் கனவிலும் விட்டுவிடுங்கள். மகாப்பிரபுக்கள் என்னமோ வேலை வேலை என்று சொல்லுகிறீர்கள், அவற்றையெல்லாம் கொஞ்சநாள் விட்டு வையுங்கள் என்றார்.

சக்கிரவர்த்தி:—ஐயா! நான் இன்னும்நான்கு விருந்துகளுக்கும், (Dinner), மூன்று கடைகளுக்கும் (Bazaars), இரண்டு இடத்தில் தப்பு ஒப்புகள் பார்த்துச் சொல்வதற்கும் (Reviews), ஒருகலியாணத்துக்கும் போகவேண்டி யிருக்கி

றது. தாங்கள் என்னமோ, என்வேலை யெல்லா வற்றையும் தூரத்தே கட்டிவைக்கச் சொல்லுகி றீர்கள். வைத்தியர்களே! ஒரு சக்கிரவர்த்திக்குப் பிணியாயிருந்து கட்டாது, சக்கிரவர்த்திக்கு உடம்பு கெட்டால், அவன் நாடும் கெட்டுப் போம் என்பது உறுதி.

## ராணியார் தாதித்தனம் செய்தது.

இங்கிலாண்டின் குடிகளுக்குத் தம் மகாப்பிர புவின் தேகசௌக்கியத்துக்காகவிசனம் பொங் கிக்கொண்டு இருப்பதும் தவிர, ராணியாரும் தம் கணவர்க்கு உடம்பு செம்மையில்லாமல் போன நிமிஷந்தொட்டு, இனி அவர்க்கு அபாய மில்லை என்று தெரிந்தவரையில் பெருத்த சுமை ஒன்று மேற்கொண்டார்: நிஜமாகவே தம் கண வர்பக்கத்தில் இருந்து தாதி வேலை நடத்திவரு வதே கடனாயிருந்தார். மகாப் பிரபுவின் புண்கீறி விடப்பட்டது முதல், லண்டன் ஆசுபத்திரியிலி ருந்து ஒரு தாதியும்; "தாதிகள் வீடு" என்னும் இடத்திலிருந்து ஒரு தாதிச் சிப்பந்தியும்;—ஆக இவர்கள் மகாப்பிரபுவண்டைக் கைகட்டிக் காத் துக்கொண்டு இருந்தார்கள். ராணியார் பிணியா ளியிருக்கும் அறைக்கு அடிக்கடிபோய்க் கொண் டிருந்தார். அங்கே தம் கணவர்படுங் கஷ்டத் துக்கு உபசாந்தி செய்துகொண்டு வந்தார். இந்தமாதிரி இயற்கையான தாதியே செய் வாளேயன்றிக் கூலிக்கு வருபவர்கள் செய்வது அரிது. இப்படிச் செய்து கொண்டிருந்தபோதி

னும், ஆசுபத்திரிகளில் பயிற்சி அடைந்த மேற்படி தாதிகளின் கடமைகளுக்கு யாதொரு தவக்கமும் தடையும் செய்யவில்லை. பக்கிங்காம் அரண்மனையிலிருந்து எப்போது துண்டுப்பத்திரங்கள் வெளிப்படப் போகின்றனவென்று குடிகள் காத்துக் கொண்டிருக்கும் முட்டான சமயத்தில், பிணியாளியானமகாப் பிரபுவுக்கு ராணியார் தாதியாயிருந்து சேவகம் செய்தது அவர்க்கு வெகு இன்பத்தையும் சுகத்தையும் கொடுத்தது என்றால்; மகா அபாயமான காலத்தில் ராஜாவண்டை தாதிக்கடமைகளைச் செலுத்தும் பொருட்டு வந்த தாதிகளுக்கு, அத்தாதிகளண்டை யிருந்து கொண்டு ராணியார் ராஜாவுடன் கூடக்கஷ்டப்பட்டுக்கொண்டும், தம் கணவருக்கு வேண்டியது எதுவோ அதைத் தெரிந்து கொண்டும், அவர்க்கு அவற்றை ஆயாசம் வாராமல் கொடுத்துக்கொண்டும் வந்தது எவ்வளவு தைரியமாய் இருந்திருக்கவேண்டாம்? இந்தம்மாள் தம் கணவர்க்குப் பிணி வந்தபோதெல்லாம் இப்படித் தான் உழைக்கிற வழக்கம்.

## ராஜாவுடன் கப்பலுக்குப் போன தாதிகள்.

இருப்புப் பாதை வண்டியில் ஏறிப் போர்ட்ஸ்மத் துறைமுகத்துக்குப் போகும்படி அவ்வளவு ராஜாவுக்கு உடம்பு சொஸ்தமாகி அவர் அந்தத்துறைமுகத்தில் கப்பல் ஏறினபோது, அவருடன் இரண்டுதாதிமார்களும் ஏதுக்காக ஏறி

போனார்களென்று குடிகள்சொல்லிக்கொண்டார்கள். சிலபேர், இதினால் குடிகள் எண்ணினபடி மகாப்பிரபுவுக்கு உடம்பு அவ்வளவு சொஸ்தமாகவில்லையென்று சொன்னார்கள். இது தப்பு; இவர்க்குத் தாதித்தனம் பண்ணுவது இப்போது அவ்வளவு கஷ்டமுள்ளதன்று. ஆனால், தாதிமார்கள் எப்படியும் வேண்டு மென்பது நிச்சயமே, அதில் சந்தேகமில்லை. ஆகையால், இத்தாதிமார்கள்எப்போதும்பக்கத்தில்கப்பலிலேயேஇருந்தாலொழிய, வேண்டும்போது அவர்களின் ஊழியம் ராஜனுக்குக் கிடைக்கமாட்டாது. ஆனால், இந்தத் தாதிமார்கள்இவ்வளவுநாளாய்மகாப்பிரபுவிஷயத்தில்தாதிகளாய்க்கஷ்டப்பட்டவர்கள்; இப்போது, மகாப்பிரபுவுடன் அவர்கள்கப்பலேறி அதில் சிரமபரிகாரம் அடைந்துகொண்டுவந்ததைப்பார்த்து மகாப்பிரபு சந்தோஷப் படுவாரென்றே நாம் நம்பவேண்டும். இரண்டு தாதிமார்களில் ஒருத்தியும், ராணியம்மாளும், இரண்டு வைத்தியர்களும் மகாப்பிரபுவோடு கூடப் போனார்கள். மற்றொரு தாதியம்மாள் பக்கிங்காம் அரண்மனையை விட்டு முன்னாலேயே தலையணைகளும், கம்பளிகளும்எடுத்துக்கொண்டு கப்பலுக்குப் போயிருந்தாள்.

இந்த மாதிரியாய், மகாப்பிரபுவானவர் மேற்சொன்னபடி ஒரு தாதியுடனும் ராணியுடனும் புகைவண்டி முட்டிக்குப் (Station) போனவுடன் சவாரிக் குதிரைகள் காலிடறிக்

கீழேவிழுந்தன; ஆயினும், யாருக்கும் அபாயம் சம்பவிக்கவில்லை. பட்டகாலே படும் கெட்ட குடியே கெடும் என்பதுபோல, நம் மகாப்பிரபுவுக்கே ஆபத்தெல்லாம் நேர்கின்றன!



## 6-வது இன்பம்.

# முடிசூட்டு முகூர்த்தப்படி நடக்காமல் நின்றுபோனது.

### ஆபிக்கோயிலில் முடிசூட்டு நின்று போன செய்தி கேட்ட வயணம்.

ஒரு பிரபுவானவர் (Earl Marshal) துரைத்தனச் செய்தியத்தில் (Government Gazette) "முடிசூட்டு மகிமை ஜூன்மீ 26-ந் தேதியில் நடக்கவில்லை, இன்னும் எப்போதாவது சௌகரியப்படி ஒரு நாள் நடக்கும். எனக்கு இராஜன் தம்முடைய முடிசூட்டுச் சடங்கு தம்முடைய பிரமாதமான பிணியால் நின்றுபோயிற்றே என்று தாம் விசனப்படுவதாக ஒரு சேதி அனுப்பித்திருக்கிறார். ஆகையால்,லண்டன் நகரத்தில் நடக்கவேண்டிய கொண்டாட்டங்களெல்லாம்கூட நிறுத்திவைக்கப்படும். ஆனால் நாட்டுப் புறங்களில் இதற்கு முன்னாலேயே ஏற்பாடான படிக் கொண்டாட்டங்கள் யாவும் நடக்கவேண்டுமென்று இராஜனுக்கு இஷ்டம். அப்படியே எல்லாம் நடக்குமென்று நம்புகிறார்" என்று விளம்பரம் போடுவித்தார்.

இந்தச் சங்கதியைக் கேட்டவுடன் லண்டனில் குடிகளுக்கு வெகு விசனமாயிற்று. இராஜ

னுக்கு இவ்வளவு பிரமாதமாய் வியாதி முற்றி விடுமென்று ஒருவரும் நம்பவில்லை. ஆபிக்கோயி லில் நடக்கவேண்டிய ஏற்பாடுகள் யாவும் செய்து கொண்டிருந்த அரசூழியர்கள் எல்லாரும் இதைக் கேட்கவே வெகு விசனப்பட்டுத் துக் கித்தார்கள். மத்தியானம் 12-மணிக்கு, ஆபிக் கோயிலில் அதற்குரிய பெரும் வாத்தியத்தை வாசித்துப்பார்க்கலாமென்று வாத்தியக்காரர்கள் எல்லாரும் சித்தப்பட் டிருந்தபோது அநேகம் பேர் அந்தவாத்தியத்துப் பக்கங்களில் வெகு சிரமத்துடன் இடம் பொத்திக்கொண்டிருந்தார் கள். இப்படி யிருக்கும் சமயத்தில், ஒரு அரசூழி யர் ஆபிக்கோயிலுக்குள் நுழைந்தார். அப் போது, அக்கோயிற் குருமாருக்கு (Bishop of London) என்ன சொன்னர் என்றால்:—இரா ஜன் வெகு சொஸ்தமில்லாம லிருக்கிறார்; முடி சூட்டு நாளைக்கு நடக்காது;—என்று சொன் னர். அப்போது, அக்கோயில் குருமார் (Bishop of London) அங்குள்ள கோயிலூழியர்களுக் கெல் லாம் இந்தச் சங்கதியைச் சொன்னர். இப்படிச் சொல்லவே, எல்லாரும் வெகு துக்கப்பட்டார் கள், விசனப்பட்டார்கள்; கைக்கெட்டினது வாய்க்கெட்டவில்லையே என்று அழுதார்கள். எல்லாருக்கும் தம் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போலாயிற்று. உடனே, நாளைச் செய்ய வேண்டிய சடங்கொன்றை (Litany) அன்றைக் கே அப்போதே செய்துவிட்டார்கள். எல்லாரும் அப்போதே அந்தச்சடங்கின்போதேசுவாமியைப்

பிரார்த்தனை செய்தார்கள். இந்தமாதிரிச் சடங்கைச் செய்தபோது, வழக்கமாய் ஒரு ஆராதனையின்போது இந்த ஆபிக்கோயிலில் போட்டுக் கொள்ளவேண்டிய உடுப்புகள் குருமார்களாவது இன்னும் யாராவது போட்டுக் கொள்ளவில்லை. ஏனென்றால், நினைத்துக் கொண்டபோதே இந்தச் சடங்கு நடந்தது; இப்படி மௌனமாய் இருந்துகொண்டு சடங்கை நடத்தினது ஒரு ஆச்சரியமாயிருந்தது; அது அந்தச்சடங்குக்கு வெகு பெருமையைத் தந்தது. சுவாமிக்குப் பிரார்த்தனை செய்யும் போது எல்லாரும் மௌனமாய்த்தான் கால் மண்டிபோட்டுக் கொண்டிருந்தார்கள்; வெகு பரிதாபமாயிருந்தது!

இந்த மாதிரி முடிசூட்டுநின்று போயிற்று என்ற சங்கதி, லண்டனுக்குத்தெரிகிறதற்கு முன்னால் பெரும் பிரீடனாகிய ஒற்றைத் தலை அரசெல்லாம் பரவிப்போயிற்று, அவ்வளவு சீக்கிரமாய் இந்தச் சேதி வெளிப்பட்டுப் பரவிற்று. லண்டனிலோ, குடிகள் வெளிகளிலிருந்து (country-side) நாளைக்கு முடிசூட்டு! நாளைக்கு முடிசூட்டு!! என்று புகைவண்டி புகைவண்டியாய், குழிப் பாதைவண்டி குழிப்பாதை வண்டியாய் வந்து சாய்ந்துகொண்டிருந்தார்கள்.குடிகள் அலங்கரிக்கப்பட்ட இராஜவீதிவழியே ஒரு தரம் அப்படிப் போகிறது, ஒரு தரம் இப்படிப் போகிறது, ஒருதரம் தனியாய்ப் போகிறது, ஒருதரம் பெண்டாட்டி களோடு மாத்திரம் போகிறது, ஒருதரம்

பெண்டாட்டி பிள்ளைகளோடுகூடப் போகிறது, ஒரு தரம் வண்டியில்போகிறது, ஒருதரம் நடந்து போகிறது இப்படிப் பலதரம் பலவிதமாய்ப் போய்க்கொண்டும் வந்துகொண்டுமிருந்தார்கள்; மகா குதூகலமாய் இருந்தார்கள். இப்படியிருக்க ஒரு பெரிய இடி விழுந்தாற்போல, இந்தச் சங்கதி அவர்கள்காதில் விழுந்ததும் எல்லாரும்மதி கலங்கிப் போனார்கள், எல்லாரும் விழிபிதுங்கி நின்றார்கள்; அவர்களுக்குப் பைத்தியந்தான் பிடித்துப்போயிற்றோ என்னமோஎன்று காணப் பட்டார்கள்.

பக்கிங்காம் அரண்மனையண்டை காட்சி வெகுவிசனகரமாயிருந்தது; அரண்மனைக்கு வருகிற வழியில் இராஜனைப்பார்க்க ஒரு பிரபு இப்படி வந்து கொண்டிருந்தான்; ஒரு பிரபு அப்படி வந்துகொண்டிருந்தான்; ஒருவன் அரண்மனையை விட்டு வண்டியேறிக் கொண்டிருந்தான்; ஒருவன் இராஜ பேட்டிக்கு அப்போது தான் அரண்மனைக்குள் நுழைந்துகொண் டிருந்தான்; இரண்டு பிரபுக்கள் சேர்ந்து இராஜா சௌக்கியத்தைப்பற்றி வழியில் பேசிக்கொண்டிருந்தார்கள்; ஒருவன் மற்றொருவனை துக்கங்கேட்டுக்கொண்டிருந்தான்; இவர்கள் வாயைப்பார்த்துக்கொண்டு தெருக் குடிகள் அவர்களைச் சுற்றி நின்றுகொண்டிருந்தார்கள்; சிலர் அரண்மனையிலிருந்து வந்துகொண்டிருந்த யாரையும் இராஜனுக்கு என்னமாயிருக்கிறது! என்னமாயிருக்கிறது!! என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். இராஜனை நேரேபோய்ப்

பார்ப்பதற்காகவேல்ஸ்இளவரசர்,பழையபிரதான மந்திரி (Lord Salisbury) ராபர்ட்ஸ் பிரபு ஆகிய இவர்கள் அரண்மனைக்குப்போயிருந்தார்கள்; இராஜனைப் போய்க் கண்டுபேசி வெகு நேரம் அரண்மனையில் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்களைத் தவிர அநேகம்பேர்கள் இராஜனுடைய நிஜஸ்திதியைத் தெரிந்துகொள்ள அரண்மனைக்குவந்திருந்தார்கள். அவர்கள் யாவரும் அங்கு, வேடிக்கை பார்க்கவந்தவர் கையெழுத்துப் போடும் புஸ்தகம் என்ற புஸ்தகத்தில் கையெழுத்துப்போட்டுப் போனார்கள். அங்கு அப்படி வந்தவர்களைக் கணக்கிட்டுச் சொல்லமுடியாது! இத்தனைபேரும் எளியோர்,மேலோர்,உயர்தரக்குடிகள், ஏழைகள், பணக்காரர்கள், தொழிலாளிகள், முதலாளிகள் ஆகிய இவர்கள் எல்லாரும் ஒருவர் தப்பாமல் முடிசூட்டு விஷயத்தில் ஏமாந்து போனார்கள். இராஜன் படுத்த படுக்கையை விட்டெழுந்திருக்கவில்லை. ஒருமணிக்கு ஒருதரம் இராஜன் தேகஸ்திதியைப்பற்றித் துண்டு விளம்பரச் சீட்டுகள் வெளியிடப்பட்டு வந்தன. அவற்றைப் பார்க்கப் பார்க்கக் குடிகளுக்குத் துக்கமும் விசனமும் சலிப்பும் முற்றிக்கொண்டே வந்தன.

## முடிசூட்டுக் கொண்டாட்டத்தை நிறுத்தினதால் கலகங்கள்.

முடிசூட்டுக் கொண்டாட்டங்கள் நடக்கக் கூடாதென்று அங்கங்கே ஊர்களில் உத்திரவு பிறந்ததினால் பல இடங்களில் குடிகள் கலகம் பண்ணினார்கள்:—

டன்ஸ்டேபில் என்ற ஊரில் எல்லா விதமான கொண்டாட்டத்தையும் நிறுத்த வேண்டுமென்று உத்திரவு பிறந்தது. உடனே குடிகள் ஒரு கூட்டம் கூடினார்கள். நகர மண்டபத்தின் மாடியிலிருந்து சொல்லப்பட்ட ஒரு தீர்மானத்தைச் சுமார் 1,000 சனங்கள் தழுவிப் பேசினார்கள். அவர்கள் அந்தஊர்நாட்டாண்மைக்காரரை (Mayor) அந்த உத்திரவை எடுத்துவிடும்படிக் கேட்டுக் கொண்டார்கள். அவர் அதற்கு இணங்கவில்லை. கிழவர்கள் குழந்தைகள் இவர்கள் விஷயமாயாவது அந்த உத்திரவை மாற்றச் சொல்லிக் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு மிணங்கவில்லை.

உடனே, கோபங்கொண்ட அந்தக் குடிகள் கையில் தப்பட்டையும் கொம்புமாய்த் தெருக்களில் புறப்பட்டு நாட்டாண்மைக்காரர் வீட்டுக்குப் போய்ச் சன்னல்களை யுடைத்தார்கள்; பிறகு மற்றொரு இடத்துக்குப்போய்ச் செக்கர்ப்பானை போலக் (Bonfire)கண்ணுக்குஅகப்பட்ட சொத்துக்கெல்லாம் நெருப்பு கொளுத்தினார்கள்.

மற்றொரு இடத்தில் (Hemel Hampr-stead) முடிசூட்டுவிருந்துக்குவரவழைக்கப்பட்ட தீனிமாட்டுமாம்சம் இவற்றை ஏழைச்சனங்களுக்கும் கொடுப்பதாக முடிசூட்டு கூட்டத்தார் தீர்மானம் பண்ண, ஒரு பெருத்த கலகம் நடந்தது. குடிகள் வெறிகொண்டு இந்தஉத்திரவு பிறப்பித்த சபையின் உறுப்பாளிகளின் (members) வீட்

டுச் சன்னல்களை உடைத்துத்தள்ளினார்கள்; சில பஜார் ஒன்றைப்பாழ் பண்ணினார்கள்; ஊர்க் காவல் பிடிப்போர் ( Police ) களுக்கு இந்தக் கலகம் அடங்கவில்லை; கடையில் பக்கத்திலிருந்து குதிரைப் படைகள் வந்து அதை அடக்கின.

மற்றொரு இடத்தில் எல்லாக் கொண்டாட்டமும் நின்று விடவேண்டுமென்று அதிகாரி சொல்ல, பலபேர் கூட்டங் கூடிக் குழந்தைகளாவது வேடிக்கை நடத்தலாமென்று கேட்டுக்கொள்ள, அதிகாரி மறுக்க, அவரை எல்லாரும் அடிக்கத் தலைப்பட்டார்கள். அவர் ஒரு சத்திரத்தில் போய்ஒளிந்துகொண்டார். அங்கே சனங்கள் நூற்றுக்கணக்காய்ப் போய் அவரை முற்றுகை போட்டார்கள். பிறகு, பாதி இராத்திரியில் ஊரில் இரண்டு டிஸ்ட்ரிக்ட் கௌன்ஸில் மெம்பர்கள் தங்கள் சொந்தச் செலவிலேயே குழந்தைகளுக்குத் தேத் தண்ணீர் ஊற்றுவதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்றுதண்டோரா போட்டபிற்பாடுதான் அவ்வதிகாரிக்கு அந்தச் சத்திரத்தைவிட்டு வெளிவரச் சாத்தியப்பட்டது; அதுவரையில் அங்கேயே இருந்தார் போலும்.

ஏன் இப்படிக் கலகம் நடந்தன என்றால், இராஜன் ஆக்கினைக்கு விரோதமாய், மேற்சொன்னபடிக் கொண்டாட்டங்களை நிறுத்தி வைக்கவேண்டுமென்று அங்கங்கே யிருக்கப்பட்ட உள்ளூர் அதிகாரிகளே உத்திரவிட்டார்கள்!!

# முகூர்த்தப்படி நடக்காமல் நின்று போன முடிசூட்டுகள்.

இங்கிலாண்டின் சரித்திரத்தில், நமது ஏழாவது எட்வர்ட் மகாப்பிரபுவின் முடிசூட்டு நின்று போனதைப் போல இதற்கு முன்னும் இங்கிலாண்டு தேசத்தின் அரசர்களுள் சிலர் முடிசூட்டுகள் நின்று போயின. ஆனால், அப்படி நின்றுபோனது ஒரு தடவையாவது அரசருக்குத் தேக அசௌக்கிய மென்று நின்று போகவில்லை.

3-வது ஹென்ரிக்கு அவசர அவசரமாய்க் கிளாஸ்டர் என்ற ஊரில் ஒரு நகாசுமில்லாத, தங்கத்தால் செய்யப்பட்ட வெறுந் தகட்டுப் பட்டத்தைக் கொண்டு முடிசூட்டு நடத்தப்பட்டது; ஏனென்றால், இவர்க்கு முன்னிருந்த அரசனை ஜான் என்பவன் "வாஷ்" என்ற இடத்தில் மகுடத்தைப் போக்கடித்து விட்டான்; பிறகு 4-வருஷங்களுக்குப் பிறகு, இங்கிலாண்டு தேசத்தை விட்டு பிராஞ்சுக்காரர்கள் ஒழிந்துபோன பிறகு எல்லா விமர்சையோடும் மீளவும் ஒருதரம் முடிசூட்டு நடந்தது.

1-வது எட்வர்ட் ராஜா சிம்மாசன மேறினவுடன் முடிசூட்டு நடக்கவில்லை, இரண்டு வருஷத்துக்குப் பிறகு நடந்தது; ஏனென்றால், தன் தகப்பன் இங்கிலாண்டில் இறந்தபோது 1 - வது எட்வர்ட் ராஜா கிறிஸ்தவர்களுக்குப் புண்ணிய தேசமாகிய பாலேஸ்டைன் என்ற நாட்டில் இருக்

தார். ஆனால், அவர் இங்கிலாண்டுக்குத் திரும பிவந்த வுடனே முடிசூட்டு நடந்து விட்டது.

4-வது எட்வர்ட் ராஜாவின் முடிசூட்டு 2-தடவை நிறுத்தி வைக்கப் பட்டது:—முதல் தடவை 1461 - ம் வருஷம் மார்ச்சு மாதம் முடி சூட்டு நடப்பதாக முகூர்த்தம் வைக்கப் பட்டி ருந்தது; அப்போது நாட்டுக்குள் சண்டையுப சர்சரவுமாய்க் கிடந்ததுஎன்று முடிசூட்டு நடக்க வில்லை. அந்த வருஷம் ஜூன்மாதம் 28-ந்தேதி நடக்க வேண்டுமென்று மீளவும் முகூர்த்தம் ஏற் பட்டது; ஆனால், 28-ந்தேதி ("நிரபராதிகளைக் கொன்ற" தினம்) பைபிலின்படி பிரதிமாதமும் அசுபதினமென்று பிற்பாடு தெரிந்தது; ஆகை யால், மறுபடியும் அந்த முகூர்த்தத்தில் நடக்கா மல் 24-மணி நேரங்கழித்து முடிசூட்டு நடந்தது.

5-வது எட்வர்ட் ராஜாவின்முடிசூட்டு நிமித் தம் பெரும் பெரும் பிரயத்தினங்கள் நடந்தன; விருந்துநடக்கவேண்டுமென்றுகூட உத்தரவாய்ப் போயிற்று; முடிசூட்டு உடுப்புகளும் சித்தப்படுத் தப்பட்டன; அப்போது, மகாப்பிரபுவின் தாயாதி யான க்ளாஸ்டர் இளவரசன் ராஜாவைப் பிடித் துச் சிறையில்(Tower) அடைத்து விட்டுத் தான் நாட்டை கட்டிக் கொண்டான்.

2-வது ஜியார்ஜ் ராஜாவின் முடிசூட்டு அக் டோபர் மாதம் 4-ந் தேதி நடந்திருக்க வேண் டும்; ஆனால், முடிசூட்டுக் காரியங்கள் யாவும்

அதற்குள் சம்பூர்ணமாகவில்லை யானதால் ஒரு வாரத்துக்கு நிறுத்திவைக்கப் பட்டது.

4-வது வில்லியம் ராஜாவுக்குச் சடங்குகள் மேல் இஷ்டமில்லாததினால்முடிசூட்டு நடக்கவே வேண்டாமென்றான்; ஆனால், முடிசூட்டு விஷயங்களைப் பற்றி உண்டாயிருக்கும் வழக்கம், சட்டம் இந்த இரண்டுக்கும்விரோதமாய் இராஜன்நடந்து கொள்ள முடியவில்லை.

## முற்காலத்து முடிசூட்டு.

கோடைக்காலத்தில் முடிசூட்டுநடத்துவது தற்காலத்து ஏற்பாடென்று சொல்லப்படுகிறது. முன்காலத்தில், அரசன் பட்டத்துக்கு வந்தவுடனே முடிசூட்டு நடக்கவேண்டுமென்றும், அது நடக்குங்காலநிலைமை எப்படியிருந்தாலும்,அதை நிறுத்தக் கூடாதென்றும் வழக்கமிருந்தது; சில அரசர்களுக்கு முடிசூட்டானது பனிக்கட்டி ஆலங்கட்டி முதலானவை விழுந்துகொண்டிருக்கும்போதுகூட நடந்தது. எலிஜபெத் ராணி ஒரு நல்ல முகூர்த்தம் வேண்டுமென்று ஜோஸியர்களைச் சோதிஷங்கேட்டாள். அந்தயாதிரியான முகூர்த்தம் ஜனவரி மாதத்தில் இருந்ததென்று சோதிடர்கள் சொன்னார்கள்.

ஸ்டூவர்ட் வம்சத்துச் சில அரசர்கள் "ஸெயிண்ட் ஜியார்ஜ் டே" என்ற தினத்தில் தம் முடிசூட்டு நடத்தினார்கள்; இது வெகு அதிசயமான யுக்திதான்.



# 7-வது இன்பம்.

# முடிசூட்டு வைபவம்.



## இராஜன் குடிகளுக்கு முதல்நாள் அனுப்பிய நன்றி மொழி.

ஆகஸ்டுமாசம் 8-ந்தேதி, இராஜனுக்கு முடிசூட்டு நடக்குந் தினத்துக்கு முன்தினம் தம்குடிகளுக்கு அருளுடன் கூடிய ஒரு சேதி போக்கினார்:—

என் முடிசூட்டு நடக்கும் வேளையில், இந்த முடிசூட்டை நான் என் வாழ்நாளில் மிக்க பய பக்தியுடனும்பெருமையுடனும் நடக்கவேண்டிய விஷயங்களிலொன்றாக நினைத்துக் கொண்டிருந்த போது, இங்கிலாண்டிலும், வெளியே என் குடியேற்ற நாடுகளிலும், இந்தியாவிலுமுள்ள என் குடிகள் என்உயிர் அவ்வளவு அபாயமான நிலையில் இருந்தநாளெல்லாம் என் விஷயமாய் ஆழ்ந்த அனுதாபத்தைக் காண்பித்ததைப் பற்றி நான் மனப்பூர்த்தியாய் அவர்களை மெச்சிக்கொள்கிறேன். என் பிணியால் முடிசூட்டு நின்று போனதால், அதைக் கொண்டாடும்படி வெகு முயற்சிகள் செய்தவர்களுக்கு அதிக அசௌக்கியமும் தொந்திரவும் உண்டாக்கி யிருக்குமென்று எனக்கு ஒரு நினைவுண்டா யிருக்கிறது! ஆயினும், 'அந்த அசௌகரியத்தையும் தொந்திர

ஐயும் வெகு பொறுமையாயும், குணமாயும் பொறுத்து வந்தார்கள். என் குடிகள் தேவனுக்குச் சொன்ன வாழ்த்துகள் என் காதிற்பட்டன; அத்தெய்வத்துக்கு, இப்போது என்னுயிரைக் காப்பாற்றினதற்கும், இந்த மகா பெரிய ஒப்பைந்தலை அரசுக்கு (Empire) இறைவனாகஎன்னிடத்தி லமைந்த முக்கியமான கடமைகளைப் பூர்த்தியாய்ச் செலுத்தும்படி எனக்கு வலிகொடுத்ததற்கும் மிக்க வந்தனம் பண்ணுகிறேன்.

இந்தக் கடிதம் பக்கிங்காம் அரண்மனையில் இராஜன் தாமே தம் சொந்தக் கையால் எழுதிஞர்; ஆயினும், தம் உள்நாட்டுக் காரியதரிசி (Home Secretary) வழியாய்த்தான் அதுவெளியிடப்பட்டது; இந்த மாதிரி எழுதவேண்டுமென்று தாமே யோசித்து எழுதினதே யன்றி வேறொருவரும் சொல்லி யெழுதியதில்லை.

## அரண்மனையிலிருந்து ஆபிக்கோயிலுக்கு இராஜன் போன ஊர்க்கோலம்.

இராஜனும் இராஜாத்தியும் போன ஆகஸ்டுமீ 9-ந்தேதியன்று முடிசூட்டப்பட்டார்கள். இந்தச் சேதி இவ்வுலகமெல்லாம் சுற்றிக் கொண்டது. அநேகபாஷைகள் பேசிக்கொண்டு அநேக வர்ணங்கள்படைத்த ஆங்கிலேயக்குடிகள் (ஆசியாக் கண்டத்தில் கறுப்பு, பழுப்பு, மஞ்சள்; ஆபிரிகாவில் கறுப்பு, வெள்ளை; ஆஸ்ட்ரேலியாவில் வெள்ளை; கனடாவில் வெள்ளை இப்படிப் பல விதமாய் ஆங்கிலேயக்குடிகள் இருக்கிறார்கள்.), ஆறுவார

முன்னால் வெகு விசனத்தோடு தள்ளிவைக்கப் பட்ட இந்தமுடிசூட்டு இப்போதாகிலும்யாதொரு விக்கினமில்லாமல் நிறைவேறிற்றே என்று சந்தோஷப் பட்டார்கள்; ஆநந்த பாஷ்பம் ஆறாய்ச் சிந்தி விட்டார்கள். மகாப்பிரபுக்க ளிருவர்க்கும் முடிசூட்டு காலத்தில் வெகு வேலைதான்; ஆனாலும், முடிசூட்டு தினத்தில் காலையில் அவர்க்குப் பின்னால் வேண்டிய பலமும் திடமும் இருந்தன. வீதியில் அலங்கார மதிகமில்லை; காலநிலைமை, மழைபெய்யாமலும் காற்றடிக்காமலும்செவ்வையா யிருக்குமோ என்னமோ என்ற பயம் குடிகளுக்கு நிரம்ப இருந்தது; இதற்கு முன்னால் ஜூன் மாசத்தில் முடிசூட்டு முகூர்த்தம் வைக்கப்பட்டு நடக்காமல் நின்று போனதால் முடிசூட்டு விஷயத்தில் குடிகளுக்குச்சற்றுச்சலிப் புண்டாயிருந்தது; இத்தியாதி காரணங்களினால் முன்னே ஜூன் மாசத்தில் தெருவெல்லாம்கூடின கூட்ட மிப்போது இல்லை.

முன்னேகோடைக்காலத்தில்(June bright Summer) வந்து கூடின குடிகளுக்கிருந்த ஆவேசம் போல இந்தச் சமயத்தில் ஆவேசமில்லாது போனாலும், தெருக்களில் இருந்த சனங்களைப் பார்த்தால் அவர்கள் முகமெல்லாம் ஏதோ ஒரு கொண்டாட்டத்துக்கு அவர்கள் வந்திருந்ததாகவே தோன்றின. வேடிக்கை பார்க்க வந்தவர்கள் முன்னிரவெல்லாம் தெருவில் படுத்து தூங்கி விடிந்தவுடன் நல்ல நல்ல இடங்கள் பொத்

திக் கொண்டார்கள்; பேட்டை களிலிருந்து ஆயி ரக் கணக்காய்க் குடிகள் முன்னடியாய் வந்த புகைவண்டியில் வெள்ளம் போல லண்டனுக்குள் புரண்டு வந்தார்கள். எல்லாம் நன்றாயே நடக்கு மென்று தோன்றிற்று; ஆனால், காலநிலைமைதான் வெகுபயமுறுத்திற்று; 9-ந்தேதிக்காலை 5 மணிக்கு லண்டனில் அநேக இடங்களில் மழை பெய்தது, பிறகு சூரியோதயமாய் வானம் வெச்சாரித்தது (Sky was clear). பிறகுபேட்டைச்சனங்கள், ஏற் கனவே லண்டனுக்கு வரச் சித்தப்பட்டிருந்தவர் கள் உடனே லண்டனுக்குப் பயணம் புறப்பட் டார்கள். ஏனென்றால், ஒருநாளும் லண்டனுக்கு அவர்கள் வருவதேகிடையாது; வாராதுபோனல் இந்தத் திருநாளும் எங்கே தமக்கு வெறு நாளாய்ப் போமோ என்ற பயத்தினல் அவர் கள் லண்டன் வந்து சேர்ந்தார்கள்.

லண்டன்மாநகரத்தில் இன்னும் குடிகள் கண் விழிக்கவில்லை; கண் விழிக்காமலிருக்கும்போதே காலைக் குண்டுகள் இனிநடக்கும் சடங்குகளுக்கு ஒரு அறிகுறியாகப் போடப்பட்டன; சூரியனும் உதயமானன்; காலை $4\frac{1}{2}$-மணிக்குக் கோபுரத்திலி ருந்து (Tower) முதல் அதிர்வெடி கிளம்பிற்று. கூடவே உத்தியான வனத்திலிருந்தும் (Hyde Park) அதிர் வெடிகள் கிளம்பின. பிறகு இடை யருது கோபுரத்திலிருந்து 21 அதிர்வெடிகள் கேட்டன, வனத்திலிருந்து 41 குண்டுகள்போடப் பட்டன; கடைசி அதிர்வெடி போட்டதும், லண்

டன் குடிகள் எழுந்திருந்து கண் துடைத்து முகங் கழுவித் திருக் கோலம் பார்க்கப் புறப்பட்டனர். பிற்பாடு சீக்கிரமாகவே, கோட்டையிலும் (City or its centre) பேட்டைகளிலும் (suburbs) அநேக கோயில்களில் கண்டாமணிகள் ஓசைப்பட்டன. வெகு சீக்கிரத்தில் லண்டன் நகரம் ஜேஜே வென்று ஜனங்களால் நிறைந்து போயிற்று. ஆனாலும், அவ்வளவுகூட்டம் இல்லை; கூட்டம் மிதிபடும் என்று அநேகம் பேர் முன் சொன்னபடி இராத்திரி யெல்லாம் விழித்துக் கொண்டு காலை 5-6-மணிக்கு நல்ல நல்ல இடம் பொத்த ஆரம்பித்தார்கள். கடைசியாய் அது வீண்சிரமமாயிற்று.

இரவெல்லாம் லண்டனில் அலங்காரம்நடந்தது; ஏழு வர்ணங்களாலும் அலங்காரம் செய்யப்பட்டது; ஆனாலும், ஜூன் மாதத்தி லிருந்தாற் போல அவ்வளவு செலவுடன் அலங்காரம் செய்யவில்லை; பேட்டைகளில் கூட கொடிகள் கட்டப் பட்டுப் பறந்தன; ஆனாலும், போன ஜூன் மாதத்தில் இருந்தாற்போல அலங்காரம் அவ்வளவு முழுமுரமாயில்லையாம்.

9-ம்தேதிக்காலையில்பக்கிங்காம் அரண்மனைக் கிட்டத்தில்கூட்டங்கள் கிட்டநெருங்குமுன்தும்பும் பிடிப்போரும்(Police) படையாளரும் (Military) சித்தப்பட்டுப் போனார்கள்; இந்த அரண்மனைக்கு வரும் வழியை ஜனங்கள் கூட்டங் கூடி அடைத்துக்கொள்ளு முன்னாலேயே இவ்விருதிறத்தார்க்

குள் காப்பணிகள் ஏற்பட்டு இந்த, இராஜ வீதி யில் அங்கங்கே தத்தம் இடங்களில் நின்று கொண்டு வழியைக்காத்துவந்தன. அங்கேநின்று கொண்டிருந்த படைகளையும் படையணிகளையும் பார்த்தால், அந்தக் காட்சியைப்பார்க்க எத்தனை கண்களிருந்தாலும் போதாது: ஒரு இடத்தில் (Scarlet) செக்கச் செவேலென்று உடுப்புகள் உடுத்த அணிகள் இருந்தன; ஒரு இடத்தில் நீலவர்ணமுள்ள அணிகள் நின்றன; இந்த அமைப் பனை வழியாய் இந்த இராஜவீதியில் இதர இடங் களுக்குக் காவலாகப் படையணிகள் பத்திபத்தி யாய்ச் சாய்ந்துகொண்டிருந்தன; அந்தப் படை யணிகள் சாய்ந்த விநோதத்தை என்னமாய் நான் சொல்வேன்? இந்த வழியெல்லாம் படையணி கள் போகும்போது யுத்த வாத்தியங்களுடன் போ யின; போம்போது அவ்வணிகள் அந்தவாத்தியங் களின் பண்ணுக்குத் (Strains) தக்கபடி நடை நடந்து போவதைப் பார்த்து, வாத்தியங்கேட்ட பாம்பும், புல்லாங்குழல் கேட்ட பசுவும் பிரம்மா னந்தங் கொள்வதுபோல அங்குள்ளகுடிகள்யாவ ரும் பிரம்மானந்த மயக்கத்தில் சிக்கிக்கொண்டு தாண்டவ்மாடிச் சின்னாபின்னமாயினர்.

காலையில், 10-மணி அடிக்கச் சற்று முன் னால் படைகள் அணிவகுத்து ஊர்க்கோலத்துக் குச் சித்தப்பட்டன; முதல் முதல் இராசக் குதி ரைப் படைக் காப்பணிகள் (Royal Horse-Guard) தப்பட்டைகளுடன் வந்துநின்றன; இவர்

கள் சொக்காயெல்லாம் அங்கமயமாய்க்கிடந்தது; ஏனென்றால், இவர்கள் இராஜனுக்குச் சேர்ந்தவா கள். அவர்க்குப்பின்னால் ஒரு பாண்டு வாத்தியப் படை நின்றது. இப்படி யெல்லாம் படைகள் ஊர்க்கோலத்தின்பொருட்டு அணிவகுத்து நின்றன. படைகள் தவிர, இதர சங்கதிகளும் அங்கு கூடினகுடிகள் வேடிக்கைபாய்க் காலங்கழிக்கும் படியே இருந்தன! இதற்குள்ளே இந்தத்திருக்கோலத்தில் கலந்துகொள்ள வேண்டிய பல பிரபுக்களும் வந்து சேரத்தலைப்பட்டார்கள்; இந்தப் பிரபுக்கள் அடுத்தடுத்துவந்ததால் வெகுசப்தமாய்க் கிடந்தது; பிறகுகொஞ்சநேரம நிச்சப்தமாய் இருந்தது. பின்னும் சற்றுநேரத்துக்கெல்லாம் சப்தம் கேட்டது; ஜனங்கள் கூக்குரல் போடத்தலைப்பட்டார்கள்; என்னமா யிருக்கலாமென்று திரும்பிப் பார்த்தால் கிச்சனர் பிரபு காணப்பட்டார்! ஒரு சேனாபதி போட்டுக்கொள்ளும உடுப்புகள்யாவும போட்டுக்கொண்டிருந்தார்! இராஜயோமனரிக் குதிரைக் காப்புப்படை இவர்பின்னோடு, அரண்மனைக்குள், முன்மண்டபத்துக்குள்ளே நுழையப்பார்த்துக்குடிகள் வெகு குதூகலப்பட்டார்கள்.

10-மணி அடித்து 5-நிமிஷமாயிற்று; குடிகள் எல்லாரும், ஒரு சேதிநடக்கப் போகிறது! என்று நினைத்துக்கொண்டு நிச்சப்தமாய் இருக்கத் தலைப்பட்டார்கள்; குடிகள் நிச்சப்தமா யிருந்தமேதாடு கூட அரண்மனைக்கு அக்கம்பக்கத்தில் ஒரு ஈயும நாடாமலிருந்தது. போலீசுக்காரர்கள்

மாத்திரம் அங்கு மிங்குமாய்த் திரிந்துவந்தார்கள்; ஏனென்றால், இனிப் பெரும் பெரும் இராஜரீகச் சாரட்டு வண்டிகள் வருமென்று முன்னாலேயே ஏற்பாடாயிருந்ததாம்; குடிகளே இந்தமாதிரி நிச்சப்தமாய் இருந்ததைப் பார்ப்போர்க்கு வெகு கண்ணியமா யிருந்தது. ஒருவண்டியாவது அரண்மனையண்டை யில்லை. ஒருவரும் ஒன்றும் அந்த அரண்மனையண்டை தலைகாட்டவில்லை; அங்கே, அரண்மனையண்டை நிச்சப்தமாயும் நிச்சலனமாயு மிருந்தது; அங்கே ஒருவிதமான சுறுசுறுப்பு மில்லாமற்போனாலும், மகாப்பெருமையாய் மாத்திரம் இருந்தது; பெருமையில் குறைச்சலில்லை. ஒரு நல்ல சித்திரம் எழுதி அதன் பெருமையைப் பார்த்துச்சித்திரம் எழுதினவன் தனக்குத்தானே ஆச்சரியப்படுவதுபோல எல்லார்க்கும் ஆச்சரியமுண்டாயிற்று. அங்கே வர்ணங்கள் கேட்கத் தேவையில்லை. ஒரு பக்கத்தில் காலாட்படையின் சிவப்பு கண்ணுக்கெட்டினமட்டும் மேற்சொன்ன உய்யான வனத்தின் பக்கமாய் (towards Hyde Park corner) இருந்தது; குதிரைக் காப்புப்படைப் பயிற்சி (Horse Guards Parade) மற்றொரு பக்கத்தில் நடந்துகொண்டிருந்தது. குதிரைப் படையின் சட்டை வேறொரு பக்கத்தில் வேடிக்கையாய்க் காணப்பட்டது. இந்த விஷயமாய் இந்தக் காட்சி யிப்படியிருக்க, மற்றொரு விஷயமானது பார்ப்பவர்களுக்கு வெகு ஆச்சரியமாய்இருந்தது:—தெருக்குடிகள் அந்தக் கடிபடியில் கேவலம் ஒழுங்காய் நடந்துகொண்டது

புறநாட்டார் கண்டுகளிக்கும்படியா யிருந்தது ! அப்புறத்தியார்க்கு இந்தயாத்திரியாய் லண்டனில் தெருக்குடிகள் நடந்துகொண்டது ஒரு உபமா னமா யிருந்ததாகச் சொல்லலாம் !! குடிகளுக்கு இருந்தகண்ணியமும் அடக்கமும் (Self-control) அந்த இடத்தில் பெரிய எழுத்துக்களில் வெட்டி வைத்திருந்தாற்போல அவ்வளவு பஹிரங்கமாய்க் காணப்பட்டன !!! லண்டனுக்கு அவை கர்வத்தை யுண்டுபண்ணும் கருவிகளா யிருந்தன. வரவேண் டிய ஊர்க்கோலம் இன்னமும்வரவில்லை. மணிபத் தேகாலாயிற்று; ஊர்க்கோலமென்ற வாசனையே கிடையாது. ஆயினும், 5-நிமிஷத்துக் கெல்லாம கமானண்டை (Archway) இராஜரீக வண்டி ஒன்றுகாணப்பட்டது; பிறகுவண்டிகள் ஒன்றின் பின் ஒன்றாய்வரத்தலைப்பட்டன; குடிகளுக்கு அந் தச்சாரட்டு வண்டிகளையும் அவற்றி னழகையும் பார்த்த பிறகு ஆவேசமும் குதூஹலமும் பொங் கத்தொடங்கின; இங்குமங்கும் அநேகந் தலைகள் எழும்பிக் குதித்தன; ஏனென்றால், அந்தக் கூட டத்தில் எட்டித் தூரவரும அழகான குதிரைச்சா ரட்டு வண்டிகள் குடிகளுக்கு நன்றாய்க்காணப்படு கிறதில்லை, அதற்காகப்பலபேர்கள் அவ்வண்டிகளை எம்பி எம்பிக் குதித்துப்பார்த்தார்கள்; அப்படிப் பட்டவர் தலைகள்தான் எழும்பி எழும்பிக் குதித் தன; அங்கேவந்த முதல் சாரட்டில் யாரையோ பார்த்துச் சந்தோஷ வார்த்தைகள் (Cheers) உச் சரித்தார்கள்; அவர்யாரென்று விசாரித்தபோது கேம்ப்ரிட்ஜ் இளவரசராகச் சங்கதி வெளிப்பட்

டது. அவர் தொண்டுகிழவர்; கிழவராயிருந்தபோதி லும் பாலியர்கள்போல் குடிகளுக்குப் பிரதிவந்த னம் செய்தார்; வெகு சௌக்கியமாயு மிருந்தார். மொத்தத்தில் எட்டுச்சாரட்டுவண்டிகள் வந்தன; இந்தக்கிழவர்நம்மெட்வர்ட்ராஜனுக்குத்தாயாதி; வேறே வழியில் பிறந்தவர்; இந்த எட்டும் இராஜ வம்சத்தார் வண்டிகள்தான்; குடிகள் இந்த எட்டு வண்டியிலிருப்பவர்களுக்குத் தான் வணக்கம் செய்தார்கள்; அங்குவந்த மற்ற அன்னிய விருந் தாளிகளைக் குடிகள் கவனிக்கவேயில்லையாம்; எல் லாரும் நம்ம ராஜர், நம்ம ராஜவம்சத்தார், நம்ம ராஜாத்தி என்றுசொல்லிச் சந்தோஷப் பட்டார் களேயன்றி அந்நியஸ்தர்களைக் குடிகள் கண்ணெ டுத்துக்கூடப் பார்க்கவில்லை. ஆனால், எல்லாரை யும், எந்த அந்நியஸ்தரா யிருந்தாலும் வெகுமரி யாதையாய் வரவேற்றார்கள்; இந்த அந்நியஸ்தர் களில் ஜர்மன் தேசத்து இளவரசான ஹென்றி யையும் அவர் இளவரசியையும் தான (Prince and Princess Henry of Prussia) அதிக மரியாதையாய் நடத்தினார்கள்.

இந்தமாதிரி இராஜவம்சஸ்தர்கள் ஊர்க்கோ லம்போனபிறகு இராஜன் இராஜாத்திகள் கோலம் போகும் கோலத்துக்குக் குடிகள் சித்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள்; படைகளும் அணிவகுக்கப் பட்டன; முதல் முதல், இந்தியச் சேனைபுடை குடி யேற்ற நாட்டுப் படையும் கொண்ட குதிரைக் காப்புச்சேனைகள் அரண்மனைபண்டை வைக்கப்

பட்டன; இராஜன் புறப்பட்டார் என்றசுவிசேஷ அதிர் வெடிகளால் எல்லார்க்கும் தெரியப்படுத் தப்பட்டது.

இராஜன் சரியாய் அந்த வேளைக்குப் புறப் பட்டார். இராஜன் வந்த சாரட்டு வண்டிக்குப் பின் 4-வண்டிகள் இராஜனின் அரண்மனைக் காரி யஸ்தர்களை ஏற்றிக்கொண்டுவந்தன. அந்தநாலும் மூடிக்கிடந்தன; அவற்றுக்கு உள்ளே இருப்பவர் கள் நன்ருய்க் காணப்படவில்லை.

இராஜன்வண்டி வீதியில் வந்தவுடன் ஒவ்வொ ருவரும் கால்கட்டைவிரல்மேல் நின்றுகொண்டு எம்பி எம்பி இராஜனைத்தரிசிக்கும்படிப்பிரயத்தி னம் பண்ணிஞர்கள்; இந்தச் சாரட்டுக்கு எட்டுக் குதிரைகள் (Creams)கட்டப்பட்டிருந்தன; வண் டியானது மகா மேருபோல இருந்தது; வண்டி யில் தம்பதிகள் பேசிக்கொண்டே வந்தார்கள்; இராஜன்மிருதுவானவெண்மயிர்அங்கியும்குல்லா யும் போட்டிருந்தார்; இராஜாத்தி வெள்ளையுடுப்பு போட்டிருந்தார். வீதியில் வாத்திய கோஷங்கள் வழங்க, குடிகள் ஆனந்த கோஷங்கள் முழங்க அந்த எட்டுக்குதிரை கட்டிய சாரட்டு வண்டி மெல்ல மெல்ல அடிமேல் அடிவைத்து வந்தது.

இங்கே இப்படியிருக்க, ஆபிக்கோயிலண்டை செய்யப்பட்டிருந்த அலங்காரம் காலநிலைமை கெட்டிருந்ததால் நிலைகுலைந்திருந்தது; ஆயினும், 8-ந்தேதி இராத்திரி, முன்னல் சீரழிந்திருந்த அலங்காரங்கள் யாவும் கொஞ்ச மெருகிடப்பட்

டன; அப்படி மெருகிடப்பட்ட பிறகு வெகு சந்தோஷகரமாயும், அழகாயுமிருந்தது. ஆனால் முன், ஜூன் மாதத்தில் இருந்த காம்பீரம் தப்பிப் போயிற்று. வைட்ஹாலுக்கு இருபக்கத்திலும்சிறு சிறு கொடிகள் தோரணங்கள்போல் கட்டித் தொங்கின. இந்தக் கொடிகள் வெவ்வேறு வர்ணமாயிருந்தன. முன் இந்தக் கொடிகள் சிவந்த உயர்ந்த நீண்ட மரங்களில் கட்டப்பட்டிருந்தன. ஜூன் மாதத்தில் இருந்த மகிமை இப்போதில்லை; ஆனால், இவ்வளவாகிலும் முடிசூட்டு நடக்கும் அதிருஷ்டம் தமக்கு வாய்த்ததே என்று எல்லாரும் அமமட்டோடே திருப்தியுடன் ஆனந்தப்பட்டார்கள்.

இதற்குள் ஆபிக்கோயிலுக்குப்பிரபுக்களும் பிரபுக்கள் மனைவிகளும் வரத் தொடங்கினார்கள்; இச்சமயத்தில், தம் கடமைகள் செய்துகொண்டு வந்த சேனைகளுக்குக் கன்னாட் (Duke of Connaught) இளவரசர்தான் சேனாபதி. இவர் ஆபிக்கோயிலுக்கு இராஜரீகவண்டியில் (State coach) போகவில்லை; தன்விசை வண்டி (motor car) ஒன்றில் போனார். அநேகம் பிரபுக்கள் வெகு நேர்த்தியான உடைகள் உடுத்துக் கொண்டு தம் மாளிகையிலிருந்து இராஜரீக வண்டியில்ஆபிக்கோயிலுக்குப் போனார்கள்; ஒருபக்கத்தில் சிவப்பும்; ஒரு பக்கத்தில் பச்சையும்; ஒரு பக்கத்தில் மஞ்சளும்; ஒரு பக்கத்தில் நீலமும்; ஒருபக்கத்தில் ஊதாவும் இப்படிப் பலவிதமான வர்ணமுள்ள உடுப்புகள்

போட்டுக்கொண்டு போனார்கள்; இந்தவர்ணங்களுக்குத் தகுந்தாற்போல வண்டிக் காரர்களும் குதிரை காஸ்தாரிகளும் உடுப்புகள் உடுத்திருந்தார்கள்; முன்சொன்ன கன்னாட் இளவரசர் (Duke of Connaught) தவிர, இன்னொரு பிரபு தம் வீட்டிலிருந்து ஆபிக் கோயிலுக்குத் தன்விசைவண்டியில் (Motor car) போனார்; இவர்தவிர வேறெந்தப் பிரபுவும் அப்படிப் போகவில்லை. போன ஜூன் மாசம் ஆபிக்கேயிலே ஒட்டி இருந்த ஒரு அலங்கார மண்டபத்துக்குக்காற்றாலும்மழையாலும் வந்த கேடுகள் கொஞ்ச நெஞ்சமில்லை. இந்த 9-ந் தேதிக்காலையில் அடித்த காற்று மழையால், மண்டபம் இன்னதென்றும்கூட அங்குப்புதிசாய் வந்தவர்கள் கண்டு கொள்ள முடியவில்லை. ஆபிக்கோயிலும் முன் மண்டபமும் ஒரே மாதிரியாயிருந்தன. முன் மண்டபத்தைப் பார்த்தால் ஆபிக்கோயிலைப் பார்க்கத் தேவையில்லை. இந்த முன் மண்டபத்தின் வாசற்படிக்குமேல் ஒருஅல்மாளகிரி கட்டப்பட்டிருந்தது; இந்த அல்மாளகிரிக்குமேல் நான்கு பக்கத்திலும் நான்கு கிரீடங்கள் செய்து வைக்கப்பட்டிருந்தன; இந்த வாசற்படிக்கு இருபக்கத்திலும் குதிரைக்காப்புப் படையணிகள் காத்துக் கொண்டிருந்தன (Yeomen of the Guard).

இதற்குள் அரண்மனை யண்டை வேல்ஸின் வரசர் குமாரர் இருவரும் வந்துகொண்டிருந்தார்கள். கடைசியாய் இராஜனும் வந்தார். இராஜன் வருமுன் வழியெல்லாம் ஒரே குழப்பமாயிருந்

தது:—குற்றம்பிடிப்போர்கள் (போலீஸ்காரர்கள்) சிலர்அங்கேபோனார்கள்; இராஜ்யதந்திரிகள் சிலர் இங்கேவந்துகொண்டிருந்தார்கள்;சில படையாளி கள் அங்குமிங்குமுலாத்திக் கொண்டிருந்தார்கள்; இப்படி யிருக்கபோது, திடீரென்று முன் சொன்ன உய்யானவனத்தில(Hyde Park)அதிர் வெடிச் சப்தம் கேட்டது; அதாவது இராஜன் பக்கிங்காம் அரண்மனையை விட்டுப் புறப்பட்டு விட்டார் என்று அர்த்தம். முதல் முதல் இராஜ வம்சஸ்தர்களும் அந்நிய நாட்டு விருந்தாளிகளும் வந்தார்கள். கொஞ்ச நிமிஷத்துக் கெல்லாம் வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் வந்தார் கள். காலை 11-25 மணிக்கெல்லாம் இராஜனும் தங்கத்தாலமைக்கப் பட்ட இராஜரிகச் சாரட் டில் காணப்பட்டார். இராஜனைப் பார்த்தால் கொஞ்சம் முகம்வெளுத்திருந்தது; ஆனால், தேக பலத்தில் குறைந்தில்லை; இராஜன் தம் குடிகள் சொன்ன ஆனந்த மொழிகளுக் கெல்லாம் (Cheers)புன்சிரிப்புடன் பதில்வந்தனம் பண்ணி னார்; இராஜாத்தியோ இடமும்வலமுமாய், இருபக் கத்திலும் தமக்குக் குடிகள் செய்யும் வந்தனங் களுக்கும் பதிலாய்த் தலையை அசக்கிக்கொண் டே வந்தார். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் ஆபிக் கோயிலுக்குள் மறைந்துபோய்விட்டார்; ஆனாலும், குடிகள் என்னமோ தெருவைவிட்டுக் கலைந்து போகவில்லை! இராஜசேவை இன்னொருதரம் நமக் குக் கிடைக்கும், பார்க்கலாமென்று அங்கேயே காத்திருந்தார்கள்!!

## ஆபிக்குள் கூடின முடிசூட்டுச்சபை.

வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயில் வாசற்படியண்டை இருந்த காட்சி வெகு இன்பமாயிருந்தது; காவல் படைகளும் இராஜன் மெய்காப்புக் குதிரைப் படைகளும் (Royal Yeomanry) எங்கே பார்த்தாலும் காணப்பட்டன. அந்தப்பக்க மெல்லாம்பச்சையும், சிவப்பும், கறுப்பும், வெள்ளையும், மஞ்சளும், நீலமும், ஊதாவுமாய்க்கிடந்தது. ஆபிக்கோயில் முன்மண்டபத்தின் வாசலில் (the Door of the Annexe) ஒருபிரபு (Earl Marshal) நின்று கொண்டு கோயிலுக்கு வந்த விருந்தாளிகள், பிரபுக்கள், பிரபுக்களின் மனைவியார்கள் இவர்களையெல்லாம் வரவேற்று மரியாதை செய்து வந்தார்.

இவ்வாசற்படிக்கதவுகாலை 7-மணிக்குத்திறக்கப்பட்டது. அது முதல் 9-மணிவரையில் ஆபிக்கோயிலுக்குள் பிரபுக்களுக்கும், அவர்மனைவியார்க்கும், (அரசுக்குடிச்சபையில்) தாழ்தரக் குடிச்சபையின்சபையாளி களுக்கும் (Members of the Lower House or House of Commons), அவர்களுடைய தோழிகளுக்கும் (Their lady friends) ஏற்கனவே ஏற்பட்டஇடங்கள் (Seats) அப்படியே இருந்தன; அவற்றில் ஒரு வரும் வந்துஉட்காரவில்லை; ஏழுடித்தபின் சிலநிமிஷத்துக்கெல்லாம் 4-5 பேர் பிரபு மனைவியார்கள் வந்திருந்தார்கள்; ஒன்பதடிக்கிற சமயத்தில்ஆபிக்கோயில் வாசற்படியண்டை காட்சிவெகு விநோதமா

யிற்று: முன் சொன்ன எல்லா அந்தஸ்தர்களும் மள மள வென்று வரத்தொடங்கினார்கள்.

குருமார்கள் (bishops) $9\frac{1}{2}$ மணிக்கு எல்லாரும் வந்து விட்டார்கள்; அவரவர் இடத்தில் உட்கார்ந்து கொண்டார்கள்; பிறகு குடியேற்ற நாட்டுப்பிரதான மந்திரிமார்களும் வரத்தலைப்பட்டார்கள்; இந்தக் கோயிலுக்குள் பண்பாடும் (Choir boys) பிள்ளைகளுக்குக் குரல் வெகு சேர்த்தியாயிருந்தது; 10-மணிக்கெல்லாம அவர்கள் "இன்றைக்கு எல்லாரும் ஒற்றுச் சுகப்படுங்கள்" என்று அர்த்தம் படும் ஒரு பண்ணைப் (Rejoice to-day with one accord) பாடத்தொடங்கின உடனே அந்தக் கோயிலில் தகுதுரு என்று பேசிக் கொண்டிருந்த சப்தம் சப் என்று அப்படியே அடங்கிப் போயிற்று. இந்தக் கோவிலில் உள்ளே செய்திருந்த அலங்காரத்துக்கும், அங்கு உட்கார்ந்திருந்த பிரபுக்கள் அவர்கள் மனைவிமார் இவர்களின் மேன்மையான உடுப்புகளுக்குஞ் சரியாய் ஒத்துப் போய் ஒருஜொலிப்பு உண்டாயிற்று.

இதற்குள் 10-மணிக் கெல்லாம் குருமார் இராஜபிருதுகள்யாவற்றையும் சுத்தப்படுத்தி மடியாக்கி (Consecrate) முடிசூட்டுக்குச் சித்தமாய் வைத்தார்கள். இந்தப்படிப் பரிசுத்தமாக்கும் போது (Reconsecration of Regalia) மந்திரங்களாகச் "சுவாமியே பூர்வகாலங்களில் எங்களுக்கு ஆதாரமாயிருந்தார்" (O God, our help in

ages past) என்றுவாத்தியம் வாசிக்கப்பட்டது. மேற்படியில் அந்நியநாட்டுக் காரிய வாதிகளைப் (Corps Diplomatique) பார்த்தால், வெகு பிரம்மானந்தமாய் இருந்தது; ஒவ்வொருவருக்கும் வித்தியாசமிருந்தது; ஒருவரைப் போல ஒருவ ரில்லை; அவர்கள் உடைகள் வெகு ஜோதிமயமா யிருந்தன. [illegible] டத்தில் எல்லாத் தேசத்துக் காரியவாதிகளும் வந்திருந்தார்கள். இவர்கள் எல்லா ரைக்காட்டிலும், இந்திய ராஜாக்கள் தான் வெகு படாடோபமாய் இருந்தார்கள்; ஒரு இடத்தில் தங்கமயமாய் இருந்தது; ஒரு இடத்தில் நவரத் தின கசிதமாய் இருந்தது; மின்மினும் பூச்சிகள் போல அவர்கள் தலைக்குட்டையில் இழைக்கப் பட்டிருந்த கற்கள் மின்னின; மகாப்பிரபு வின் நியாயாதிபதிகளும் வழியில் வெகு ஜம்ப மாய்த்தான் காணப்பட்டார்கள். அவர்கள் ஒரு விஷயத்திலும் மற்றவர்க்குக் குறைந்துபோக வில்லை. காலை 11-மணிக்கு ஆபிக்கோயிலில் ஒரு இடம்பாக்கியில்லை; எல்லாம் நிறைந்து போயின. யார் சற்றுத் தங்கிவந்த போதிலும், அவரவர் தங்கள் தங்கள் இடத்தில் உட்காரத்தவறவில்லை.

$11\frac{1}{4}$-மணி அடித்துச் சற்றைக் கெல்லாம் வேல்ஸிளவரசும் இளவரசியாரும் வந்தார்; வந்த உடனே அங்குள்ளவர்கள் யாவரும் பாக்கியில் லாமல் எழுந்து நின்றார்கள்; உடனே இருவரும் முடிசூட்டு நாற்காலியண்டை போட்டிருந்த பெ ட்டிபோன்ற ஒரு இடத்தில் (Royal box) உட்

கார்ந்தார்கள்; உட்கார்ந்த உடன், மற்ற எல்லா ரும் உட்கார்ந்து விட்டார்கள்; இவர்கள் வரும் போது தப்பட்டைகள் எல்லாம் ஒருமிக்க அடிக்கப்பட்டன ; அப் பெட்டியில் முன்னடி, பிரபுக்களுக்கெதிரே இவர்கள் உட்கார்ந்தார்கள்.

## ஆபிக்கு மகாப்பிரபுக்களின் விஜயம்.

இவர்களுக்குப் பிறகு மகாப்பிரபுக்கள் இரு வரும் விஜயம் செய்தார்கள் ; இவர்கள் விஜ யம் செய்தபோது 12-மணி அடித்து 5-நிமிஷம். இராஜ்யத்தைச் சேர்ந்த பெரும் பெரும் உத் தியோகஸ்தர்கள் யாவரும் சிம்மாசனத்தண்டை பிருதுகள் பிடித்துக் கொண்டு நின்றார்கள். ஒரு பிரபு கிரீடம் பிடித்து நின்றார்; ஒரு பிரபு இராஜரீகக் கத்தியைப் (Sword of State) பிடித்து நின்றார்; பிரதானியும் வந்து நின் றார்; இதற்குள் காண்டர்பரிப் பிரதான குருமார் ஆபிக்கோயிலில கர்ப்பக் கிரகத்தைப் பார்த்து (Nave) உட்கார்ந்தார்; மகாப்பிரபுவான ராணியும் எட்டுப்பேர் தூக்கின பின்பாவாடையுடன் முன் சொன்ன பெட்டிக்கு (Royal box) எதிரே உட் கார்ந்தார். இவர்வந்தபோது "அலெக்ஸாண்ட்ரா இராஜாத்தியார் நீடூழிவாழ்க" (Vivat Regina) என்ற பண் பாடப்பட்டது. இந்தம்மாளைப் பார்த் தால் தயவும் இராஜரீகமும் அவதாரமானாற்போ லிருந்தது; இந்திய உடுப்புகள் போட்டுக்கொண் டிருந்தார்; அவற்றில் பூக்கள் மயமாய்ப் பூப்போ டப்பட்டிருந்தன; இந்தப் பூக்களெல்லாம் தங்க

நூலால் போடப்பட் டிருந்தன. இந்தம்மாளின் பின் பாவாடையை ஒரு பிரபுவின் மனைவியார் (Duchess of Buccleuch) சுமந்து வந்தார். இவர்க்கு உதவியாய் 7-பெரிய மனுஷர்களும் சுமந்து வந்தார்கள். இப்படி யிருக்கும்போது தப தப வென்றும், பட பட வென்றும், கண கண வென்றும், கிடு கிடு வென்றும், மேளங்கள், வாத்தியங்கள், பறைகள், தப்பட்டைகள் இன்னுமற்ற அஷ்டாதச வாத்தியங்களும திமரென்று எல்லாரையும தூக்கிப் போட்டாற்போல முழங்கின! எல்லாரும் திடுக்கிட்டுப் போனார்கள். என்னடா! வென்று திரும்பிப் பார்க்கையில் தூரத்தே மகாப் பிரபுவின் தரிசனம் கிடைத்தது; எல்லாரும் பிரம்மானந்த வசமாய் ஆனந்தப்பட்டார்கள்; மகாப் பிரபு வந்தவுடன் எட்வர்ட் ராஜா நீடூழிவாழ்க என்று மேளங்கள் தாளங்கள் கிண்ணங்கள் பாடல்கள் கிளம்பின; எல்லாரும் எழுந்து மகாப் பிரபுவை வணங்கினார்கள். பிறகு மகாப்பிரபுவை எல்லாரும் சிம்மாதனத்துக்கு அழைத்துப்போனார்கள். அங்கேபோனவுடன் கால் மண்டிபோட்டுக்கொண்டு சற்று நேரம் தேவனைப்பிரார்த்தனை பண்ணினார்.

## ஆபிக்கோயிலே ஒரு கைலாசம்.

பட்டாபிஷேகத் தன்றைக்கு ஆபிக்கோயிலுக்குள் போயிருந்தால் அந்தக் கைலாசத்தை நாம் வாயால் சொல்லவும் முடியாது, கையால் எழுதவும் முடியாது; நான் அங்கே போகவில்லை

யாயினும் சொல்லக்கேட்டதையும், வாசித்ததையு மாகிலும் எனக்குத் தெரிந்தமட்டில் என் தமிழ் நாடு நேசிகளுக்குத் தெரியப்படுத்துகிறேன்:— தென்தேசத்தில் திருக்கண்டியூரென்று ஒருமகா க்ஷேத்திர முண்டு; அதற்குத் தக்ஷிண கைலாச மென்றுபேர்; ஏனென்றால், கைலாயமலை சிவபிரானோடுகூடவடக்கேயிருக்கிறபடியால்தெற்கிலுள்ள இதற்குத் தக்ஷிண கைலாசமென்று பேர் வந்தது. இந்த ஆபிக்கோயிலுக்கு மேலைக்கைலாசமென்று சொல்லலாம்; ஏன் சொல்லக்கூடாது? பின்சொல்லுவதை வாசித்துவிட்டு நான்சொல்லுவது தப்பு ஒப்பென்று நியாயம் சொல்லும்படிக் கேட்டுக்கொள்கிறேன்:— கோயில் ஒரு சிலுவை போல சிவலிங்காகாரமாய்க் கட்டப்பட்டிருக்கிறது. அங்கே இருக்கப்பட்ட தெய்வத்தை ஒரு சிவலிங்க மென்னலாம்; அங்கே தெய்வமென்று ஒரு சிலையாவது,படமாவதுகிடையாது; ரோமான் கத்தோலிக்குக்குச் சேர்ந்த கிறிஸ்தவ மதஸ்தர்கள் ஒருவிதமான விக்கிரஹ ஆராதனை செய்வது வழக்கமுண்டு; இங்கிலாண்டின் அரசு முறை மதம் (State Religion) ப்ராடெஸ்டன்ட்மதமான தால் ஒரு உருவமும் வைத்துப் பூசிக்கிறதில்லை; ஒரு சிலுவைமாத்திரம் அங்கேயுண்டு; சுவாமித் தியானத்துக்கு அங்கே போனவர்கள் கர்ப்பக் கிரகத்தில் (nave) இருக்கும் அந்தச்சிலுவையைப் பார்த்துத் தியானம் பண்ணிவிட்டுத் திரும்புவார்கள்.

இந்தக் கர்ப்பக் கிரஹத்துக்கு எதிரே ஒரு பலிபீடமிருக்கிறது. இந்த கோவிலுக்கு மேற்கைப்பார்க்கக் கோபுர வாசலிருக்கிறது. இந்தக் கர்ப்பக் கிரகத்துக்குப் பின்னிடத்துக் கெல்லாம் பண்பாடுவார்கள்கூட்டம் இருந்துகொண்டுபாடும் இடமென்று பேர் (Choir); முன்னிடத்துக்கெல்லாம்பலிபீடஸ்தானமென்று பேர்(Chancel);பின்னுல்படிக்கட்டுமேடைகள்பல(Galleries)போடப்பட்டிருக்கின்றன. இந்த மேடைகளில் உட்கார்ந்தால் அந்தக் கோயில் உட்கட்டிடங்கள் யாவும் ஒன்றுவிடாமல் தெரியும்; அவ்விதமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. சன்னிதானத்துக்கும் சிம்மாசனமேடைக்கும் நடுவில் பலிபீட மிருக்கிறது. இந்தச் சிம்மாசனமேடையில் இரண்டு சிம்மாசனங்கள் (நாற்காலிபோன்றன) போடப்பட்டிருந்தன.பலிபீடமென்பது ஒருவிதமானமேஜை. இந்த மேஜைக்கு ஏறும் படிக்கட்டும் சிம்மாசனமேடையேறும் படிக்கட்டும் எதிரும் புதிருமாய் இருக்கின்றன. இந்தப் பலிபீடத்துக்குத் தெற்கு பக்கத்தில் கோயிலைச் சேர்ந்த 7–8-சில்லறைக் குருமார்கள் இருந்தார்கள். வடபக்கத்தில் அந்நியதேச குருமார்கள் வரிசையாய் நின்றார்கள். இவர்கள் பக்கத்தில் பிரதான குருமார்கள் இருவரும் (காண்டர்பரி, யார்க்)நாற்காலிகளில் வீற்றிருந்தார்கள். சிம்மாசனத்துக்கும் பலிபீடத்துக்கும் நடுவிலுள்ள இடத்தில் புராதன முடிசூட்டு நாற்காலி மேற்படிச் சிம்மாசனங்கள்போலவே கிழக்குமுகமாய் போட்டிருந்தது. பலிபீடத்துக்குத் தென்

புறத்தில் இராஜனும் இராணியும் சடங்கில்லாத போது உட்கார்ந்து கொள்ளும்படி. இரண்டு நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. இராணியின் நாற்காலி இராஜன் நாற்காலிக்குக் கீழ்ப்புறமா யிருந்தது. இந்த மூன்று நாற்காலிகளுக்கு முன்னால் மூன்றுமணைகள் போடப்பட்டிருந்தன. இவைகள் இராஜன் இராணி மட்டி போட்டுக்கொண்டு சுவாமியைத் தியானம் பண்ணுவதற் குபயோகம்; இரண்டு பிரதான குருமார்களும் கர்ப்பக்கிரத்தைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்தார்கள். இராஜனுக்கு எண்ணெயிடும்போது புராதனநாற்காலியில் இராஜன் உட்கார்ந்தார்; அவர்க்கு அஸ்மான கிரி ஒன்று பிடிக்கப்பட்டது; அப்போது ஜனங்களுக்கு இராஜன் முதுகு தெரியுமேயன்றி முகந் தெரியாது (அதாவது கிழக்கு முகமாய் உட்கார்ந்தாற்போலிருக்கிறது); அன்றி, இராஜனைச் சுற்றி மேற்சொன்னவிதமான குருமார்களும் இராஜபிருதுகள் பிடிக்கும் பிரபுக்களும் தேனீக்கள்போல மொய்த்துக் கொண்டிருந்தார்கள்.

அத்தியக்ஷ குருமார்கள் பின்னால் இராணியும் அவர் பரிவாரங்களும் இன்னும் தம்மிஷ்டமித்திரர்களும் ஒரு பெட்டிபோன்ற நாற்காலியில் (Royal box) வீற்றிருந்தார்கள். சடங்கு நடக்கும்போது மாத்திரம் இராணியார் இராஜன் பக்கத்துக்கு அவர்க்குக் கிழக்கேபோய் உட்கார்ந்தார்; இந்த நாற்காலியில் (Royal box) முதல் முதல் உட்கார்ந்தார். இராஜன் பக்கத்தில்,

இராஜன் இராணியார் நாற்காலி பக்கத்தில், சிம் மாசனத்தண்டை வேல்ஸ் இளவரசர் உட்கார்ந் தார்; அவர் உட்கார்ந்த நாற்காலியில் (Royal box) முதல் முதல் அவரும் அவர் பக்கத்தில் மற்ற இளவரசர்களும் உட்கார்ந்தார்கள்; இந்தப் பெட்டியானது கர்ப்பக்கிரகத்துக்கு முன்னிருக் கும் தெற்குப் படிக்கட்டுமேடையின் கீழ், அதை அடுத்துப் போட்டிருந்தது. இந்தப் படிக்கட்டு மேடையில் பிரபுக்கள்(Lords) உட்கார்ந்தார்கள்; இந்த மேடையைப்போல வடபுறத்தில் ஒருபடிக் கட்டுமேடையிருக்கிறது. அந்த மேடையில் பிர புக்களின் மனைவியார்கள் உட்கார்ந்தார்கள்; கர்ப் பக்கிரகத்துக்குப் பின்படிக்கட்டுமேடைகளிலும், கர்ப்பக்கிரகத்துக்கு இருபக்கத்திலும் இருக்கும் படிகட்டு மேடைகளிலும் கிராம நாட்டாண்மைக காரர்களும் (Mayors); தொழிலாளிகளால் பொறுக்கப்பட்டு அனுப்பப்பட்டவர்களும்; பழய மந்திரிமார்களும் அவர் மனைவியார்களும்; கடற் படை கரைப்படை உத்தியோகஸ்தர்களும் அவர் மனைவியார்களும்; அந்நிய தேசத்திலிருந்து வந்த தூதர்களும் அவர்பெண்சாதிகளும்; இந்திய இரா ஜாக்களும், இன்னுமற்ற விருந்தாடிகளும்;— ஆகிய இவர்கள் உட்கார்ந் திருந்தார்கள்.

இந்தக் கோயிலுக்குள் கோபுரவாசல் முதல் (மேல வாசற்படி) சிம்மாசன மேடை வரையில் ஒரு இரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது; மற்ற இடமெல்லாம் இன்னம் கொஞ்சம் கறுப்

பான கம்பளமொன்று விரிக்கப்பட் டிருந்தது. புராதன முடிசூட்டு நாற்காலியின் கீழ் இந்தியா விலிருந்து அனுப்பப்பட்டிருந்த சவுக்கமான ஒரு கம்பளம்போடப்பட்டிருந்தது. சிம்மாசனமேடை யின்மேலும் ஒரு இந்திய இரத்தினக் கம்பளம் போடப்பட் டிருந்தது. படிக்கட்டுமேடைமேல் உட்கார்ந்திருந்தவர்கள் போட்டுக்கொண்டிருந்த உடுப்புகளின் வர்ணம் எப்படி யிருந்ததென்றால், இந்தச் சிம்மாசனமேடையைச் சுற்றி நாலுபக்க மும் பலவர்ணத்தால் பின்னப்பட்ட நாடாக்கள் போட்டுத் தைத்தாற்போலிருந்தது; இந்தமாதிரி நாலுபக்கமும நாடா தைத்தாற்போலக் காணப் பட்ட காட்சிக்கு, கீழேயும் சிம்மாசன மேடையி லும் விரிக்கப்பட்டிருந்த இரத்தின கம்பளங்கள் ஒரு ஆதாரமாயின; இரத்தினகம்பளங்களின் வர்ண மும் உடுப்புகளின் வர்ணமும் தம்முள் ஒன்றுக் கொன்று அவ்வளவு ஒற்றுத் தளக் தளக்கென்று கோயில் எங்கும்மின்னின.

பிரபுக்களும் அவர்களின் மனைவியார்களும் உட்காரும் படிக்கட்டுமேடைகளுக்குப் பின்னால், கோயில் மதில்களில் வைத்திருக்கும் சன்னல் கள் வரையில் உள்ள மேடைகளில் அரசுக்குடிச் சபைக்குச் சேர்ந்த தாழ்தரக்குடிச் சபையார்களும் அவர் மனைவியார்களும் உட்கார்ந்தார்கள்.

இந்த முடிசூட்டுத் தினத்தில் உள்ளேபோய் பார்த்தவர்களின் அதிருஷ்டமே அதிருஷ்டம்! நம் இந்துமதத்தின்படி மக்கள் மடிந்தால்தான்

கைலாஸம் போகிறார்கள் என்பது பிசகு: அங்கே, அப்போது உள்ளேயிருந்தவர்கள் உயிர் பிழைத்தும் கூட்டுடன் கைலாசம் பார்த்தார்கள் என்னலாம்; இந்த வைபவத்தைப் பார்ப்பவர்கள் கைலாசம் பார்த்ததுபோ லாகாமல் பின் என்ன பார்த்தது போலாகும்? நம் இந்தியாவில் அவ்வளவுயர்ந்த பதவியடைந்த இடமெங்குமில்லை! கோயில்களுக்குள் போனால், கற்பூரப்புகையுட னெண்ணெய் மொழுக்கு மாய்க் கிடக்கிறது.

இந்தப் பிரபஞ்சத்தில் பத்துத்திசைகள் உண்டு. இது வரையில் கோயிலுக்குள் 9-திக்குகளைச் சொன்னேன்; ஆகாசத்தைச் சொல்லவில்லை! ஆபிக்குள் போய் அண்ணாந்து பார்த்தவன் கண் எதைப்பார்க்கலாமென்று நினைக்கிறீர்கள்? கோயிலுக்குமேலே போட்டிருக்கும் ஓட்டு மச்சுக்களைப் (Terraces) பார்க்கலா மென்பீர்கள்! நம்தேசத்துக் கோயில் களாயிருந்தால், மேலே வௌவாலும், புகையாலுண்டான கரியும், ஒட்டடையும் இருக்கும். அந்த ஆபிக் கோயிலை அப்படி நினைப்பது பிசகு; இந்தியாவில் மதமானது திரிசங்கு சுவர்க்கத்தில் இருக்கிறது. கோயில்கள் அப்படிச் சனங்கள் கையிலு மில்லை; இப்படி இராஜாவின் கையிலுமில்லை; ஆகையால், உனக்குவேண்டாம் பூசனிக்காய்! எனக்கு வேண்டாம்பூசனிக்காய் !! என்று கோயில்களும் குளங்களும் கிடந்து திண்டாடுகின்றன. இங்கிலாண்டில் மத மப்படி யன்று; இராஜ மதமென்று ஒரு

படமேற்பட்டிருக்கிறது. அந்தமதத்தை இராஜன் காப்பாற்றுவதாக முடிசூட்டுகாலத்தில் வாக்கு தத்தமும் பண்ணிக்கொடுகிறார்; ஆகையால், இந்தக் கோயிலை இராஜனும் இராஜாங்கத்தாரும் காப்பாற்றவேண்டியது அவர்கள்கடமை; ஆகையால் கோயிலுக்குள் நுழைந்து அண்ணாந்து பார்த்திருந்தோமேயானால் மின்சார விளக்குகள் ஜகச்சோதியாய் மின்னினதைப் பார்த்திருப்போம்! ஆகாரத்தில் மின்னும் ஜகச்சோதி ஒளியானது இளவரசர்களும் இளவரசிகளும், பிரபுகளும் பிரபுக்கள் மனைவியார்களும் போட்டுக்கொண்டிருந்த வைரத்தினகஜிதமான ஆபரணங்கள் மேல் விழும்போது அந்தக் காட்சி எப்படி இருக்குமென்று நினைக்கிறீர்கள்? ஆகவே இதை மேலக் கைலாசமென்று சொன்னதற்கு என்னை என் தமிழ் நாடுநேசிகள் மன்னிப்பாரென்று மிக்கவினையமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

## ஆபிக்கோயிலுக்குள் முடிசூட்டுக் கலியாணம்.

இந்தக் கோலத்துடன் மகாப்பிரபுவுக்கு முடிசூட்டுக் கலியாணம் தேவனருளால் நிறைவேறிற்று. இராஜனுக்குஉடம்பு இன்னும் முழுவதும் சொஸ்த மாகாததினால், முடிசூட்டுச் சடங்கில் சில அம்சங்கள் விட்டுவிடப்பட்டன:—சடங்கின் மூன்றாம் பங்காகிய அங்கீகாரத்தில் சொன்னபடி மகாப்பிரபு தம்மை நான்குபக்கமும் தம்குடிகளுக்குக் காட்டிக் கொள்ளவில்லை; நான்காம் பங்கா

கிய லிடனிப்பல்லி என்பது நடக்கவில்லை; ஊர்கோலத்தின்போது இராஜவிருதுகள் (இரண்டு கத்திகள் தவிர) பிடித்துக்கொள்பவர்களாகிய பலபிரபுக்கள் தத்தம் விருதுகளை காண்டர்பரிப் பிரதான குருமாரிடத்தில் ஏற்கனவே ஏற்பட்ட வரிசைக் கிரமத்தில் கொண்டு வந்து கொடுக்க, அவையாவும் பலிபீடத்தில் வைக்கப்படுகின்றன; அப்போது, இராஜன் இராஜாத்தியிருவரும் பலிபீடத்தண்டைவந்து கால் மட்டி போட்டுக்கொண்டு நிற்கிறார்கள். அப்போது பாடப்படும் பண்ணை லிடனி என்பது. இதன்றி, உபதேசம் என்னும் 6-வது பங்குகூட நடக்கவில்லை; நூதிமுன்னும் இராஜரீகக் கத்தியும் சுவாமிக்கு நிவேதனமாய் அர்ப்பணம் பண்ணின பிறகு பட்டாக்கத்தியை இடுப்பில் சுற்றிக் கட்டுவதுண்டு; அது 9-வது பங்கு; அதுவும் நடக்கவில்லை. முன் சொன்ன 3-வது அங்கீகாரச் சடங்கானது சிம்மாசன மேடையில் (Dais)நடக்கவேண்டியது; ஆனால், முடிசூட்டுக் காலத்தில் மகாப்பிரபுக்கள் இருவரும் முழங்கால் மட்டிபோட்டுக்கொள்ளும் மணையண்டையே (Faldstool) அங்கீகாரம் நடந்தது.

இராஜனுக்குத் தலையில் முடியைக் கவிழ்த்தவுடன், வெஸ்ட் மின்ஸ்டர் கூடமெல்லாம் மின்சாரவிளக்குகள் சோதிமயமாய் மின்னின. அப்போது பாருங்கள்! இராஜன் இருந்த இராஜரீக நிலைமையின் காந்தி சொல்லமுடியாது! அவர் தங்கச்சோக்காயென்ன, அவர் இடுப்பில்நீண்டகச்சை

என்ன, அவர் தங்கத்தோட்பட்டை என்ன, அவர் நவரத்தின கஜிதமான கிரீடமென்ன, அதில் ஒளி மலை யென்னும் வச்சிர மென்ன (Koh-i-Nur) இவையாவும் அந்த மின்சார ஒளியில் என்னமாய் ஒளிவிட்டிருக்க வேண்டுமோ நீங்களேயோசியுங் கள்! நான் என்னமாய் என்வாயால் சொல்வேன்? ஆயிரம்தலைபடைத்து இரண்டாயிரம் நாபடைத்த ஆதிசேஷனுக்கும்நாவெழுமென்று நீங்கள்நினைக் கிறீர்களா ?

சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பொருட்டு முடிசூட்டு நாற்காலியை விட்டு இராஜன் சிம்மா சனம் மேடை ஏறும்போது மிகவும் திடமாயும் தைரியமாயுந் தான் ஏறினர். இவருக்கு முடி சூட்டின காண்டர்பரிப் பிரதான குருமாரும் ஏறவேண்டிய கிரமப்படி ஏறினர்; ஆனலும், ஏறும்போது இந்தக் குருமார்க்குப் பிரம்மானந் தத்தால் வாயடைத்துப் போயிற்று; முடிசூட்டுச் சடங்கு ஒரு நிமிஷம் நின்று போயிற்று. உடனே யார்க் பிரதான குருமாரும் இன்னு மிருவரும் அவரைத் தட்டித் தழுவி நின்றார்கள். பிற்பாடு கொஞ்சநாழிகைக் கெல்லாம் தேகம் சுவாதீனப் பட்டுப் பாக்கிச் சடங்கை நிறைவேற்றினர்.

சடங்கெல்லாம் நடந்தது; அரசர் தளர வில்லை; "சுவாமி நிவேதன வினியோகம் (5-வது பங்கு)" என்பது நடக்கும்போது மண்டிபோட் டுக்கொண்டு நின்றார். மற்றவேளையில் (Hymns and Anthems) உட்கார்ந்துகொண்டே யிருந்

தார். மூர்ச்சைபோன மேற்படி குருமார் சொல்ல வேண்டிய வாழ்த்துக்களை வாசித்தசேக வெகு நிதானம்; அவர்வாசித்த வாழ்த்துக்களெல்லாம் பெரிய எழுத்துக்களில் இருந்தன; ஆயினும், அவர்க்கு ஆனந்தப் பரவசம் வந்து பலதப்புகளுநடன்வாசித்தார்; பேனுமவர்க்குக்கண்கொளுதபமத்தியமம்.

## இராஜபிருதுகளின் அர்த்தம்.

இந்த முடிசூட்டில் போட்டுக் கொள்ளும் உடைகள் சன்மார்க்கத்துக்கு அறிகுறி; சிலுவை வைத்த உருண்டையானது இராஜன் அனுசரிக்கும் கிறிஸ்தவ மதாசாரியரான இயேசுகிறிஸ்துவுக்கு இந்த அண்டமெல்லாம (உருண்டைபோன்று இருக்கப்பட்ட இந்தப்பிரபஞ்சம்) அடங்கி நடக்கவேண்டுமென்று இராஜனுக்கு ஞாபகப்படுத்தும் அறிகுறி; இராஜன் போட்டுக் கொள்ளும் மோதிரம் இராஜாங்கத்தைக் குறித்து நிற்கின்றது; சிலுவை வைத்த கோல் வலிமைக்கும் நேர்மைக்கும் அறிகுறி; மற்றொரு கோல், புறவைத்ததை ஒரவஞ்சனையில்லாமைக்கும் (Equity) அருளுக்கும் (Mercy) அறிகுறியாய் இடது கையில பிடித்துக் கொள்ள வேண்டியது.

## பட்டாபிஷேகத்தின் பொருட்டு வீதி விடுதிகளின் வாடகை.

லண்டன் மாநகரத்தில் இராஜவீதிகள் வழியாய்ப் பட்டாபிஷேக ஊர்கோலம் போகும்

போது அந்த மகிமையைக் கண்ணால் பார்க்கும்படி, அந்த வீதிகளில் இருக்கும் வீட்டுக்காரர்கள் தங்கள் வீடுகளில் வீதிப்பக்கத்து விடுதிகள் வாடகைக்கு வேண்டுவோர்க்குக் கொடுப்பதாய் முன்னடியாகவே தங்கள் வீதிகளெல்லாம் விளம்பரம் போட்டார்கள். இந்தமாதிரிப் பட்டாபிஷேகத்தின்பொருட்டு வீடுகளில் விடுதிகள் வாடகைக்கு விடுவது வெகு காலமாய் நடந்து கொண்டிருக்கிறது. இந்தப் பட்டாபிஷேகத்து விளம்பரத்தில் வீடெல்லாம் வாடகைக்கு விடும் பட்சத்தில் வீட்டுக்காரர்களுக்கும் பட்டாபிஷேக ஊர்கோலகாலத்தில் வாடகைக்கு வந்தவர்கள் இடங்கொடுக்க வேண்டுமென்று கண்டிருந்தது. இந்த மாதிரி இதற்குமுன் நடந்த ஒரு பட்டாபிஷேகத்திலாவது கிடையாது. இதன்கீழ் முன்காலத்தில், இதற்கு முன்னால் நடந்த பட்டாபிஷேகத்தில் வீடுகள் வாடகைக்கு விட்ட குடிக்கூலி விவரிக்கப்பட்டிருக்கிறது:—

| | | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|
| 1-வது எட்வர்ட் | ராஜன் | ... | 0 | 0 | $1\frac{1}{2}$ |
| 2-வது ,, | ,, | ... | 0 | 0 | 3 |
| 3-வது ,, | ,, | ... | 0 | 0 | 6 |
| 2-வது ரிச்சர்ட் | ,, | ... | 0 | 1 | 0 |
| 4-வது ஹென்ரி | ,, | ... | 0 | 1 | 0 |
| 5-வது ,, | ,, | ... | 0 | 2 | 0 |
| 6-வது ,, | ,, | ... | 0 | 2 | 0 |
| 4-வது எட்வர்ட் | ,, | ... | 0 | 2 | 0 |
| 3-வது ரிச்சர்ட் | ,, | ... | 0 | 2 | 0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7-வது ஹென்ரி | ராஜன் | ... | 0 | 2 | 0 |
| 8-வது ,, | ,, | ... | 0 | 4 | 0 |
| 6-வது எட்வர்ட் | ,, | ... | 0 | 4 | 0 |
| மேரி | ராணி | ... | 0 | 4 | 0 |
| எலிஜபத் | ,, | ... | 0 | 6 | 0 |
| 1-வது ஜேம்ஸ் | ராஜன் | ... | 0 | 12 | 0 |
| 1-வது சார்லஸ் | ,, | ... | 0 | 12 | 0 |
| 2-வது ,, | ,, | ... | 1 | 14 | 0 |
| 2-வது ஜேம்ஸ் | ,, | ... | 1 | 14 | 0 |
| 3-வது வில்லியம | ,, | ... | 3 | 12 | 0 |
| ஆன் (Anne) | ராணி | ... | 3 | 12 | 0 |
| 1-வது ஜியார்ஜ் | ராஜன் | ... | 3 | 12 | 0 |
| 2-வது ,, | ,, | ... | 7 | 14 | 0 |

3-வது ஜியார்ஜ் ராஜாவின் பட்டாபிஷேகத்தின் போது ஒரு வீட்டுக்கு 700 பவுன் முதல் 1,000 பவுன் வரையில் குடிக்கூலி கொடுக்கப்பட்டது. ஆகவே, இருக்க இருக்க குடிக்கூலியானது பட்டாபிஷேகத்துக்குப் பட்டாபிஷேகம் ஏறிக்கொண்டே வந்திருக்கிறது.

இப்போது ஒரு வீட்டில் ஒரு இடத்திற்கு ரூபாய் 31-8-0 முதல் ரூபாய் 157-8-0 வரையில் வாடகை கேட்கப்படுகிறது. ஒரு வீட்டில் இப்படி எவ்வளவோ பேர் உட்காரும்படியான இடங்களிருப்பது ஸகஜம்; அப்போது, ஒரு வீட்டுக்காரனுக்குப் பட்டாபிஷேக வாடகைப் பணம் எவ்வளவோ குவியும்! லண்டன்மாநகரத்துப் பாக்கியமே பாக்கியம்!

முடிசூட்டு ஊர்கோலம் வழக்கமாய் இரண்டுதரம் நடக்கும்:—அரண்மனையிலிருந்து ஆபிக் கோயிலுக்கு ஒன்று; இது முடிசூட்டு அன்றைக்கே நடக்கும்; முடிசூட்டு நடந்தபிறகு மறுநாள் ஒரு பெரிய ஊர்கோலம் லண்டன் பட்டணம் முழுவதும் சுற்றிவரும்; இந்தப் பெரிய ஊர்கோலமானது இராஜனுக்கு வந்த பிணியால் அப்போது நடக்கவில்லை; நாளது அக்டோபர் மாதம் 25-ம் தேதி நடக்கும்.

இந்தச் சிறிய ஊர்கோலத்தின் போது, ஊர்கோலம் போகும்வழியெல்லாம் உள்ள ஒழிவிடங்கள் யாவும் ஊர் கோலத்துக்கு வெகுநாள் முன்னமேயே அடைபட்டுப் போயின. முன் சொன்னபடி அத்தனைவாடகைக்கு அமர்த்தப்பட்ட இடங்களு முண்டு; முடிசூட்டு கிட்ட நெருங்க நெருங்க இன்னும் அதிக வாடகை கொடுக்கப்பட்ட இடமுமுண்டு. அமெரிகா ஐக்கிய நாட்டுக் கோடீச்சுரர்கள் அந்தச்சிறிய ஊர்கோல வழியில் பெரியசன்னல்கள் இருக்கப்பட்ட இடங்களைத் தங்களுக்காக வாடகைக்குத் திட்டப்படுத்தும்படித் தங்கள்காரியஸ்தர்களுக்கு அப்போதே உத்திரவு கொடுத்து விட்டிருந்தார்கள். இந்தச் சிறிய ஊர்கோலம் போகும் வழியில், மூன்றும் மாடியில்சன்னலுள்ள ஒருசௌக்கியமான இடத்துக்கு 350 கினிகள் வாடகை திட்டமாயிற்று. முதல்முதல், கீழே வீட்டுக்குள்ளேயே ஒரு மூலைச் சன்னலுக்கு, 1,000 பவுன் வாடக்கை கொடுக்

கப்பட்டது. இன்னொரு சன்னலுக்கு 600 பவுன் வாடகைகொடுக்கப் பட்டது; இந்தஇடங்களெல்லாம் ஒன்றுக் கொன்று கிட்டத்தான் இருந்தன; ஆனால், பின் சொன்ன இரண்டு சன்னல்களும் கீழே, வீட்டுக்குள்ளேயே யிருந்தன; முன் சொன்னது மூன்றாவது மாடியில் இருந்தது. வைட்ஹால்பேட்டையில் இரண்டு சிறிய சன்னல்கள், ஒவ்வொன்றிலும் 10-15 பேர் உட்காரும் படியானவை, கீழே வீட்டிலேயே யிருக்கப்பட்டவற்றிற்கு (in the ground floor) 350 கினிகள் வாடகை வாங்கப் பட்டன. இந்தச் சிறிய ஊர்கோலம் வரும் சிறிய வழியில் இருக்கப்பட்ட வீடுகளெல்லாம் மாளிகைகளும் (Mansions) சோற்றுக்கடைகளுமாய் (Clubs) இருக்கின்றன. ஆகையால், அவற்றில் வெளியிலிருந்து வேற்று மனுஷர்கள் வந்து வேடிக்கை பார்க்க இடமிருக்காது; அன்றி, அமெரிக்கா ஐக்கிய நாட்டார்களும் கும்பல் கும்பல்களாய் வந்து சாய்ந்தார்கள். இவ்விரண்டு காரணங்களால் இந்தமாதிரி வாடகை பெருத்துப் போயிற்று. (கினி 1-க்கு ரூ 15-12-0.)



## 8-வது இன்பம்.

# முடிசூட்டுக்கொடைகள்.



மகாப்பிரியமான ராஜன முடிசூட்டுக்குப் பிறகு தம் குடிகள் தம்பேரில் வெகு பரிதாப மாய் இருந்து தம்முடன் தம் நோவுக்காலமெல் லாம் துக்கித்து வந்ததற்கு, அவர்களுக்குபயோ கப்படியாய் ஒரு தானம் பண்ணினார். இந்தத் தானம் பண்ணின சாசனத்தைத் தம் பிரதானி யாருக்கு எழுதினார்; அது அவர்பேருக்கு ஆஞை யாய், ராஜ்யத்தில் தம் பிரஜைகள் பேருக்கு எழுதப் பட்டதாகவே நினைக்கவேண்டும். அந்தச் சாசனம் என்னவென்றால்:—

பக்கிங்காம் அரண்மனை,
1902-ம் வருஷ முடிசூட்டுநாள்.

"இராஜனுக்கு மகாப்பிரியமுள்ள தாயாரின் மனோபீஷ்டத்தால் (உயிலால்), ஆஸ்பர்ன் சொத் தானது (Osborne Estate) பால்பர் துரைக்குத் (முக்கிய மந்திரி) தெரிந்தபடி இந்த இராச்சி யாதிபதிக்குச் (Sovereign) சேர்ந்தது; அவ்வதிப திக்குச் சொந்தமானது.

"இந்த அரசின் தலைப்பட்டினத்தில் வருஷம் முக்கால்வாசியும் இருக்கவேண்டி யிருப்பதினு லும்; அதன்பக்கத்தில விண்ட்ஸர் என்னும் மாளி

கையில் (Cartle) இருக்கவேண்டி யிருப்பதினு லும்; நார்பக்(Norfolk) என்னும் கௌண்டி இரா ஜனுக்கு ஒரு சொந்த ஊர்போல அதின்மேல் அவர்க்கு ஒரு வலுத்தவிசுவாசம் விழுந்து(home ties) இருப்பதாலும்; இந்தவிசுவாசத்தைக் கடந்த 40- வருஷமாய் இராஜன் பாராட்டிவந்ததினுலும், மேற்படி ஆஸ்பர்ன் அரண்மனை இராஜனுக்குச் சரியாய் உபயோகப்படும் என்று அவர்க்குத் தோன்றவில்லை. ஆதலால், வைட் என்னும் தீவில் (இங்கிலாந்துக்குத் தெற்கேயுள்ளது) இருக்கும் இந்தச் சொத்தை அவர் தம் குடிகளுக்கு ஒரு தர்மமாகக் கொடுத்துவிட நிச்சயித்திருக்கிறார்.

"இந்த ஆஸ்பர்ன் சொத்து காலஞ்சென்ற இரா ணியார்பேரை ஞாபகமூட்டத் தகுந்தது. ஆகை யால், இந்தச் சொத்தில் உள்ள அரண்மனையில் அவ்விராணியார் சொந்தவசத்தில் இருந்த இடங் கள் தவிர மற்ற இடங்களுக்கெல்லாம் அவர் பிர ஜைகள் வந்துபோய்க் கொண்டிருக்க வேண்டு மென்பது இராஜனுக்குள்ள ஆசை.

"இந்தமாதிரிப் பிரஜைகள்வசத்தில் விடப்பட்ட பாகங்களில் நாட்டார்போது நன்மைக்குரிய காரி யங்கள் நடக்கலாம்; கடற்படையிலும் கரைப்படை யிலும் தம் நாடு பொருட்டுத் தம் வாழ்நாளெல் லாம் உழைத்துவிட்டு உடம்பைக் கெடுத்துக் கொண்ட அரசூழியர்கள் அங்குவந்து விடாய் தீர்த் துக்கொண்டு காலங்கழிக்கும்படி மேற்சொன்ன பாகங்களைச் சேர்திருத்தலாய்; இந்தமாதிரி இராஜ

னுடைய மனோபீஷ்டம் நிறைவேறும்படி. அரசுக் குடிச்சபையார்க்கு(Parliament)மனுக்கொடுக்க வேண்டுமென்றால் பால்பர்துரை (பிரதானி)அந்த விஷயமாய்ச் சிரத்தை யெடுத்துக் கொள்வா ரென்று இராஜன் நம்புகிறார்".

இங்கிலாண்டுக்குத் தெற்கே வைட் என்னும் ஒரு தீவிருக்கிறது. அதற்கும் இங்கிலாண்டுக்கும் நடுவில் ஒருசிறிய வாய்க்கால்போல ஒருசிறுகட லுள்ளது(the Solent).அந்தக்கடலுக்கும்அந்தத் தீவில்ஒருசிறுநதிக்கும்(The Medina)நடுவில்இந்த ஆஸ்பர்ன் அரண்மனை யிருக்கிறது; இப்போதைய அரண்மனையாவது ஒரு சவுக்கமான கோபுரமும் (107அடி. உயரம்)ஒரு கடியாரக் கோபுரமும் (90. அடி உயரம்)கொண்டது.காலஞ்சென்ற ராணியின் வசத்திலிருந்த அறைகளில் இக்காலத்தில் பல சித்திர வேலைக்காரர்களால் செய்யப்பட்ட சிலை கள் படங்கள் முதலானவைகள் இருக்கின்றன. அவ்வறைகள் கொடிகட்டிப் பறக்கும் கோபுரத் துக்குப் பக்கத்தில் இருக்கின்றன; ராணியார் வசத்தில் வந்த பிறகு இந்தச் சொத்து பெருகிப் போயிற்று; இப்போது அது 5,000 ஏகராக்கள் கொண்ட சொத்தாயிருக்கிறது. அந்தச் சொத் தில் அநேக தோட்டங்கள்,வனங்கள் வெகு அழ காய்அமைக்கப்பட்டிருக்கின்றன;இந்தச்சொத்து சமுத்திரக் கரைவரையில் பரவி யிருக்கின்றது. ஆகையால், இராஜவம்சத்தார் வந்துநின்று சமுத் திரக்காற்று வாங்கும்படியாய் இரும்பு வாராவதி

ஒன்று (Pier) இருக்கின்றது; இந்தச்சொத்துக்கு வெளிப்பக்கம் பல குடிசைகள் இருக்கின்றன. அக்குடிசைகளில் அச்சொத்தில்வந்து அதற்காக வேலை செய்யும் தொழிலாளிகள் வசிக்கிறார்கள்; இக்குடிசைகள் சாதாரணமானவை யல்ல; வெகு நேர்த்தியாய் இருக்கும். இந்தச் சொத்துக்காக ஏற்பட்ட காரியஸ்தன் (Steward) பொருட்டுக்கூட ஒரு அரண்மனை (Barton Manor House) இருக்கிறது. அதை இராணியார் சீர்திருத்தும் பொருட்டு இடித்துக் கட்டினார்.

இந்தச் சொத்து 1845-ம் ஆண்டில் மகாப் பிரபுவான காலஞ்சென்ற இராணியார் ஒரு சீமாட்டி யிடத்திலிருந்து வாங்கினார். அப்போது இருந்த கட்டடம் வெகு சாதாரணமானதா யிருந்தது, அதை யிடித்து இப்போதுள்ளது கட்டப்பட்டது.

இங்கேதான் VII-வது எட்வர்ட் ராஜாவின் தகப்பனார் தமக்கு உடம்பு சொஸ்தமில்லாதகாலத்தில் உடம்பைத் தேற்றிக்கொண்டார்; இங்கே காற்று வெகு நன்றாய் இருக்கும்; நிச்சப்தமாய் இருக்கும்; ஒரு தொந்திரவும் லண்டனில் இருப்பதுபோல இராது. இந்தக் கட்டடத்தைக் கட்டும்போது இவர்தான் மேன்பார்வை பார்த்துவந்தார்; இங்கேதான் காலஞ்சென்றராணியார்வெகு இன்பமான கடிதங்களெல்லாம் எழுதிவந்தார்; இங்கேதான் ராணியார் சிவலோகப் பிராப்தி யடைந்தார். ஆகையால், இந்தத் தர்மத்தின்மேல்

VII-வது எட்வர்ட் ராஜாவின் குடிகளுக்கு இன்னு மதிகமான பிரீதி உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை.

மகாராஜா வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயிலுக்கு ஒருவிசேஷ தர்மமாய் ஒரு தங்கச்சிலுவை (Crucifix)யுருவமும் கொடுத்தார். அதில் முன் யேசுகிறிஸ்துநாதர் சிலுவையில் அறையுண்டாற் போல ஒரு உரு காட்டப்பட்டிருக்கிறது.

## பூர்வத்தில் செய்த தர்மங்கள்.

இங்கிலாண்டில் ஆண்ட அரசர்களுக்குள் இந்த மகாப்பிரபுவோடு எட்வர்ட் இராஜாக்கள் ஏழுபேர் ஆகிறார்கள். இவர்களில் சற்றேறக் குறைய எல்லாரும் வெகுதர்மிஷ்டிகள்தான்; உதாரகுணம் மிக உண்டு. தத்தம் முடிசூட்டுக் காலத்தில் தங்கள் ஏழைக் குடிகள்மேல் வெகுதயவாய் நடந்துகொண்டார்கள்; தர்மங்கள் பண்ணினார்கள். 1-வது எட்வர்ட் தான் முடிசூட்டுக் காலத்தில் குடிகளுக்கு விருந்தளிப்பதாக ஒருவழக்கமுண்டு பண்ணினான். இந்த எட்வர்ட் ராஜா முடிசூட்டிக்கொண்டதினத்தில் 2,000 சமையல்காரர்கள் குடிகளுக்கு விருந்துச் சாப்பாடு சமைத்தார்கள்; 380-பசுமாடுகளும், 900 பன்றிகளும் ஆடுகளும், 20,000கோழிகளும் அறுபட்டன, 50,000 பேருக்குச் சாப்பாடு போடப்பட்டது. இதற்கெல்லாம் செலவுக்குப் பணம் எப்படி என்று இராஜா முன்னடியாய் யோசிக்காமலே பணஞ் செலவழிக்கச்

சொன்னான்; பிறகு செலவுப் பட்டியைக் (Bill) கொண்டுவந்து காட்டிப் பணங்கேட்டால் இராஜனண்டை பணங்கிடையாமல் அரசுக்குடிச் சபையாரைப் போய்க் கெஞ்சிக் கூத்தாடிப்பணங்கேட்டுவாங்கிக் கொடுத்தான். இந்தஇராஜன் முடிசூட்டுக்கு ஸ்காட்லண்டு தேசத்து அரசன் (Alexander) வந்திருந்தான். அப்போது லண்டன் மகா நகரத்துக் குடிகளுக்குத் தான் மகா தர்மிஷ்டி என்று காண்பிக்க 500 ஸ்காட்லண்டுக் குதிரைகளை லண்டன் தெருக்களில் அவிழ்த்துவிட்டு இவற்றை யார் வேண்டுமோனாலும் பிடித்து வைத்துக்கொள்ளலாமென்று ஒரு உத்திரவுகொடுத்து விட்டான்.

முடிசூட்டுத் தினத்தில் இங்கிலாண்டில் சில அரசர்கள் ஜலக் குழாய்கள்வழியாய் திராட்சரசத்தாலான மது (wine) ஓடும்படிச் செய்திருக்கிறார்கள். இந்தமாதிரி இங்கிலாண்டில் பலதடவை நடந்தது. இந்த இங்கிலாண்டை டேன் சாதியார், நார்மன் ஜாதியார், ரோமன் சாதியார், இன்னும் பல சாதியார்கள் செயித்து இருக்கிறார்கள். நார்மன் ஜாதியார் (பிரான்சு தேசத்திலிருந்து வந்தவர்கள்) கி. பி. 1066-ம் ஆண்டில் இங்கிலாண்டைச் செயித்தார்கள். அப்போது செயித்தவன் இந்த ஆபிக்கோயிலில் முடிசூட்டிக் கொண்டபோது, தண்ணீர்க் குழாயெல்லாம் திராக்ஷரசமாய் ஒரு மணி நேரம் ஓடும்படி அரசன் உத்திரவிட்டிருக்கிறார் என்று லண்டன் நகரமெல்லாம் ஒரு விளம்பரம் போடப்பட்டது. இதற்கு அந்த

ரத்துக் குடிகள் வெகு உல்லாசப்பட்டு ஆ! ஊ! என்று வெகு கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது செயசீலனுன நார்மன்ராஜன் அந்த நகரத்தில் வைத்திருந்த காப்புச் சேனையானது நகரத்தார் ஏதோ ஒரு கலகம் பண்ணுகிறார்களென்றுநினைத்து ஆயிரம் இரண்டாயிரம்பேரை வெள்ளரிக் காய்போல வெட்டித் தள்ளிற்று. பிறகு எல்லாரும் சேர்ந்து உண்மை வெளிப்படுத்தவே,அப்படி நறுக்குதல் நின்றுபோயிற்று.

2-வது ரிச்சர்ட் ராஜன் பட்டாபிஷேகத்தின்போது ஒரு தெருவில் (Cheape) 3-மணி நேரம் திராக்ஷரசம் ஓடிற்று; இந்தத் தெருவில் ஒரு கோட்டை (Castle) யிருந்தது; அந்தக் கோட்டைக் கோபுரங்களிலிருந்து (Towers) ஒருநாளெல்லாம் திராட்சரசம்கீழே ஆகாசகங்கைபோல ஊற்றிற்று; IV-வது ஹென்ரி ராஜனும் மேற்படித்தெருவில் வெள்ளைத் திராக்ஷரசமும் சிவப்புத்திராக்ஷரசமும் ஒருநாளெல்லாம் 24-மணிநேரம் ஓடும்படிச்செய்தான்; ஆனால் மேரி என்ற இராஜாத்தி இந்தமாதிரிச் செய்ய வில்லை; வெறுமனே,குடிகளுக்குத் தன்னுடையதர்மகுணத்தைக் காட்டும் பொருட்டு விருந்திட்டாள். இந்தம்மாள் முடிசூட்டன்றைக்கு ஒரு டச்சுக்காரனுக்கு அவன் பண்ணின தம்பங் கூத்தாடி வித்தைகளுக்காக (Acrobatic feats) 16-13-4-பவுன்கள் வெகு மதி கொடுத்தாள்; இந்த வித்தையைப் பார்க்கும்படி அநேகாயிரம் ஜனங்கள் வந்திருந்-

தார்கள்; அந்த நெருக்கத்தில் அநேகம்பேர் மிதி பட்டுச் செத்தார்கள். II-வது எட்வர்ட் காலத்தில் ஒரு பரிதாபமான சேதி நடந்தது: அவன் முடிசூட்டன்றைக்கு 5,000 பேர்க்கு விருந்துச் சாப்பாடு சொல்லியிருந்தான்; சாப்பாட்டுக்கு உட்கார்ந்து கொண்டு சோற்றை வாயில் வைக்கும் போது சோறு நன்ருய் இல்லாததினால், பாதிப்பேர்க்குப் பசியாறவேயில்லை; உடனே இராஜனுக்குவெகு கோபம்வந்து சமையற்காரர்களில் 60-பேரை அன்றைக்கே தூக்கிற் போட்டு விட்டான். III-வது ஹென்ரியின் பட்டாபிஷேகத்தின் போது எட்டுநாளைக்கு லண்டனெல்லாம் சோற்று மயமாய்க் கிடந்தது, திராட்சரச மதுவானது ஏழைக்கும் பணக்காரர்களுக்கும் ஏகராசியாய் ஊற்றப்பட்டது. இதற்காக 5-கப்பலில் லண்டன் மகாபட்டணமிருக்கும் நதியில் (The Thames) திராட்சமது கொண்வரப் பட்டது. இந்த வெஸ்ட்மின்ஸ்டர் கூடத்தில் (Westminster Hall) கடையாய், IV-வது ஜியார்ஜ் ராஜன் இட்ட விருந்துதான் நடந்தது; இந்த விருந்து 6,80,000 ரூபாய் எடை (17,000 lbs) யுள்ள இறைச்சி, 400 பாத்திரங்களில் மீன்கள் (400 Dishes of fish), 3,000 கோழிகள் முதலான வைகள் எல்லார்க்கும் கொடுக்கப்பட்டன; இது தவிர 4,000 காலன் திராட்ச மதுவும் எல்லார்க்கும் ஊற்றப்பட்டது; இந்த முடிசூட்டில்தான் ஷாம்பேன் (Champagne) என்னும் திராட்சமது குடிக்கப்பட்டது; இதற்கு முன்னால் குடிக்கப்

பட்ட மதுரைக் காட்டிலும் இது வெகு சிரேஷ்டமானது.

## இராஜனுக்கு இந்தியர்கள் கொடுத்த சேவைப் பொருள்கள்.

இந்தத்தடவை நடந்த VII-வது எட்வர்ட் மகாப்பிரபுவின் முடிசூட்டின் போதுதான் இந்திய ஒப்பைத்தலைநாடு (Indian Empire) இங்கிலாண்டின் நேரான ஆட்சிக்குச்சேர்ந்திருக்கிறது; இதற்குமுன்னால் இல்லை; ஆகையால், இந்திய அரசர்கள் பலபேர்கள் அங்கே போனார்கள். ஜப்பானிய ஒப்பைத்தலை அரசினின்றும் பொறுப்பாளியாய் (Representative) ஒரு இளவரசன் போனான்; அங்கேபோன நம்மிந்திய அரசர்களில், குவாலியர் மகாராஜா 10,000 பவுனும், ஜேப்பூர் மகாராஜா 10,000 பவுனும் மகாப்பிரபுவுக்குச் சேவைப் பொருளாய்க் (Visitation presents) கொடுத்தார்கள். பிக்கானீர் மகாராஜாவும் 100 பவுன் தர்மம் பண்ணினார். முதல் இருவர் கொடுத்த காசு மகாப்பிரபுபோரால் கட்டப்படும் ஆசுபத்திரிக்குள்ள முதலோடுகூட சேர்க்கப்பட்டது. மூன்றாவது சொல்லப்பட்டவர் கொடுத்தது இங்கிலாண்டு மகாராணியம்மாளின் வேண்டுகோளுக்குத் தக்கபடி கரைப்படையாளிகள் 'கப்பலோட்டிகள் ஆகிய இவர்கள் குடும்பத்துக்கு உதவியாக ஏற்பட்டிருக்கும் சபையின் முதலுக்குச் சேர்க்கப்பட்டது.

## ஜப்பானியர்கள் கொடுத்த சேவைப் பொருள்கள்.

ஜப்பான் தேசத்திலிருந்து போன சேவைப் பொருள்கள் இன்னவென்று பார்ப்போம். தம் நாட்டில் புராதனத்தில் வாடிக்கையிலிருந்த பாத்திரங்கள் சில, சித்திர வேலைக்காரர்களால் செய்யப்பட்ட பாத்திரங்கள் பல, இரண்டு பட்டப் பேர்கள் (Titles), இராஜாத்திக்கொருபட்டப்பேர், வேல்ஸ் இளவரசர்க்கு ஒரு பட்டப்பேர் ஆகிய இவைகொண்டு போகப்பட்டன. இவற்றில் முன் சொன்ன பாத்திரங்கள் செய்வதற்குச் சுமார் 2,000 பவுனாகிலும் பிடித்திருக்கும். இந்தப் பாத்திரங்களுக்குப் பதிலாய், நம் மகாராஜாக்கள் பவுன்களாய்ச் சேவைப் பொருள் கொடுத்தாற்போல ஜப்பானுக்கு மகாப்பிரபுவும் VII-வது எட்வர்ட்டு ராஜனுக்குத் தோழருமான மீக்காடோ (ஜப்பான் தேசத்து ஏகசக்கராதிபதிக்குள்ள பட்டப்பேர்) ஏன் பவுனைப் கொண்டு போய்க் கொடுத்திருக்கக் கூடாது? சங்கதியப்படியன்று; ஜப்பான் தேசத்துத் தெருக்களில் போய்ப் பார்த்தால், நம் சென்னையில் குழிப்பாதைவண்டிகளண்டைப் பிச்சைக்கு வந்து நிற்கும் ஏழைக் குடிகள்போல பதினாயிரமடங்கு ஏழைகள் அந் நாட்டில் நித்தியப்பஞ்சம் வந்துவிட்டாற்போல இறைந்து சிதறிக்கிடப்பார்கள்; ஏன் அப்படிக் கிடக்கிறார்கள்? அவ்விராஜ்ஜியத்தில் பணமில்லை; ஜப்பான் தேசத்துச் சண்டைக்கப்பல்கள் யாவும்

கடன் வாங்கிக் கட்டி வருகிறார்கள்! அப்படியி ருக்க மிக்காடோவுக்குப் புறத்தியார்க்குப் பண மாய்க் கொடுக்கக் காணுமா? கொடுக்கிற பணத் தைத் தம் நாட்டுக்குள் ஒரு கைத்தொழில் பொ ருள் செய்விப்பதில் செலவிட்டால், அப்பொ ருள் எட்வர்ட் ராஜனைச் சேவிக்கப் போம்போது அவர்க்குக் கொடுப்பதற்கும் உபயோகமாகும்; தம் நாட்டை விட்டுப் பணம் வெளிப்போகாமல் தம்நாட்டார்க்குள்பலர் பிழைத்தும்போவார்கள். இந்த மாதிரியாய் நம் நாட்டாரின் சாதகபாத கங்கள் தெரிந்து பணம் செலவிடவேண்டும். இப்போது நான் நமது மகாப்பிரவுக்குச் சே வைப் பொருள் கொண்டு போய்க் கொடுக்கக் கூடாதென்று சொல்லவில்லை; அப்பொருள் பண மாயில்லாது சாமானாயிருக்கலாமே என்றுதான் சொல்லுகிறேன்.

## அவிச்சும் பச்சை, கடன்வாங்கியும் பட்டினி, விருந்துக்குப் போயும் கைப்பணம் செலவு.

இப்போது இங்கிலாண்டுதேசம் நம் தேசத் தைக் காட்டிலும் 1,000 மடங்கு ஐசுவரியமுள்ள தல்லவா? அப்படியிருக்க இந்தியாவிலிருந்து போன முடிசூட்டு விருந்தாளிகளை வரவேற்கும் படி இங்கிலாண்டில் செலவழிக்கப்பட்ட பணம் இந்தியா நாட்டாரே போட்டுக்கொள்ள வேண்டு மென்று இந்தியா மந்திரியார் (Secretary of State for India) சொன்னார். இப்படி எங்கேயத

கிலுமுண்டா? ஒருவர் நம்மை விருந்துக்கு அழைத்தால் அந்த விருந்துக்கு நாமேயா செலவு போட்டுக்கொள்கிறது? இந்த அற்பத்தனத்தை நம் தேசத்திலும் இங்கிலாண்டிலும் இகழ்ந்து கண்டித்துப் பேசினபோது அந்தச் செலவெல்லாம் இங்கிலாண்டே போட்டுக்கொள்வதாகப் போன ஆகஸ்டு-மீ 26-உ உத்திரவு பிறப்பிக்கப்பட்டது. எப்போதும் அழுதபிள்ளைக்குத்தான் பால் கிடைக்கும்! அழாதபிள்ளைக்குத் தாயாரும் தன் பிள்ளையின் பசியறிந்து பால் போட்டமாட்டாள்!! அது மக்களுக்குள்ள பிறவிக்குணம்!!! இந்த உத்திரவு மாத்திரம் பிறந்திலலாமல் இருந்தால் 15,000 பவுன் இந்தியர்கள் தலையில் ஒரு பெரிய இடிபோல் விழுந்திருக்கும். இந்த முடிசூட்டு நடந்த ஆகஸ்ட் மீ 502,000 இந்தியர்கள் வயிற்றுக்குச் சோறில்லாமல் துரைத்தனத்தார் தயவால் கருப்பு விவேலைகளில (Relief Camps) வேலை செய்து பிழைக்க, இவ்வளவுகாசு கொடுத்து, அதாவது 7,20,000 ரூபாய் நம கையைவிட்டுச் செலவழிததாகிலும விருந்து சாப்பிடாமல் போனால் இந்தியாகள் காலம கழியாதோ? 5 லட்சம் பேர்க்கும இந்த ரூபாயை உதவியாகச் செலவழிக்கக் கூடாதா? பஞ்சம் பிடித்த ஊர்களில் நிலவரியைக் கட்டோடே தள்ளிவிடக் கூடாதா? இந்தியாகள் விருந்துக்குப் போயும கைப்பணம் செலவு!

# 9-வது இன்பம்.

# முடிசூட்டுக்காலத்தில் நடந்த பொருட்காட்சிச் சந்தை.



வெகுநாளாய்ப் பிரிடிஷ் பொருட்காட்சிக்கூடக் (British Museum) காரர்கள் லண்டன்மாநகரத்தில் விசேஷதினம் ஏதாவது வந்தால், அப்போதெல்லாம் பொருட்காட்சிச் சந்தை ஒன்று (temporary Exhibition) நடத்துவது வழக்கமுண்டு. இந்தச் சந்தையில் நாட்டார்க்குப் பொதுவான விசேஷ வஸ்துக்களாய்ப் பொறுக்கிக் காண்பிப்பது வழக்கம். ஆகையால் இந்த முடிசூட்டு மகோத்சவத்தில் மேற்சொன்னபடி சந்தை நடக்காமற் போயிருக்குமா?

இந்தப் பிரிடிஷ் பொருட்காட்சிக் கூடத்தில் இராஜன் புஸ்தகசாலை ஒன்றுண்டு; அந்தச் சாலையில் பற்பல பழையகாலத்துக்கைப்பிரதிகள் அச்சுப் புஸ்தகங்கள், அச்சுப் பொம்மைகள், கையெழுத்துப் பொம்மைகள், பதக்கங்கள் இவையாவும் முற்காலத்தில் முடிசூட்டுகள் இன்ன விதமாய் நடந்தனவென்று தெரியும்படிக் காட்டிவந்தார்கள். இவையெல்லாம் சாதாரணமாய் ஆங்கிலேய இராஜாக்களுக் குரியனவாய்த்தானிருக்கும்: இக்தக்காட்சி மிகப்பெரியதன்று, சிறியதாயேஇருக்கும்; சாதாரணமாய் முடிசூட்டைப்போன்ற பெரிய

காரியங்கள் இராச்சியத்தில் நடந்தபோது, அவை சென்றொழிந்த போதிலும் அவற்றால், பலவிதச் சீட்டுகளும் (Documents) பொருள்களும் அக்காரியங்கள் நாட்டில் ஒருகாலத்தில் நடந்தன என்று அவற்றிற்குப் பிற்பாடு தெரிந்துகொள்ள அறிகுறிகளாய் ஏற்படுகின்றன. இந்தமாதிரிச் சீட்டுகளையும் பொருள்களையும் பற்பல இடங்களிலிருந்து திரட்டி ஒன்று சேர்த்து அக்காட்சியில் வைக்கத் தொடங்கினால், அது வெகு விசேஷமாய்த்தானிருக்கும். ஆயினும், இந்த மேற்சொல்லப்பட்ட காட்சியில் காட்டப்பட்ட பொருள்கள் பற்பல இடங்களிலிருந்து வரவில்லை; பிரிடிஷ் பொருட் காட்சிக் கூடத்தில் கிடைத்தவையே காட்டப்பட்டன. இவை எவ்வளவு அறை குறையாய் இருந்தபோதிலும் திருப்திகரமாயே இருந்தன.

## வேடிக்கையான கைப்பிரதிச் சுவடிகளின் காட்சி.

மேற்படிக் கூடத்திலிருக்கப்பட்ட கைப்பிரதிகள்தான் முதல் முதல் காட்டப்படுகின்றன; அவைதான் வெகுபுராதனமானவைகள்; இக்கைப்பிரதிகளில், இங்கிலாண்டின் இராஜாக்கள் தத்தம் முடிசூட்டு நடந்தபோதெல்லாம் தாம் ஆணையிட்டுக் கொடுத்துவந்த பைபில்தான் வெகு சிரேஷ்டமான கைப்பிரதி; அதைத்தான் அந்தக் காட்சி பார்க்க வந்தவர்கள் முதல் முதல் பார்க்க ஆசைப்படுகிறார்கள். இந்தக் கைப்பிரதிதான் அந்தமாதிரியான புராதன பைபிலென்று இங்கிலாண்டின்

சனங்கள் கர்ணபரம்பரையாய்ச் சொல்லிக்கொள்கிறார்கள். இதன்றி, இந்தக் கைப்பிரதியானது கி. பி. 925-940-ஆண்டுகளில் ஆண்ட ஒரு ஆங்கிலேய அரசனுக்கு (Athelstan) அவன் ஐரோப்பியச் சக்கரவர்த்தியின் (Emperor Otto) உடன்பிறந்தாளைக் கலியாணம் செய்துகொண்டபோது தன் மைத்துனரால் இனாமாகக் கொடுக்கப்பட்டது.

இன்னொரு கைப்பிரதியுண்டு; அந்தக் கைப்பிரதி முன்சொன்ன கைப்பிரதிக்குப் பிறகு உண்டாயிற்று; கி. பி. 978-ம்ஆண்டில் இங்கிலாண்டின் அரசன் ஒருவனுக்கு (Ethelred) முடிசூட்டுநடந்தபோது அந்தக் கைப்பிரதியாகிய பைபிலைக் கையால் தொட்டுக்கொண்டு பின்வருகிறபடி ஆணையிட்டுக் கொடுத்தான்:—கிறிஸ்தவ சனங்களுக்கும் என் குடிகளுக்கும் மூன்று விஷயங்கள் வாக்குறுதி செய்துகொடுக்கிறேன். கடவுளின் தேவாலயமும் என்னுட்டுக் கிறிஸ்தவக்குடிகளும் எப்போதும் அமரிக்கையாய் இருக்கக்கடவர்கள்; என் ஆக்கினைக்கு மீறி ஒருவரும் அநீதியாய் நடக்கக் கூடாது; திருட்டு, கொள்ளை இவைகள் நடக்கக் கூடா; என் தீர்மானங்களில் (Dooms) நான் தயவும் நீதியும் காட்டுகிறேன், நம்மை ஆண்டுவரும் கடவுள் எப்போதும் தயவுடன் நம்மை மன்னிப்பாராக.

இதன்றி இங்கிலாண்டைப் பிராஞ்சுக்காரர்கள் செயித்துக் கைப்பற்றுமுன் ஆண்ட ஒரு

ஆங்கிலேய அரசன் முடிசூட்டிக் கொண்டவிதம் இன்னபடி என்று ஒரு பழையசுவடியில் இருக்கிறது. இந்தவிதமாய்த்தான் பின்னால் வெகுகாலம் வரைக்கும் (upto James II) முடிசூட்டுகள் நடந்தன; அவ்விதம் என்னவென்றால்: "சுவாமி உன்னிடத்தில் மகிமை, நன்னடத்தை, பலம் இவற்றையுண்டாக்கி அவற்றை முடியாக் கொண்டு உனக்குமுடிசூட்டட்டும்; அப்படிச்சூட்டுவதினால் நீ குருமார் செய்யும் ஆசிர்வாதத்தை உதவியாகக் கொண்டு ஒருபோதுமழியாத இராச்சியத்தின் கிரீடம் பெறுவாய்; அப்படி நீபெறுவது சுவாமியின் கிருபையால் தான். அச்சுவாமி வீற்றிருக்கும் லோகமானது ஒருபோது மழியாது." மேற்படிப் பொருட்காட்சிச் சந்தையில் காட்டப்படும் சில கைப்பிரதிகளில், இன்னின்ன உத்தியோகஸ்தர்கள் முடிசூட்டுக் காலத்தில் இராஜனுக்கு இன்னின்ன ஊழியம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

## அச்சுப்பொம்மைப் புஸ்தகங்களின் காட்சி.

மேற்சொன்னபடி கைப்பிரதிச்சுவடிகள் முதல் முதல் காட்டப்பட்ட பிற்பாடு பொம்மைச் சுவடிகள்காட்டப்படும். இப்போதிருப்பவற்றிலொன்று கூட முற்காலத்தில் இல்லை. இப்போது யாவும் புதியன. பழைய பொருள்களில் இப்போது ஒன்றும் உபயோகத்தில் இல்லை. முன்காலத்து முடிசூட்டுகளைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்

டுமானல், பழையகாலத்து (15th Century) அச்சுப் புஸ்தகங்களைத்தான் வாசிக்கவேண்டும். அந்த அச்சுப்புஸ்தகங்களில் முடிசூட்டுகளைப்பற் றிப்பற்பல பொம்மைகள் அச்சுப் போட்டிருக் கின்றன. எப்படி நம் தமிழ்நாட்டுப் பெரிய கோ யில்களில், அந்தந்தக் கோயில் புராணமாகாத் மியங்கள் அக்கோயில் பிராகாரங்களில் சுவரில் சித்திரம் எழுதிவைக்கப்படுகின்றனவோ, அப் படியே அந்தக்காலத்தில் நடந்தமுடிசூட்டுவைப வங்களைப் புஸ்தகங்களில் பொம்மைகளாய் அச் சிட்டு வைத்தார்கள். அப்பொம்மைகளையெல்லாம் பெரிய விசேஷதினங்களில் குடிகளுக்குக் காட் டுவது வழக்கமாய் இருக்கிறது. சேலம் ஜில்லா நாமக்கல்லில் நாமகிரிக் கோயில்களிலும், சிதம் பரத்திலும், திருவொற்றியூரிலும், திருப்பதி யிலும், சீரங்கத்திலும், இன்னும் பல மகாக்ஷேத் திரங்களிலும் அந்தந்த க்ஷேத்திரங்களுக்குரிய விசேஷங்கள் உட்சுவரில்செதுக்கப்பட்டவைகளை அந்தந்த க்ஷேத்திரத்துக் குருக்கள்மார், அர்ச் சகர்மார் தங்கள் கோயில்களுக்கு வந்த பெரி யோர்க்கும் சிறியோர்க்கும் காட்டும் வழக்கம் போல, லண்டனில் பிரிடிஷ் பொருட்காட்சிக் கூடத் திலும் ஒருவழக்க முண்டாயிருக்கிறது. இங் கிலாண்டின் அரசன் ஒருவன் (Henry VI) பட் டாபிஷேக காலத்தில் சிறு குழந்தையாய் இருந் ததால் ஒரு பிரபு (Richard Beauchamp, Earl of Warwick) அவனைத் தோளில் தூக்கிக் கொண்டு ஆபிக்கோயிலுக்குப் போனன்; இங்

தச் சேதியைக் குறிக்கும் பொம்மை மிகவும் வேடிக்கையாய் இருக்கிறது.

## பழைய முடிசூட்டு மஹோத்ஸவத்தில் கொடுக்கப்பட்ட ஒப்புச் சீட்டுகள்.

பெரிய விஷயங்கள் நடந்த பிற்பாடு அவைகளைப் பின்னால் ஞாபகப்படுத்தி மகிமைப்படுத்துவது அவைகள் நடந்தகாலத்தில் இருந்த சின்னங்களைச் செய்திகளேயன்றிப் பொருளு [illegible] அன்று; நம் தமிழ் நாடுகளில் கோயில்களில் உற்சவம் நடந்தால் உற்சவங் கழிந்த பிறகு கோயிலுக்குள் போன ஒருவன் அங்கே அப்படி உற்சவம் நடந்ததுஎன்றுஎன்னமாய்க் கண்டுகொள்கிறான்? அங்குள்ள உலர்ந்த தோரணங்களாலும், கொடிமரத்தில் கட்டி உலர்ந்து கிடக்கும் தர்ப்பைகளாலும், இன்னு மிப்படிப்பட்ட சில்லறை வஸ்துக்களாலுமே இக்கோயிலில் உற்சவம்நடந்திருக்கிறது என்றாவது அல்லது ஒருஉற்சவம்நடப்பதுவழக்கமொன்றுண்டென்றாவதுதெரிந்து கொள்கிறான். அதுபோல, பழையகாலத்து முடிசூட்டுகளுக்கு அடையாளங்களாய் அப்போது குடிகட்குக்கொடுக்கப் பட்ட ஒப்புச்சீட்டு (Ticket), இனமாகக் கொடுக்கப் பட்ட **சிறு சிறு பதக்கங்கள்** முதலியவைகள் இந்தப் பொருட்காட்சிச் சந்தையில் காட்டப்படும்; இந்தப்பதக்கங்கள்மாத்திரம் தனியாய் வைக்கப்படும்; இந்தப்பதக்கங்களில் இரண்டுவிதமுண்டு; (1) அரசூழியர்களுக்குக்(Official) கொடுக்கப்பட்டனவும் (2) அரசூழியர்களல்லாத

பெரியோர்க்குங் கொடுக்கப்பட்டனவும். மேற்படி ஒப்புச்சீட்டுகளில் ஒரு விதமானவற்றில் "ஊர்க்கோல வீதிவழியே வாருங்கள். பழைய அரண்மனையிலிருந்து ஸெய்ன்ட் மார்கேரட் கோயில் பக்கப் பெட்டிகளுக்கு (Boxes) வாருங்கள்; இந்த சீட்டைப் பக்கத்திலேயே வைத்துக் கொள்ளுங்கள்" என்று சீட்டுவாங்கினவனுக்குவக்கணைகள் (Directions) அச்சிட்டிருக்கின்றன. இந்தமாதிரி வக்கணைகள் போடாமலிருந்தால் புதியவனொருவனுக்கு அந்த மகாபட்டணத்திலென்ன தெரியும்? மற்றொருவிதமான சீட்டில் "இந்தச் சீட்டை எல்லாம் முடிந்து போகிறவரையில் வைத்துக்கொண்டிருங்கள்" என்று போட்டிருக்கிறது. இப்போது அந்த மாதிரி ஒன்றும் போடப்படவில்லை; ஏனென்றால், லண்டனில் எல்லாச் சங்கதிகளும் எல்லார்க்கும் தெரிந்துபோயின, முன்காலம்போல ஒன்றும் புதிதல்ல.



# 10-வது இன்பம்.

# முடிசூட்டுச்சாமான்கள்.



## உடுப்புகள்.

இராஜன் வெஸ்ட் மின்ஸ்டர் ஆபிக்குப்போம் போது உள்ளே கருஞ்சிவப்பான பட்டுச் சொக்காயொன்று முழங்கால் வரையில் மாட்டிக்கொண்டு அதற்கு மேலே அரசுக்குடிச் சபைக்குத் தாம் போம்போது வேண்டிய பெரிய சிவப்புச் சொக்காயைப் போட்டுக்கொள்வார். இந்த மேல்சொக்காயை ஆபிக்கோயிலுக்குப் போனவுடன் கழற்றி விடுவார். இராஜனுக்கு எண்ணெய் இட்டபிறகு போடும் உடுப்பு நான்குவிதமானது:-(1) உள்ளே ஒரு நார்ச்சொக்காய் (lawn garment); இது சாதாரணமாய்த்தானிருக்கும்; இதில் விசேஷமொன்றுமில்லை. இதை ஆங்கிலேயர் கோலோபியம் ஸிண்டோனிஸ் (Colobium Sindonis) என்பர்கள்; (2) இதற்குமேல் ஒருபெரிய அங்கிபோட்டுக் கொள்வார். இதற்குஇங்கிலாண்டில்டால்மாடிக் அல்லது ஸுபர்டேனிகா (Dalmatic or supertunica or close pall) என்றுபேர்; இதுதங்கநூலால் செய்யப்பட்டிருக்கிறது. இரண்டு கைகளுக்கும் கைப்பட்டைகள் அகன்று இருக்கும் (wide sleeves); முன்பக்கம் பொத்தான் போட்டு மாட்டப்படும்; கழுத்துவரையில்தான் வரும்; கீழே நேரோபாதங்

கள்வரையில் வருகின்றன; இப்படி இராஜனைமுற்றிலுமே மூடிவிடுகிறது; முன்னால் பொத்தான் போடும் பட்டைகளின் ஓரங்கள் 4-அங்குல அகலத்துக்குப் பூப்போடப்பட்டிருக்கின்றன. ஆகையால் பொத்தான்களை முன்னால் மாட்டிவிட்டால் கழுத்துமுதல் கணைக்கால்வரையில் ஒரேபட்டையாய்ப் பூப்போடப்பட்டது காணப்படும்; இந்தச் சொக்காயில் இந்தமாதிரிப் பூப்போட்டில்லாமற் போனால் இந்தச் சொக்காய் ஒரே தங்கநூலால் நெய்யப் பட்டதாயும் வெகு ஜோதிமயமுள்ளதாயும் காணும்; ஏனென்றால், இந்தப் பூப்போட்ட முன் பட்டையில் தங்கநூல் சேரவில்லை; அது தங்க நிறம் போன்ற பட்டால் பூப் போடப்பட்டிருக்கிறது; இந்தப்பட்டையில் போட்டிருக்கும் பூக்களுக்கு யாதொரு விசேஷ அர்த்தமு மில்லை; பாதிரிமார்கள், குருமார்கள் முதலியவர்கள் போடும் பட்டை போல இருக்க வேண்டுமென்றுதான் அதில் அந்தப்படிப் பூப் போடப்பட்டது. (3) இதற்குமேல் இடுப்பில் ஒரு கச்சை கட்டுவது உண்டு; அதற்கு ஆங்கிலேயபாஷையில் ஆர்மில்லா (Arwilla) என்றுபேர்; அது மூன்றங்குல அகல மிருக்கிறது; ஒரே நீளமாய் இருக்கும்; தங்கத்துணியால் செய்யப்பட்டது: இரண்டு நுனிகளிலும் குச்சங்கள் (Fringes) தொங்கும். இந்தக் குச்சம் ஒரு விழுதாய்த் தொங்கும்; இந்தக் குச்சத்துக்கு அடியில் வெள்ளி நூல் நெய்யப்பட்டிருக்கும். அதில், ஒரு சவுக்கமான, நாலுபக்கமும் மேடாய்க் கரைகட்

டின தட்டு ஒன்றும் (Square panel) இந்தத் தட்டுக்கு மேலும் கீழும் சக்கரங்களும் ஒன்றுடனொன்று பிணைக்கப்பட்டிருக்கின்றன. நடுவில் அங்கங்கே ஒரு சிவந்த சிலுவை (Cross of St George) பூப்போடப்பட்டிருக்கும்; அந்தக் கோடிக்கும் இந்தக் கோடிக்கும் நடுவில் பட்டு நூலால் பூக்கள் போடப்பட்டிருக்கின்றன; இந்தப் பூக்கள் கைக்கு வெகுமந்தமாய் இருக்கின்றன; இந்தப் பூக்களுக்கு நடுவில் உள்ளது ஒரு ரோஜா மரம்; அது சிவப்பானது; இந்த ரோஜா மரந்தவிர கழுகுகள், கிரீடங்கள், முட்செடிகள் (Thistle), முப்பிளவுள்ள இலைகள் (Shamrock), தாமரைப் பூக்கள், இன்னுமற்றச்சிறந்தவஸ்துக்கள் பூப்போடப்பட்டிருக்கின்றன. இந்தச் சிறந்த வஸ்துக்களெல்லாம் அங்கங்கே குப்பல் குப்பலாய் இருக்கும்; இப்படிச் சிதறிக் கிடக்கும் குப்பல்களுக்கு நடுவிலிருக்கும் இடைவெளியில் வெள்ளி நாலால் சிறு சிறு கிரீடங்கள் பூப்போடப்பட்டிருக்கும்; இந்தக்கச்சிலுள்ள அலங்காரங்கள் முன் காலத்தில் உ-வது சார்லஸ், உ-வது ஜேம்ஸ் ஆகிய இந்த ஆங்கிலேய அரசர் உடுத்த கச்சிலிருந்த அலங்காரங்கள் போலவே இருக்கின்றன; ஆனல், இதில் செய்யப்பட்ட வேலைகள் அதிக நயமாய் இருக்கின்றன. (4) இந்தப் பேரங்கி மேல், கழுத்தண்டை விடுதியான துணி ஒன்று (Imperial mantle or pall) தங்கத்தால் நெய்யப்பட்டதாய்ப் போட்டுக் கொள்ளப்படும்; அது இரண்டு தோள்களுக்கும் சரிப்போகும்படித் தைக்கப்

பட்டிருக்கின்றது. இது ஒரு கொக்கி (Clasp) யால் கழுத்தில் மாட்டிக்கொள்ளப்படும்; இது பின்னப்பட்டிருக்கும் தங்க நாலுக்கு அடியில் பட்டு கொடுக்கப்பட்டிருக்கிறது; இந்தத் தங்க நாலுக்கு ஒரு விசேஷமான வர்ண முண்டு; அந்த வர்ணத்தால், இந்த நூல் எந்த மாதிரியான வெளிச்சத்திலும், எந்த ஸ்திதியில் பிடிக்கப்பட்டாலும் அதிலிருந்து மினுமினுப்பும் தளதளப்பும் உண்டாகும்; இந்த மாதிரியான துணிகள் பலபேர் பல செய்து கொண்டுவந்தார்கள்; கடைசியாய் ஒன்றுதான் நல்ல துணியாய்த் தேர்ந்தது. இந்த உடுப்பில் இருக்கும் தங்கநால் கொஞ்சமும் மறையாமல் இருக்கும்படி நெய்யப்பட்டிருக்கிறது; இந்தத் தங்கநூல்ஒரு பட்டுநூல் மேல் நெய்யப்பட்டுள்ளது; வெகு மெல்லிய நுட்பமான இழைகளால் இந்தப்பட்டோடு தங்க நூல் பிணைக்கப்பட்டிருக்கிறது; இந்தப் பட்டின் கீழ் ஒரு ரவை சல்லாய் (Muslin) இருக்கிறது; அந்த ரவை சல்லாயின் கீழ்ஒருவிதமான சிவப்புப்பட்டு இருக்கிறது; ஆகவே, தங்கநூலோடு கூட நாலந்தஸ்துள்ள இழைகள் இந்தஉடுப்பில்இருக்கின்றன. இந்தத் தங்க இழையின் பேரில் அநேகபூக்கள் பின்னப்பட்டிருக் கின்றன. இடுப்புக்கச்சையில் போட்டிருகிற பூக்கள்தான் இதிலுமிருக்கின்றன. இந்தப் பூக்கள் தங்க நூலாலும் வெள்ளிநூலாலும் பல வர்ணங்களில் போடப்பட்டிருக்கின்றன; இந்தப் பூக்கள் போடும் போதுகையாளப்படும் பட்டுநூலால்ஒருவிதமான

இலைகள் (Laurel leaves) உண்டாகின்றன. இந்த இலை என்னத்துக் கென்றால், ஏற்கனவே தங்கநூல் மயமாய்இருக்கப்பட்ட இந்தஉடையில் இந்தப் பட்டுகலக்காது போனால்,அந்தத்தங்கத்தினுடையகாந்தி வெளியில்சோபிக்காது; இந்தப் பூக்களை எல்லாம் சுற்றி ஒரு தங்கக்கோடு போட்டிருக்கிறது; இந்தத் தங்கக்கோடு, மேற்படி பூக்கள், மேற்படி இலைகள் ஆகிய இம்மூன்றையும் ஒரே தடவையாய்ப் பார்க்கும்போது, உடையின் ஜோதிகண்ணால்பார்க்கமுடியாது! காதால் கேட்கமுடியாது!! வாயால் சொல்லமுடியாது!!!

இந்த முடிசூட்டுச் சடங்கில் அரசனுக்கு இரண்டுவிதமான அந்தஸ்துஏற்பட்டிருக்கின்றன. (1) குருமாரின் அந்தஸ்து; (2) படைத்தலைவர் அந்தஸ்து; எண்ணெய் இடல், ஆசிர்வாதம் முதலியவற்றைப்போன்றவை ஒருவன்கிறிஸ்தவமதக்குரு ஆச்சிரமத்தில் புதிதாய் நுழையும் போது நடக்க வேண்டியசடங்குகள்; உடைகளும்கிட்டத்தட்ட அக்குரு அப்போது போட்டுக்கொள்வது போலவேயிருக்கின்றன; கோலும் கிரீடமும்கூட அப்படித்தானிருக்கின்றன; இவற்றில் சிலுவை நட்ட உருண்டை (orb) ஒன்றுதான் படைத்தலைவனுக்கும்குறியன்று; குருத்தலைவனுக்கும் (Arch Bishop) குறியன்று; இப்போது, மேற்சொல்லப் பட்ட கச்சை (Armilla or stole) இடுப்பில்கட்டப்படுகிறது; பூர்வகாலத்தில், "கருடவாகனத்துக்குப் பீட்டுக்கரைவேஷ்டி கழுத்தில் மாலையாய்ப்போடு

வதுபோல் இராஜன் கழுத்தில் நீளப் போடப்பட்டு வந்தது.

பூர்வகாலந்தொட்டு இந்தநான்கு உடைகளும் மாதிரி மாறுகிறதில்லை; பூர்வத்தில் இருந்த மாதிரிதான் அவற்றின் உருவமும், அவை செய்யப்படும் நூல்களும் இருக்கின்றன; ஆனால், அவற்றிலிருக்கப்பட்ட பூக்கள் மாத்திரம் காலத்துக்குத் தக்கபடி மாறுபட்டு வருகின்றன. அரசனுக்கு முடிசூட்டானபிறகு உள்ளே ஒரு சிவப்பும் நீலமும் கலந்த சொக்காய் போட்டுக் கொண்டு அதன்மேலே அதே வர்ணத்தில் இராஜரீக அங்கி (Imperial purplerobe) இட்டுக்கொண்டு ஆபியை விட்டுப் போய்விடுவார். முடிசூட்டுக் காலத்தில் போட்டுக்கொண்டிருந்த உடைகளை ஆபியை விட்டுப் போம்போது உடுக்கமாட்டார்.

## இராணியாரின் சப்பாத்து.

முடிசூட்டுகாலத்தில் ராணியார் போட்டிருந்த சப்பாத்து பட்டுப்போட்டு தைக்கப்பட்டிருக்கிறது. அதில் தங்க நூலால் கிரீடங்கள் பூப் போடப்பட்டிருக்கின்றன.

## இராணியாரின் முடிசூட்டுஉடைகள்.

மகாராணியம்மாளுக்கு இந்தியாவிலிருந்து முடிசூட்டுக்காகப் போன உடுப்புகளைத்தைக்கும்படி அந்தம்மாள் உத்திரவிட்டபோது இன்னொரு உடுப்பும் தைக்கும்படிச் சொன்னார். ஆனால் அது என்னவேளையில் தைக்கப்பட்டதோ அது முடி-

சூட்டுக்காலத்தில் மகாப்பிரபுவுக்கு உடம்பு செய்மையில்லாமற் போனதினால் உபயோகமில்லாமற் போயிற்று. பின்னால் யாதாவது ஒரு பெரிய திருநாளில் சுபதினத்தில் போட்டுக்கொள்ள எடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. முடிசூட்டு உடுப்பு ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தைக் குறிக்கும் அஸ்தமிக்காத சூரியனுக்கு ஒரு அடையாளம்; அதில் இருக்கும் தங்கத்தினால் அதன் பெருமை வெகு அதிகமாயிற்று; அந்தப் பெருமைக்குக் காரணமான ஜோதியைப் பார்த்தால் சூரியோதயமானதுபோலக்காணப்படும், அது கண்ணைப்பறித்துக்கொண்டுபோவதுபோலிருக்கும். இன்னொரு உடுப்பு சந்திரனுக்கு அறிகுறியாய் இருக்கிறது. இது முடிசூட்டுஉடுப்புக்கு நேர் எதிரிடையாய் இருக்கும்; இருந்தபோதிலும் அது நேர்த்தியில் குறைந்ததன்று; இந்தம்மாளுக்கு இந்தியாவிலிருந்து போன உடைகள் வெகு நேர்த்தியாயிருக்கும். வெள்ளி, வச்சிரம், முத்து இவற்றால் கோர்த்து இழைக்கப்பட்டிருக்கின்றன: இவையெல்லாம் இடுப்புவரையில் முன்பக்கத்தில் தான் (Gorsage & Petticoat); பின்பக்கத்தில், பாவாடையின் தொடர்ச்சியாகிய பின் பாவாடை எப்படிப்பட்டதென்றால்:— இதில் இங்கிலாண்டின் குறியான ரோஜாப்பூ செஞ் சிவப்பும் கருஞ் சிவப்புமாய்ப் பூப்போடப்பட்டுள்ளது. ராணியம்மாள் தாம் போட்டுக்கொள்ளும் உடுப்புமேல் இந்தியாவில் செய்யப்பட்ட பூப்போட்ட ஆடைகள் தரித்துக் கொள்ள ஆசைப்பட்டார். உடனே கர்ஸன்நங்கை

ஸீத (Lady Curzon) எழுதி யோசனைபண்ணி ஒரு உடுப்பு செய்யச்சொன்னார். இந்தக் காலன் நங்கையே அந்த உடுப்பைத் தில்லியில் சரிப்பார்த்துச் செய்வித்து இங்கிலாண்டுக்கு அனுப்பினா. இந்த பின்பாவாடையில் ரோஜாமரம் பூப்போடப்பட்டது; ஏனென்றால், அதை உடுக்கும் ராணியார் தமக்கிருக்கும் ராசசியங்களுக்குத் தாம் புரசிபார் என்று காட்டத்தான்; இந்த உடைகள் போட்டுக்கொள்ளும்போது ராணியாரின் நுட்பமான தேகத்துக்கு அசௌகரியமாய் ஒருவிதமான நலிவுமுண்டாகாமல், இராணிக்கு வயது சென்றபோதிலும் அந்த உடைகள் சரிப்போம்படிச் செய்யப்பட்டிருக்கின்றன. முடிசூட்டுக்கு முன், ஒருதரம் இரண்டுதரம் இந்த உடைகள் போட்டுப் பார்க்கப்பட்டன. அப்போது இரண்டொரு சில்லறை மாறுபாடுகள் செய்யப்பட்டன.

ராணியார் இந்தமாதிரி இந்தியாவில் உடைகள் செய்வதற்கு ஒரு வழிகாண்பித்துவிடவே பல பிரபுக்களின் மனைவியார்களும் இந்தியாவில் பூப்போட்ட உடுப்புகள் செய்வித்து முடிசூட்டுக் காலத்தில் போட்டுக்கொண்டிருந்தார்கள்; இந்த உடைகளில் இங்கிலாண்டின் குறியாகிய ரோஜாவும், ஸ்காட்லண்டின் குறியாகிய முள்செடிகளும், அயர்லாண்டின் குறியாகிய முப்பிரிவுள்ள இலையும் ஓரங்களில் பூப்போடப்பட்டிருக்கின்றன.

அங்குலம் அகலமுள்ள. இந்த மூன்று பேட்டைகளுள் (stripes) நடுவில இருப்பதில் இங்கிலாண்டில் தவிர வேறெங்கும் காணப்படாத மரமும் அதன் பழமும் காட்டப்பட்டிருக்கின்றன (Oak & acorn). இரண்டுபக்கத்திலும் கரையில் உயர்ந்த சரிகை பின்னப்பட்டிருக்கிறது.

## முடிசூட்டு மோதிரங்கள்.

இராஜன் மோதிரம் ஒரே ஒரு செம்புக்கல்லால் (Ruby) செய்யப்பட்டிருக்கிறது; இம்மோதிரத்தில் ஒரு சிலுவை வெட்டப்பட்டிருக்கிறது. இதில் யாதொரு நகாசு வேலையும் செய்திலலே.

இராணியாரின் மோதிரத்தில் ஒரு பெரிய செம்புக் அதைச்சுற்றி 16 சிறு செம்புகளும் இழைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை ஒரு சிறு மெத்தையின்மேல் வைத்துப் பிடித்துக்கொண்டு சுவாமிக்கு நிவேதனமாய் அர்ப்பணம் செய்வதின் பொருட்டு முடிசூட்டுக்குமுன் ஒரு பிரபு பலிபீடத்தண்டை காத்துக் கொண்டிருந்தான்.

## இராணியாரின் விரலங்கி.

இந்த விரலங்கிகள் இங்கிலாண்டில் செய்யப்படுமுன், மாதிரிகள் வேண்டி. ஒரு பெரிய பள்ளிக்கூடத்தில் (Herald College) பொறுக்கியெடுக்கப்பட்டன; இவையும் முடிசூட்டினபோது ஒரு பெரும் விஷயமாய்த் தானிருந்தன; இந்த அங்கிகள் வெகு நேர்த்தியான ஆட்டுக்குட்டித் தோலில் செய்யப்பட்டிருக்கின்றன ; முழங்கை

வரையில் வந்தன; புறங்கையில் பூப்போடப்பட்டிருக்கின்றன. இந்தப்பூ தாம்போட்டுக் கொள்ளும் கிரீடமேதான்; வெகுநயமான தங்கநூலால் அந்தப் பூ பின்னப்பட்டிருக்கிறது. இப்பூவின்கீழ் மணிக்கட்டண்டை A. R. என்ற அக்ஷரங்கள் பின்னப்பட்டிருக்கின்றன. பூர்வகாலங்களில் ஆங்கிலேயப்பெண்பிள்ளைகள் போட்டுக்கொண்டிருந்த விரலங்கிகள்போல (Gauntlet) முழுங்கையண்டை வெகு அழகாய்த் தங்கநூலால் பூ ஒன்று போடப்பட்டிருந்தது. இந்த அங்கியைக் கட்டுங் கயிறும் ஒரு தங்கநூல் சரடுதான்; இந்தச் சரட்டை அந்த அங்கியில் விட்டிருக்கும் ஓட்டைகள் வழியாய்விட்டு முழுங்கையில் கட்டப்பட்டிருந்தது; இந்தச் சரட்டின் நுனியில் சிறிய குஞ்சங்கள் (Tasseels) தங்கத்தால் செய்யப் பட்டுத் தொங்கின. இந்த விரலங்கி முழுவதும் மகாப்பிரபுவாகிய இராஜனுக்கு விரலங்கி செய்பவர்களே லண்டனில் செய்தார்கள்.

## இராணியின் கிரீடம்.

இந்த மகாப்பிரபுவான ராணியம்மாள் போட்டுக்கொண்ட முடியானது வெகுநேர்த்தியானது. எல்லாம் வஜ்ஜிரக்கல்மயமாயிருக்கிறது. இக்கற்கள் யாவும்வெள்ளித்தகடுகள்மேல் வைக்கப்பட்டு இழைக்கப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், இந்தக்கல்லுக்கு வெள்ளிதான் தகுந்த லோஹம்; வெள்ளி தவிர மற்றொன்றும் அதன்

இந்த முடியின் அழகை நாம் கையால் எழுதவும் முடியாது வாயால் சொல்லவு முடியாது. இந்த முடியில் வெள்ளி, தங்க மிருக்கிறதே தெரியாமல் சர்வம் வச்சிரமயமா யிருப்பதானும் வச்சிரம் (Diamonds) தவிர வேறெ ஒருகல்லும் இல்லாமல் அதைச் செய்திருப்பதாலும் அந்த முடிக்கு வேறே ஒருவித பரிசுத்தம் உண்டாயிருக்கிறது. பரிசுத்தமன்றி, சூரியன் உதயமானதைப் போல ஒரு காந்தியும் உண்டாயிருக்கிறது. இங்கிலாண்டின் இராஜனுடைய துணைவிகளில் யாவருக்கும் இந்தமாதிரிக் கிரீடம் வாய்த்ததில்லை.

இந்தக் கோஹினூர் என்னும் கல் அழகாய்ப் படியாய்ப் பதிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கல் பதித்த கிரீடத்தைத் தில்லியில் பூட்டுபோடப்பட்ட முடிசூட்டு உடைகளுடன் சூட்டிக்கொள்வதும் ஒரு ஆச்சரியந்தான். ஏனென்றால், இராணி என்னமோ இந்தியாவுக்கு மகாராணி, கோஹினூரும் இந்தியாவிலிருந்து வந்தது; இப்படியிருக்க அந்தம்மாள் உடுக்கும் உடைகள் மாத்திரம் இந்தியாவுக்குச் சம்பந்தப்படாமல் இருந்தால் சரியாய் இருக்குமா? இருக்காதென்றே கடவுளானவர் அந்தம்மாள் உடுக்கும் உடையும் இந்தியாவில் செய்யப்பட்டனவாகச் செய்தார்; இதற்கு நாமெல்லாரும் கடவுளை வாழ்த்துவோமாக.

## இராஜனின் முடிசூட்டுக் கிரீடம்.

இங்கிலாண்டின் கிரீடமென்பது இராஜன் முடிசூட்டுக்காலத்தில் போட்டுக்கொள்ளும் கிரீ

டம். இது அவ்வளவு பேர்போன கிரீடமன்று;
அந்தக் கிரீடத்துக்கு ஒரு விசேஷமகிமையுங்
கிடையாது. அந்தக் கிரீடமானது இந்தஜகத்தில்
பிரபலமான ஒரு பெரிய ஏகாதிபத்தியத்துக்
குச் சேர்ந்திருந்தபோதிலும் அது புராதனமா
னது மன்று, விலை பெற்றது மன்று; இது
இராஜாக்கள் படைத்த கிரீடங்களுக்குள் வெகு
தாழ்ந்த கிரீடம். இங்கிலாண்டின் புராதன இராஜ
பிருதுகள் யாவற்றையும், கன்பெஸரின் கிரீட
முள்பட (Confessor's diadem) இங்கிலாண்டில்
சிலநாள் நாய்க்குடைபோல முளைத்து வளர்ந்த
குடியரசுக்குச் சேர்ந்த வெறி பிடித்தவர்கள்
(Iconoclasts), இனி இங்கிலாண்டுக்கும் அதன்
குடிகளுக்கும் இராசனென்ற ஒரு அதிகாரி வேண்
டிய தில்லை யென்றும், இனிக் குடியரசனே
இருக்க வேண்டுமென்றும் கோபங்கொண்டு
உடைத்து நாசம்பண்ணி விட்டார்கள்.

முன்சொன்ன கன்பெஸரின் முடிகொண்டு
அவருக்குப் பின்வந்த அரசர்களுக்குப் பட்டாபி
ஷேகம் நடந்தது. அதுவும் வெறிபிடித்தவர்கள்
கையால் நாசமுண்டதால், ஒரு முடி புதிதாய்ச்
செய்யவேண்டி நேரிட்டது. ஏனென்றால், மேற்
படி வெறி பிடித்தவர்கள் வெறி நீங்கின பிறகு
அவர்கள்வேண்டாமென்று ஒதுக்கின "இராஜன்"
என்றவன் இங்கிலாண்டில் ஏற்பட்டான். II-வது
சார்லஸ் என்பவரின் பட்டாபிஷேகத்தினிமித்தம்
பழைய மகுடத்தின் மாதிரிபோல புதியது ஒன்று

செய்யப்பட்டது. இவருக்குப்பிறகு வந்த அரசர்கள் யாவருக்கும் அதுகொண்டுதான் முடிசூட்டு நடந்தது; ஸெய்ன்ட்எட்வர்டுக்குச் சேர்ந்த முன் சொன்ன புராதன கிரீடம் வேறு; இராஜனுக்குச் செய்யப்பட்ட ஏகாதிபத்தியக் கிரீடம் வேறு. முதல் சொன்னதுதான் முடிசூட்டு மகுடம்; அது இல்லாமல் முடிசூட்டு நிறைவேறாது; இந்த முடிசூட்டுத் தினத்தில்தான் அதுசூட்டிக் கொள்ளப்படும், மற்றத்தினங்களில் தரிக்கப்படாது. நடVII-வது எட்வர்ட் ராஜாவின் சிரசின்மேல் பிரதான குருமார் முடிசூட்டுக் காலத்தில் வைக்கும்போதுதான் ஒருதரமதைத் தரிப்பார், மற்றப்படியன்று; மற்றச் சமயங்களில் ஏகாதிபத்திய மகுடம் தரிக்கப்படும். இந்த ஏகாதிபத்திய மகுடமானது விக்டோரியா இராணிக்காக 1838-ம் வருஷம் பழைய கிரீடங்களிலிருந்து கற்களைப் பேர்த்துச் செய்யப்பட்டது; அது உருவத்தில் மேற்சொன்ன கன்பெஸரின் மகுடம்போலேதானிருக்கும், ஆனால், வெகுவிலையுயர்ந்தது; அந்தப் புதியதில் 3,000கற்கள் இருக்கின்றன; இதில் 3-ல் இரண்டு பங்கு வச்சிரங்கள்; இந்த மூவாயிரத்தில் பிளாக்பிரின்ஸ் என்ற இளவரசால் செயித்து, இங்கிலாண்டுக்குக் கொண்டுவரப்பட்ட சிவப்புக்கல்லும் (Ruby); கன்பெஸர் வைத்துக் கொண்டிருந்த நீலக்கல்லும்(Sapphire);II-வது சார்லஸ் வைத்துக்கொண்டிருந்த நீலக்கல்லும் இருக்கின்றன.முதல்சொன்னசிவப்பைப்பிராஞ்சுதேசத்தில் எஜின்கோர்ட் என்ற சண்டையில் இங்

கிலாண்டின் அரசனான V-வது ஹென்றி ராஜா போட்டுக்கொண்டிருந்தார். இந்தப் புதிய ஏகாதிபத்தியக் கிரீடமானது $2\frac{1}{2}$ பவுன் (100 ரூபாய்) எடையுள்ளது. 3,60,000 பவுன் விலையுள்ளது. முடிசூட்டானபிறகு அபிக்கோயிலிலிருந்து திரும்பிப் போகும்போது இந்தக் கிரீடத்தைத்தான் போட்டுக்கொள்வார்; அபியில் முடிசூட்டப்பட்ட கிரீடத்தையன்று.

VII-வது எட்வர்ட் ராஜாவானவர் இந்த மகுடத்தால் முடிசூட்டப் பட்டவர்களில் 11-வது அரசர். இந்த முடியை 1672-ம் வருஷம் கர்னல் ப்ளட் என்பவர் வெகு துணிச்சலாய்த் திருடிக்கொண்டு போனதினால், அதற்கு அன்று முதல் ஒரு பெருமை உண்டாயிருக்கிறது. இது நடந்துவறக்குறைய 300-வருஷமானபோதிலும், அந்தப் பெருமை இன்னும மறையவில்லை:—இவரும் சில உடந்தையாட்களும் சேர்ந்து பிருதுகளை டீவரில் (Tower) காத்துக் கொண்டிருக்கும் காப்பாளியைத் தூரத்திவிட்டு, மகுடத்தையும் செங்கோல்களையும் எடுத்துக்கொண்டு, சமுத்திரக் கரையண்டை (St. Catherine's Wharf) தன் பொருட்டுக் குதிரைகள் காத்திருக்குமிடத்துக்குக் கிட்டத் தட்ட வந்தபோது, சில படையணிகளும் தலைவர்களும் அந்தத்திருடர்களை (கர்னல் ப்ளட்டும் அவருடந்தையாட்களும்) பிடித்துக் கொண்டார்கள். II-வது ஜேம்ஸ் ராஜாவின் சிரசின் மேல் வைத்தபோது இந்தமகுடம்

நத்தளித்த தாம். ஆன் ராணியின் நெற்றியைச் சராய்த்து விட்டது (Scarred); III-வது ஜியார்ஜின் முடிசூட்டெடக்கும்போது, முடியின் முகத்தில் பதித்திருந்த வயிரக்கல் கீழே விழுந்தது: இது பிற்பாடு அமெரிக்காவில் தனக்கிருந்த குடியேற்ற நாடுகள் யாவும் தான் இழந்து விடும்படியான அறிகுறி என்று கருதப்பட்டது.

## நான்கு தடவை இங்கிலாண்டின் மகுடம் அடைமானம் வைக்கப்பட்டது.

1386-ம் வருஷம் II-வது ரிச்சர்ட் ராஜா கடைசியாய்ப் பொக்கிஷத்தில் பணமில்லாமல் தன் முடியை அடைமானம் வைத்தான். இந்த அடைமானப் பணம் 2,000 பவுன் தான்; ஆகையால் இந்த மகுடமானது விலை தாழ்ந்ததாயிருக்க வேண்டும்; அல்லது, அதை அடைமானம் வாங்கிக்கொண்ட லண்டன் கல்வியாபாரிகள் அரசனை ஏமாற்றி யிருக்கவேண்டும்; ஆனாலும், ஒரு உயர்ந்த வஸ்துவை அடைமானம் வைக்கும்போது பணம் கொஞ்சந்தான் கிடைக்கும்.

இவன் தகப்பனான III-வது எட்வர்டும் இப்படித்தான் தன் மகுடத்தை வின்செஸ்டர் பிஷப்பண்டை 13,500 பவுனுக்கு அடைமானம் வைத்தார். III-வது ஹென்ரி ராசன் தன் பாளையக்காரர்களுடன் (Barons) சண்டைசெய்து ஏழையாய்ப் போனதினாலும், V-வது ஹென்ரி ராசன் பிராஞ்சு தேசத்தோடு சண்டைசெய்து

ஏழையானதினாலும், அவர்களின் மகுடங்கள் அடகு வைக்கப்பட்டன.

## கிரீடங்கள் திருட்டுப்போன கதைகள்.

இதற்குமுன் மேல் சொன்னபடி கர்னல் ப்ளட் 1672-ம் வருஷம் உ-வது சார்ல்ஸ் காலத்தில் டவர்க்குப்(Tower) போய், அங்கே இராஜ விருதுகளைக் காத்துக்கொண்டிருந்தவனண்டை போய் "அப்பா அந்த ராஜவிருதுகளைக் காண்பி, பார்ப்போ" மென்று கேட்டுக் கொள்ள, இவர் அவன் பக்காத்திருடனென்று நினைக்காமல்கேட்டுக்கொண்டபடி காட்ட, உடனே அவற்றைக்காப்பாளைச் கீழேதள்ளி வாயையடைத்து மகுடத்தை எடுத்துக் கொண்டுபோனான். இப்படி இவரும் இவர்க்கு உடந்தையா யிருந்தவர்களும் திருட்டுத் தனம் செய்தும், இவர்களுக்கு ஒரு தண்டனையும் கிடைக்கவில்லை. பின்னால் ப்ளட்டுக்கு மன்னிப்பும், சாரிகையும் (உபகாரச் சம்பளமும்) கிடைத்ததால் அரசனே அவ்வாறு திருடச்சொன்னதாக எல்லாரும் நினைத்தார்கள்.

பிராஞ்சு தேசத்தில் 1792-ம் வருஷத்தில் அரசனின் மகுடமும் நகைகளும் திருட்டுப் போயின. அந்தத் தேசத்தில் XVI-வதுலூயி அரசன் இறந்துபோன பிறகு, அவற்றை இராஜாங்கத்தார்கள் மற்றோரிடத்துக்குக் (Garde Meuble) கொண்டுபோய் வைத்தார்கள். அந்த 1792-ம் வருஷம் செப்டம்பர்மாதம் 17-ம்தேதிஇராத்திரி

அங்கே யாரோ பெட்டியை உடைத்துத் திருடிக் கொண்டு போய் விட்டார்கள். அதில் செங்கோலும் மகுடமும இதர நகைகளும் இருந்தன. இவையெல்லாம் சேர்ந்து 5,00,000 பவுன் விலை இருக்கும். சிலகாலம் இந்தத் திருட்டுச் சங்கதியைப்பற்றி ஒன்றும் உளவுதெரியவில்லை. கடைசியாய் ஒரு ஆகாசவாணிக்கடிதம் இராஜாங்கத்தார்க்கு வந்தது. அதைக்கொண்டு சொத்துக்களைக் கண்டு பிடிக்கத் தலைப்பட்டார்கள். கடைசியாய்த் திருட்டுச் சொத்துக்களில் பெரும்பாலும் ஒருஊரில் (Alleedes Veuves) ஒரு பள்ளத்தில் மறையப்பட் டிருந்தன. ஒரு பேர்போன வயிரமும் (Regent Diamond) திருட்டுப் போயிருந்தது. அதுவும் நல்ல வேலையாய் அகப்பட்டுப் போயிற்று.

இந்த மாதிரி மகுடம் திருட்டுப் போன கதை இன்னொன்றுண்டு. ஹாலண்டு நாட்டில் 1829-ம் வருஷத்தில் வெகு பேராசை பிடித்த திருடர்கள் மகுடத்தைக் கொள்ளை யடித்துக் கொண்டு போனார்கள்; அதின் விலை 1,20,000 பவுன்கள்; இரண்டு வருஷம் அந்தத் திருடர் கையிலேயே மகுடமிருந்தது; ஏனென்றால், அதை யெப்படி விற்கலாம், அல்லது அதை எந்த விதத்தால் காசாய் மாற்றலாம்? யார் விற்க வந்தாலும் அவரைத்திருடர் என்ன மாட்டாரா? கடைசியாய்த் தைரியங்கொண்டு அத்திருடர்கள் அதைப்பிரித்துத் துண்டுதுண்டாய் விற்கத் தலைப்பட்டார்கள். இந்தமாதிரி அந்த மகுடத்தின்

பொருப்பாளும் பிளவும கிடைத்தது. சிலகற்கள் அமெரிக்காவில் ஒரு ஊரிலா (Brooklyn) அகப்பட்டன. பாக்கியெல்லாம் ஹாலண்டு நாட்டுப் பக்கத்து இராஜ்யத்திலேயே சமீபத்தில் கிடைத்தன.

## திண்டாடித் தெருவில் நின்றமுடிகள்.

அமெரிக்கா தேசத்தில் கோடீசுவரனை கலியாணம் செய்துகொண்டவளாகிய பெண்மணியொருத்தி (கௌண்டெஸ் ஆப் காமிலென்) என்பவள் ஸ்பெயின் தேசத்துப் பழைய இராணியின (Ex-Queen Isabella) பாத்தியஸ்தனிடம் (Prince del Diago) அகப்பெற்று இராஜமுடியை 25,000-பவுனுக்கு வாங்கினாள். அந்தப் பழையராணி தன் இராஜ்யத்தை விட்டு வெளிப்போகும்போது அதனைக் கூடவே கொண்டுபோனாள். இந்தமுடி வெகு சிறந்ததாயிருந்தது. வெயிரங்களும், நீலங்களும, இரத்தினங்களும் (சிவப்புக்கல்) இழைத்திருந்தன.

இப்போது சொல்லிக் கொண்டுவந்த முடிகள் தவிர, திண்டாடித் தெருவில் நின்றமுடிகள் இன்னும சிலவுண்டு. முன் காலத்து உரோம் தேசத்துச் சக்கிரவர்த்தியாயிருந்த ஷார்லமேன் என்பவன் முடியும் இப்படித்தான் பலவிதமாய்த் திண்டாடிப் போயிற்று. அது இப்போது வியன்னா வில் ஏகாதி பத்தியப் புஸ்தகசாலையில் இருக்கிறது. இந்த முடியானது மேற்படி ஷார்லமேன் கோரியில வைத்திருந்தது. அதைவியன்னூருப்பட்ட

ணத்து அரசன்ஒருவன்(Frederic Barbarossa) வியன்னவுக்குப் பலவந்தமாய்க் கொண்டுவந்து விட்டான். இந்த அரசன் அயல் (ஹங்கேரி) தேசத்துக் கிரீடத்தையும் கொள்ளை கொண்டு போனான். இந்த ஹங்கேரித் தேசத்து முடி ஒரு தரம் பஞ்சுமெத்தையில் வைத்துச் சுருட்டப்பட்டுத் திருட்டுத்தனமாய்க் கொண்டுபோகப்பட்டு 2,800 டேகட்டுக்கு (ducat = ஒரு நாணயம்) அடைமானம் வைக்கப்பட்டது.

பிராஞ்சுதேசத்து க-வது நெபோலியன் கூட மேற்சொல்லப்பட்ட, திருட்டுப்போன (பிராஞ்சு தேசத்து) ராஜவிருதுகள் அகப்பட்ட கொஞ்சநாளுக்கெல்லாம் "ரீஜண்ட்" என்ற வயிரத்தை டச்சுத் துரைத்தனத்தாரிடத்தில் அடகுவைத்தான். அந்தப் பணத்தை வாங்கித் தன்னுடைய சொந்தப் பேராசை யோசனைச் செலவுக்கு வைத்துக் கொண்டான். தனக்குப் பிறகாலத்தில் (ஏகசக்கிராதிபதி) அதிகாரம் வந்தபிறகு அந்த வயிரத்தை (Regent Diamond) மீட்டான். பிறகு அந்த வயிரத்தைத் தன்னுடைய உடைவாளின் பிடிக்கிருந்த குமிழில் வைத்து இழைத்துக்கொண்டான்.

## முடிசூட்டுக் கல்லின் விவரம்.

வெஸ்ட் மின்ஸ்டர் ஆபியில் இருக்கும் எட்வர்ட் ராஜாவின் நாற்காலியில் முடி வைத்திருக்கும் முடிசூட்டுக்கல் என்பதுவெகுகாலத்துக்

கல். இந்தக்கல்லானது வெகுவிநோதமான சரித்திரத்தைக் குறிக்கும் அறிகுறி. இந்தக் கல்லைப் பற்றின சரித்திரத்தை இங்கிலாண்டில் கேட்க வேண்டுமென்றுஆசைப்படுபவர்கள்பலபேருண்டு. அதன் சரித்திரத்தையும் பூர்வோத்திரத்தையும நாம அறிந்துகொள்ள வேண்டுமானால், ஆயிரம் வருஷத்துக்குமுன் நடந்தவைகளைவாசிக்கவேண்டும். கர்ண பரம்பரையாய் வந்த கதைகளின்படி அதின் மூலகாரணம் வெகு அதிசயமாய் இருக்கிறது; அதைப்பற்றி வெகு புராதனமான கதைகள் இருக்கின்றன:— பைபிளில் சொல்லப்பட்ட ஒரு குடி முதல்வரான (Patriarch) ஜேகப் என்பவரால் பெதல் என்னுமூரில் தலையணையாய் வைத்துக்கொள்ளப்பட்டுப் பிறகு ஒருஅறிகுறியாய்ஏற்பட்டுப்போன ஒரு கல்லானது, ஞாபகக்குறியாயாவதுகொண்டாட்டக் குறியாயாவது பல சாதியரால் கட்டப்பட்ட அறிகுறிகளின் அச்சு என்று சொல்லப்படுகிறது; அதாவது, இந்த ஜேகப்பின் கல்லைப் பார்த்தால், பலசாதியார் பூர்வகாலத்தில் கட்டின அறிகுறிகளைப் பார்க்கத்தேவையில்லை. பைபிளில் அநேக இடங்களில், பூர்வ காலத்தில் அரசர்களுக்கு எண்ணெயிடும்போது உபயோகப் படும்பொருட்டு ஒரு இடம் கல்லாலமைக்கப் பட்டது என்றுசொல்லப்பட் டிருக்கிறது. அதே மாதிரி இங்கிலாண்டின் புராதன அரசர்களுக்குக் கிங்க்ஸ்டன் ஆன் தேம்ஸ் என்ற ஊரில் இருக்கும் ஒரு கற்பாறையில் எண்ணெ யிடப்பட்டது; அதுதான்அவர்க்கு முடிசூட்டுக் கல்லாயிருந்தது.

## முடிசூட்டுக் கல்லைப்பற்றின

## கதைகள்.

ஆபியிலிருக்கும் முடிசூட்டுக் கல்லைப் பற்றின பக்தியகாலத்துக்கதைகளாலும், இப்போது குடிகள் கொண்டிருக்கும் நம்பிக்கைகளாலும் மேற்சொன்ன ஜேகப்பின் கல்லே இந்த ஆபிக்கல் என்று கண்டிப்பாய்த்தெரிகிறது. அன்றி, ஸ்காட்லாண்டில் பூர்வகாலத்தில் இருந்த சில சில்லறைச் சரித்திரக்காரர்கள் (Chroniclers) இந்த ஆபிக் கல்லானது ஐரோப்பாவுக்கு வந்தது, ஸ்பெயின் தேசத்தில்குடியேறின பினிஷியன் (Phoenician) சாதியார்களால் என்றார்கள்; அந்த ஸ்பெயின் தேசத்திலிருந்து பிறகு, அயர்லாண்டு தேசத்துக்கு இப்ரோ கெல்டிக் சாதிக்குச் சேர்ந்த ஒருவன் அயர்லாண்டுக்கு அரசனைபோது அவன் பின்னேடு அங்கே வந்தது; இந்த அரசன் வமிசத்தார்களிடத்திலிருந்து "கலிடோனியா" என்ற ஸ்காட்லண்டுக்கு வந்தது.

ஆனல், இந்தஜேகப்பின் கல்லைப்பற்றி மகம்மதியர்கள் வேறே கதை சொல்லுகிருர்கள். அந்தக் கல்லானது ஜாஸேப் வமிசத்தாரால் மேற்படி பெதல் என்ற இடத்திலிருந்து கொண்டுபோகப்பட்ட தென்றும், ஓமார் என்ற பட்டணத்தில் இருக்கும் பழைய மசூதியில் இப்போது இருக்கிறதென்றும் சொல்கிருர்கள். அந்த மசூதியின் மாடத்தின் (Dome) கீழ் அந்தக்கல் மூடப்பட்டு

இருக்கிறது; மகம்மதியர்களுக்கு, மகா சிரேஷ்டமானது; அதைப்பற்றி அவர்கள் பலகதைகள் கர்ணபரம்பரையாய்ச் சொல்லிக் கொள்கிறார்கள்.

மத்தியகாலத்துக் கிறிஸ்தவர்களும் மகம்மதியர்கள் போலவே மேற்படி மகுதிக்கல்தான் ஜேகப்பின் கல் என்று நினைத்தார்கள். இந்த மகுதிக்கல்லில் அடியில் ஒரு கிணறுபோன்ற குழியொன்றுள்ளது. காலஞ்சென்ற (அங்கே புதைக்கப்பட்ட) வர்களின் உயிர்கள் தம் இறப்புக்கும் கடையாய்த் தம்பொருட்டுக் கடவுள் சொல்லும் தீர்ப்புக்கும் உள்ளமத்தியகாலத்தில் அந்தக் குழியில் போய்த்தங்குகின்றனஎன்றும் ஒருகொள்கை மகம்மதியர்களுக்குள் உண்டு.

அயர்லாண்டு தேசத்தில் மற்றொரு கதையுண்டு:— இந்த ஜேகப் கல்லானது ஜூடியா தேசத்திலிருந்து ஸ்பெயின் தேசத்துக்கு ஒரு சிற்றரசனால் கொண்டுவரப்பட்டது. அங்கே அச்சிற்றரசன் ஒரு அரசுநாட்டி அந்தக் கல்லைவைத்துக்கொண்டு சுகமே வாழ்ந்துவந்தான். அயர்லாண்டில் கிறிஸ்துமதம் பிரவேசமான காலத்தில் ஸ்கோடியென்ற சாதியார்க்குச் சேர்ந்த அரசர்கள் அங்கே இருந்தார்கள்; அவ்வரசர்கள் அயர்லாண்டுக்கு ஸ்பெயினிலிருந்து அந்த ஜேகப் கல்லைக்கொண்டு வந்தார்கள். இந்த ஸ்கோடி என்ற சாதியார் ஸ்காட்லாண்டு தேசத்தில் (ஆர்ஜைஜில் என்ற) மலைச்சாரல் வந்து சேர்ந்தார்கள். இந்த

ஸ்கோடிச் சாதியாசர்களுக்கு எப்போது ஜேகப் பினுடைய கல் அகப்பட்டதோ தெரியவில்லை. அந்தக் கல்லானது ஸ்காட்லண்டின் ஸ்லோன் என்ற இடத்தில் 1-வது எட்வர்ட் ராஜா பட்டத்துக்கு வருகிறவரையில் இருந்தது. பிற்பாடு அந்த இராஜன் இங்கிலாண்டில் வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கு அதைக் கொண்டுவந்து விட்டான்.

## ஸ்காட்லாண்டில்

## முடிசூட்டுக் கல்லைப்பற்றின கதை.

முன்னே அயர்லாண்டு வழியாய் ஸ்காட்லாண்டுக்கு அந்த முடிசூட்டுக்கல் வந்ததென்று சொல்லப்பட்டது. இன்னொருகதையின்படி, அது பெர்கஸ் ராஜா (King Firgus) என்பவனால் கி. மு. 330-வருஷத்தில்ஸ்காட்லாண்டுக்குக்கொண்டுவரப்பட்டது என்றும் பிற்பாடு ஸ்லோன் ஆபியில் கி. பி. 850-ம் ஆண்டில் வைக்கப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. ஸ்காட்லாண்டின் அரசனான கென்னத் என்றவன் காலம் வரையில், ஸ்லோன என்ற நகரத்தில் வெகுகாலந்தொட்டு ஸ்காட்லண்டின் அரசர்கள் முடிசூட்டப் பட்டார்கள். அந்த அரசனுக்குப் பிறகு ராபர்ட் ப்ரூஸ் காலம் வரையில் அந்தக் கல்லின்மேல் ஸ்லோன் நகரத்தில் இருக்கும் பழைய துறவிகள் மடத்தில் (Monastery) முடிசூட்டப்பட்டார்கள்.

# 7-வது எட்வர்ட் ராஜா இந்தக் கல்லை வெஸ்ட்மின்ஸ்டருக்குக் கொண்டு போன காரணம்.

ஸ்காட்லண்டு தேசத்து அரசர்களும் குடிகளும், அந்தக் கல்லானது தம்தேசத்தில் இருக்கிற வரையில் தம் தேசத்துக்கு அழிவில்லையென்று நினைத்திருந்தார்கள். இந்தக் காரணத்துக்காகவே இந்தக் கல்லை எட்வர்ட் ராஜா வெஸ்ட் மின்ஸ்டருக்குக் கொண்டுபோய்விட்டான். அதினாலேயே, ஸ்காட்லாண்டு தேசத்தைத் தான் செயித்துக் கட்டிக் கொண்டதாக அத்தேசத்தார்க்கு ஒரு கருத்தைப் போட்டினான்; அன்றியும், இந்தக்கல் ஸ்காட்லண்டில் இல்லாது இங்கிலாண்டில் இருக்கிறவரையில் அவர்கள் தங்கள் இராச்சியத்தை மீளவும் கைப்பற்ற யத்தனிக்க வேண்டியதில்லை யென்று ஒரு நம்பிக்கையையும் அதினால் கிளப்பி விட்டான். அப்படிக்கொண்டுபோய்த்தன் நாற்காலியின் கீழ்வைத்து மூடிவிட்டான்; இந்தக் கல்லை 1328-ம் ஆண்டில் இவ்விரண்டு தேசத்தார்க்கும் நடந்த சமாதான உடன்படிக்கையால் ஸ்காட்லாண்டார்க்குத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். அந்த வருஷத்தில், இங்கிலாண்டின் அரசனை III-வது எட்வர்ட் ராஜா இந்தக் கல்லை ஸ்காட்லாண்டுக்குக் கொடுத்துவிடவேண்டுமென்று உத்திரவு ஒன்று எழுதித் தன்முத்திரை போட்டு அதை வெஸ்ட்மின்ஸ்டர் ஆபிக்கோயிலில் இருந்த துறவிகளுக்குக் கொடுத்தான்.

அந்த உத்திரவின்படி, அத்துறவிகள் அந்தக்கல்லை லண்டன் ஷராப் (Shroff) களிடத்தில் ஒப்புவித்து அந்த ஷராப்கள் வழியாய் ஸ்காட்லாண்டுக்குத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். ஆயினும், என்னவிதமாயோ அது அப்போது கொடுபடவில்லை. பிறகும் 1363-ம் ஆண்டில் அந்தக்கல்லைத் திருப்பி வாங்கிக்கொண்டுபோக ஸ்காட்லாண்டார் பிரயத்தனப் பண்ணினார்கள். அப்போது நடந்த உடன்படிக்கையில், ஆங்கிலேயர் அந்தக்கல்லை ஸ்காட்லாண்டுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும்; இங்கிலாண்டு அரசன் ஸ்காட்லாண்டில் மேற்படி ஸோனுக்குப்போய் அந்தக் கல்லில் உட்கார்ந்து கொண்டு முடிசூட்டிக்கொள்ள வேண்டுமென்றும ஒரு நிபந்தனை போட்டுவிக்கப்பட்டது. ஆயினும், அந்தப்படி ஆங்கிலேயர் நடத்தவேயில்லை.

## முடி-சூட்டு நாற்காலி.

முன் சொல்லப்பட்ட ஸ்காட்லாண்டு தேசத்துக் கென்னத் என்ற அரசன் இந்தக்கல்லைத் தன் முடிசூட்டு நாற்காலியில் முடிவைத்தான். அந்த நாற்காலி என்னையிற்றோ தெரியவில்லை. இங்கிலாண்டில் இப்போதுள்ள முடிசூட்டு நாற்காலியானது இந்த முடி-சூட்டுக் கல்லை அடைத்துவைக்கும்படிப் புதிதாய்ச் செய்யப்பட்டதென்பதில் சந்தேகமில்லை. இந்த நாற்காலி கி. பி. 1300-ம் வருஷம் செய்யப்பட்டது. இதை ஒரு சித்திரமெழுதுபவனான மாஸ்டர் வால்டர் என்பவன் செய்தான். இந்த நாற்காலி முதல் முதல் அநேகவித

மான வாளைக்கள் பூராப்பு நிரசித்திரவேலை செய்யப்பட்டிருக்கிறது. இப்படி 1-வது எட்வர்ட் ராஜா செய்வித்தான். அதுமுதலாய்க் கூடப் பூராப்புப் படுகின்றது.

இந்தக்கல்லைப் பற்றி, காம்டன் (Camden) இங்கிலாண்டின் சரித்திரத்தை எழுதின காலமவனாலே இந்தக் கல்லினது ஜேக்கப்பானவர் தலையணையாய் வைத்துக்கொண்ட கல் தான் என்று எழுதப்பட்டு விட்டு தொடங்கிற்று. அந்த ஜேக்கப்பின் கல்லானது ஜெருஸலந்தில் இருக்கிறதென்று சொல்வது நிஜமா, வெஸ்ட்மின்ஸ்டர் ஆபியில இருக்கிறதென்று சொல்வது நிஜமானது நமக்குத் தெரியாது.

## முடிசூட்டுக் குதிரைகள், சேணங்கள், வண்டிகள்.

லண்டனில் பக்கிங்காம் அரண்மனையண்டை இராஜரீகக் குதிரைகள் கட்டும் பட்டி (Stable) யைப் போய்ப் பார்த்தால், அங்கே மகா பேர் போன குதிரைகளும் (Famous "Creams") முடிசூட்டு வண்டிகளும் பார்க்கலாம்! அங்கே தகுந்த சிபாரிசுடன் போனால், இராஜனின் குதிரைக்காரர்கள் தகுந்தபடி எல்லாம் சொல்வார்கள். இந்தக் குதிரைகள், வண்டிகள் இவற்றைப்பற்றிக் கீழ்சொல்வது இதைவாசிப்பவர்களுக்கு வெகு ஆச்சரியமாய் இருக்கும். இப்படிப்பட்டசேதிகள் எங்கும் அவர்கள் கேட்டிருக்க மாட்டார்கள்:- இந்தக் குதிரைப் பட்டியானது சவுக்கமாய் நாலு

மூலையாய்க் கட்டப்பட்டிருக்கிறது. இந்தப்பட்டி 3-ஏகரா விஸ்தீரணமுள்ளது. இப்பட்டிக்கு ஒரு பக்கத்தில் குதிரைகள் கட்டுமிடமும் சேணங்கள் வைக்கு மறைகளும், மற்றொரு பக்கத்தில் சாரட்டுகள் நிற்குமிடமும் கட்டப்பட்டிருக்கின்றன. இங்கேதான் முடிசூட்டுக்குதிரைகளும் அக்குதிரைச் சேணங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சேணங்களுக்குச் சிவப்புத்தோல் போட்டுத் தைக்கப்பட்டிருக்கின்றன. அந்தத் தோலின்மேல் தங்கத்தகடுகள் போட்டுத்தைக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தங்கத்தகட்டில் செய்திருக்கும் நகாசுவேலைகள் வெகு நேர்த்தியாய் இருக்கும். அந்த நகாசின் கைப்பாடோ சொல்ல முடியாது.

இந்த முடிசூட்டுச் சேணங்கள் முதல்முதல் விக்டோரியாராணியார் 1897-ம் ஆண்டில் தமக்கு மகோத்ஸவம்(Jubilee)நடந்தபோது உபயோகித்துக்கொண்டார். இங்கே, வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் உபயோகிக்கும் கறுப்புக்குதிரைகள் (Famous "Blacks") இருக்கின்றன. இந்தக் குதிரைகள்மேல் போடப்படும் சேணங்களும் இராஜனுடைய குதிரைகளுக்குப் போடும்சேணங்கள் போலவே யிருக்கின்றன. இந்தச் சேணங்களுக்குக் கறுப்புத்தோல் போடப்பட்டிருக்கிறது. இராஜன் முடிசூட்டுக் குதிரைகள் 10; இளவரசரின்குதிரைகள் 8. இக்குதிரைகளை இராஜனும் இளவரசரும் குடிகளைப் பஹிரங்கமாய்ப் பொதுவாய் வரவேற்று இன்றென்று தெரிந்து

கொள்ளும் இடத்துக்குப் போகும்போதும் (Going to Levees); குடிகளை அரசனாய்த் தனியே வரவேற்றுத் தெரிந்து கொள்ளும் இடத்துக்குப் போகும் போதும் (Going to Drawing Rooms); இன்னும் இவைபோன்ற இராஜரீகக் காரியங்கள் பல நடத்தும்போதும் உபயோகப்படுத்துவார்கள். இவற்றை முடிசூட்டுக்கும் உபயோகப்படுத்துவார்கள்.

மொத்தத்தில் 120-குதிரைகள் இந்தப் பட்டியில் இருந்தன. இவற்றில் பெரும்பாலும், சாதாரண சமயங்களில் இராஜவம்சத்தார் உபயோகப் படுத்தும் குதிரைகள்; இக்குதிரைகள் மிக்க மேன்மையான மிருகங்கள். ஒவ்வொன்றும் 160 கினி முதல் 200 கினிவரையிலும் விலையுள்ளது. (கினி என்றால் ஒரு பவுன் 12 அணா; அதாவது 15¾ ரூபாய்.) இந்தக் குதிரைகள் இராஜரீகக் குதிரைகள் வளர்க்கப்படும் இடத்திலிருந்து (Royal Stud, Hampton Court) வந்தன. முடிசூட்டுக் குதிரைகள் எப்படிக்கிடைத்தன என்றால், ஜர்மன் தேசத்தில் ஒரு பாகமாகிய ஹானோவர் என்ற நாட்டின் அரசன் விக்டோரியா ராணிக்கு வெகு நாள் முன்னால் இனமாக எட்டுக் குதிரைகள் கொடுத்தான். அந்தக் குதிரைகளை மேற்படிக் குதிரைகள் வளர்க்குமிடத்தில் வைத்து அவற்றினின்றும் புதிய குதிரைகள் பெறப்பட்டன. அந்தமாதிரிப் புதிது புதிதாய்ப் பெறப்பட்டகுதிரைகள் தான் இந்த பத்துக் குதிரைகளும். இராஜன் உபயோகப்படுத்தும் குதிரைகள் 10-ம் ஒரு

பக்கத்திலும், இளவரசரின் குதிரைகள் எடடிம ஒருபக்கத்திலும் ஒரு கொட்டாரசிபாப் கட்டப பட்டிருக்கின்றன. இவற்றில், இராஜன் எடடிட, இளவரசா அருந்தான் ஒரு கடமையில் நபக்கு உபயோகப்படுத்திக் கொள்வாரகள்.

இந்தக் குதிரைகள் ஒவ்வொன்றுக்கும் பேரு ருண்டு; அதன் பேர் அதன் பட்டியின் (Stall) மேட்டில் ஒரு பலகையில் பெரிய எழுத்தில் எழுதி வைக்கபபடடிருக்கிறது. விக்டோரியா ராணி தாமே சில பத்தும் குதிரைகளுக்கும பேர்கள் பொறுக்கியிட்டார். அந்தயமயாள் பிரியட வைத்த குதிரைகள் பல இப்போதும் இந்தப் பட டியில் இருக்கின்றன. இளவரசரின் குதிரைகள் 16-சாண் (Hand) உயரத்துக்குக் குறைச்ச லில்லை; இராஜன் குதிரைகள் 15-சாணுமிருக் கும், 16-சாணுமிருக்கும். இராஜன் உபயோகப படுத்தும குதிரைகளுக்கு 20 வயசு ஆய்ப்போய் விட்டால், இராஜரீக ஊர்க்கோலஙகளுக்கு உப யோகமில்லாமல் போய்விடும்; அப்போது அவை றைச் சுட்டுக் கொன்று போடுவது வழக்கம்; மேற்படிக் குதிரை வளர்க்கும் இடத்திலிருந்து புதியகுதிரைகள்அவற்றிற்குப்பதிலாய்க்கொண்டு வரப்படும். இளவரசரின் குதிரைகள் அப்படி யல்ல; அவை யுபயோக மில்லாமற்போனால் விற் கப்படும்.

## இராஜன் முடிசூட்டு வண்டிகள்.

இங்கே சாரட்டு வண்டிகள் நிறுத்தப்பட்டி ருக்கும் கூடங்கள் வெகு நேர்த்தியாய் இருக்கின

௨௫. முடிசூட்டின் போது இளவரசரும் இளவரசியாரும் சவாரிபோன வண்டியானது விக்டோரியாராணி ஒரு பிரபுவின் (Duke of York) கலியாணத்தின்போது உபயோகப் படுத்தினராம். இந்த வண்டியின் பளு 1½ பாரம் (Tons). அது செய்வித்து 50-வருஷமாயிற்று. அது ஓக் (Oak) என்னும் மரத்தால் செய்யப்பட் டிருக்கிறது. இராஜன் முடிசூட்டு வண்டிபோல வெகு நேர்த்தியாய்த் தங்கமுலாம் பூசியிருக்கிறது. ஆனால், மற்ற விஷயங்களில் இராஜன் முடிசூட்டு வண்டிக்கும் இந்த வண்டிக்கும் சம்பந்தமில்லை. இந்த இராஜன் முடிசூட்டு வண்டியைப் பார்த்தவர்கள் பாக்கியமே பாக்கியம்! இந்த வண்டி லண்டன்மாநகரத் தெருவழியாய்ப் பலதடவைபோயிருக்கிறது. அதன் நேர்த்தியும், அதன் மேன்மையும், அதன் ஜொலிப்பும், அதன் பெருமையும், அதன்ரூபமும். அதன் மகிமையும், அதன் படாடோபமும் இந்த லோகத்தில் ஒன்றுக்குமில்லை. ஆயினும், அதன் கிட்டப்போய்ப் பார்த்தால்தான் அதன் அழகும் அதன் ஆகாரமும் நமக்கு நன்றாய்த் தெரியும்; இந்தச் சவாரிவண்டி 4-பாரம் (Tons) எடையுள்ளது; 137-வருஷமாயிற்று; இத்தனை வருஷகாலமாயினும், வெகுநல்லஸ்திதியிலேயே சற்றேனும் கெடாமலே யிருக்கிறது; இது வெகு ஆச்சரியமாகப் பலர் எண்ணலாம். ஆனாலும், இது வருஷத்துக்கு இரண்டு அல்லது மூன்று தரம் வெளிக்கு உபயோகத்துக்கு வந்தால் அதிசயம். ஓக் (Oak) மரத்தால் செய்யப்பட்டுள்ளது. அந்த

பாதுகால் செய்யப்பட்டிருப்பதினால்தான் இவ்வளவு காலங் கெடாமல் உறுதியாய் இருக்கிறது. இந்த வண்டி III-வது ஜியார்ஜ் ராஜன் முடிசூட்டுக்குச் செய்யப்பட்டது. இதற்கு அப்போது 17,000 பவுன் செலவு செய்யப்பட்டது. வண்டியில் சித்திரங்கள் எழுதுவதொன்றிற்கே 9,000 பவுன் செலவு செய்யப்பட்டதாம். VII-வது எட்வர்ட்ராஜன் இந்த வண்டியில் முடிசூட்டின்போது ஏறினான், அப்போது இவரோடு 5-பேர் ஆங்கிலேய அரசர் இந்த வண்டியேறி முடிசூட்டிக்கப்போனதாகும்.



# உடன் கூட்டு

## இங்கிலாண்டின் இராஜன் பட்டப் பேர் பெருகிநின்ட வயணம்.

1-வது வில்லியம் வெற்றியாளன் (William I, the Conqueror) காலத்தில் "பாக்ஸ் ஆங்க்ளோரம்" (Box Anglorum) என்று ஆங்கிலேய அரசனுக்குப் பட்டப் பேர் இருந்தது. இது கி. பி. 1066-ம் வருஷம் நடந்தது.

பிறகு II-வது ஹென்றி ராஜனுக்கு "ஆங்கிலேய அரசன், அயர்லாண்டின் நாட்டாண்மைக்காரன் அக்விட்டானி, நார்மண்டி, இவற்றின் ட்யூக்" என்று கொஞ்சம் நீண்டது; ஏனென்றால், அந்தக் காலத்தில் இங்கிலாண்டினரசன் அயர்லாண்டையும் செயித்ததாகப் பேர் பண்ணியிருந்தான். அன்றி, வில்லியம் வெற்றியாளன் வழியாய்ப் பிராஞ்சுதேசத்தின் பாகங்களாகிய நார்மண்டியும் அக்விட்டானியும் இங்கிலாண்டின் அரசனுக்கு உரிமையாக ஏற்பட்டிருந்தன. இது கி. பி. 1154-ம் வருஷம் நடந்தது.

அதன் பிறகு, 1-வது எட்வர்ட் காலத்தில், முன் சொல்லபட்டதில் "நார்மண்டியின் ட்யூக்" என்றது விட்டுவிடப்பட்டது.

இன்னும் கொஞ்ச வருஷம் பொறுத்து, III-வது எட்வர்ட் காலத்தில் அந்தப் பட்டமானது "கடவுள்அருளால் ஆங்கிலேயம் பிராஞ்சு இவற்றுக்குஅரசன், அயர்லாண்டுக்கு நாட்டாண்மைக்காரன்" என்று மாற்றப்பட்டது; ஏனென்றால், இந்தஅரசன் காலத்தில் இங்கிலாண்டுக்குப் பக்கத்துத் தேசமாகிய பிராஞ்சுதேசம் யாவும் இங்கிலாண்டினரசனுக்குச் சேர்ந்து விட்டதாகப் பாத்தியதை கொண்டாடப்பட்டது. முன்னால் அப்படியன்று; நார்மண்டி, அக்விடேன் இவ்விரண்டு துண்டுகள் மாத்திரமே சேர்ந்திருந்தன. இது கி. பி. 1327-ம் வருஷம். இதுவரையில், பிரஞ்சு பாஷை போன்ற அந்நியபாஷையில் இங்கிலாண்டின் அரசர்களின் பட்டமெல்லாம் இருந்தது. கி. பி. 1558-ம் வருஷத்தில் பட்டத்துக்கு வந்த இராணி தன் முன்னோர்க்கு இருந்த அந்நிய பாஷைப் பட்டத்தை நீக்கிவிட்டுத் தன் சொந்த இங்கி

லீஷ்பாஷையிலேயே "இங்கிலாண்டு, பிரான்சு, அயர்லண்டு இவற்றிற்கு இராணி, மதத்தைக் காப்பவள்" என்று பட்டப் பேர் வைத்துக்கொண்டு ஒரு புது வழக்கம் உண்டுபண்ணினாள்.

இந்தம்மாளுக்குப்பின் அடுத்தப்படி (அடுத்த + அப்படி) வந்த 1-வது ஜேம்ஸ், மேற்படிப் பட்டத்துக்கு ஸ்காட்லாண்டின் அரசன் என்பதொன்றையும் சேர்த்துக் கொண்டான்; ஏனென்றால், இந்த அரசன் ஸ்காட்லாண்டுக்கும் கிரமப்படி VI-வது ஜேம்ஸ் என்ற அரசனாயிருந்தான்; அதாவது, ஸ்காட்லாண்டு அரசனே இங்கிலாண்டுக்கும் அரசனாய்வந்தான். ஆகவே ஸ்காட்லாண்டையும் தன் பட்டப்பேரில் கூட்டிக்கொண்டான்.

இந்தப்படி நடந்தபிறகு, சுமார் 160-வருஷம் கழிந்த பிறகு III-வது ஜியார்ஜ் என்ற அரசன் மேற்படிப் பட்டத்திலிருந்து "பிரான்சுக்கு அரசன்" என்ற பாகத்தைத் தன் பட்டத்தினின்றும் நீக்கிவிட்டான்; ஏனென்றால், அப்போது பிரான்சுக்குப் பிரத்தியேகமான ராஜன்வந்து விட்டான், இங்கிலாண்டுக்கும் அதற்கும் சம்பந்தம் கட்டோடே, அடியோடே நீங்கிவிட்டது.

இதற்குப்பிறகு பட்டப்பேரில் யாதொரு மாறுபாடும் நடக்கவில்லை. விக்டோரியா ராணியார் காலத்தில் "இங்கிலாண்டு, ஸ்காட்லாண்டு, அயர்லாண்டு இவற்றின் ராணி, மதத்தைக்காப்பவர் இந்தியாவின் ஒப்பைத் தலைமையார்" என்று ஆங்கிலேய அரசரின் பட்டப்பேர் ஒரு நிலைக்குவந்தது.

இங்கிலாண்டானது வரவர வெகு மண்ணைப் பிடித்த நாடாய் மாறிக்கொண்டு வருவதால் (Imperialistic) பட்டமும் பெருகிக்கொண்டே வருகிறது. VII-வது எட்வர்ட் காலத்தில், அதாவது இந்தத் தருணத்தில் ஆங்கிலேயஅரசரின்பட்டப்பேர்: கடவுளருளால், பெரும் பிரிடனும் அயர்லாண்டும் கூடிய அரசுக்கும் கடலுக்கப்புறத்துள்ள பிரிடிஷ் நாடுகளுக்கும் ஏ-வது எட்வர்ட் அரசர், மதத்தைக் காப்பவர், இந்தியாவின் ஒற்றைத் தலைமையார் (Emperor of India) என்று ஒரு சாதியாய் நிலைக்கு வந்திருக்கிறது.

